7. நெய் முட்டாமை
8. அட்டுவதாக வ-
9. ச்சேன் இத்தர்ம-
10. ம் ரக்ஷிப்பார்
11. ஸ்ரீ பாதம் எண்
12. தலை மேலன
13. இத்தம்மம்
14. அழிச்சான் கெ-
15. ங்கை இடை குமரி
16. இடை பட்ட
17. வது படுவான்

8:2

**இடம்:** மேலது, உடைந்த பலகைக்கல்

**காலம்:** *10ஆம் நூ.*

**செய்தி:** பாடல் வரிக் கல்வெட்டு. நென்மலி கிழான், தளி பற்றிய குறிப்பு.



1. நென்-
2. மலி கிழான்
3. அமுதக் க-
4. டல் இரு-
5. க்கும் என்-
6. பது இத்தளி-
7. க்கு போக திரு
8. வழி செ..........

8:3

**இடம்:** மேலது, உடைந்த பலகைக்கல் (இரு பக்கங்களிலும்)

**காலம்:** *10ஆம் நூ.*

**செய்தி:** பாடல் வரிக் கல்வெட்டு. கொடையின் சிறப்பாக இருக்கலாம்.

**பக்கம்-1**

1. பொரு மா
2. மறைப்பின்
3. யி நிழல் மா

4. ந் திருந்த பு
5. ண்ணிய

**பக்கம் - 2**

1. கை நானில-
2. ம் துன்கை செ-
3. ய்தான் செய்தே
4. யள்

**8:4**

**இடம்:** *மேலது, உடைந்த பலகைக்கல் (இரு பக்கங்களிலும்)*

**காலம்:** *10 ஆம் நூ.*

**செய்தி:** *பாடல் வரிக் கல்வெட்டு. வாதவப்பெரும்பள்ளி எடுத்தமை.*

**பக்கம் - 1**

1. க் காப்பு புகழ்
2. யி புது மாயி-
3. லங்கை தன்-
4. னில் மேத-
5. கையா வாத -
6. பெரும் -
7. பள்ளி எடுத்த -
8. து விளக்கி -
9. நோக் திரா பெ -
10. ரும் ம திருச்சுற்று
11. நால் நிதி
12. மலி

**பக்கம் - 2**

1. ......யின் வென்
2. .....க
3. க .....ழான் செ..
4. ய்த $த_1$ மம்
5. ஸாதன மெய்

# 9. சித்தரேவு செக்கு கல்வெட்டு

**சொ.சாந்தலிங்கம்,** மதுரை
**ஆர்.உதயகுமார்,** மதுரை
**த.பாண்டிஸ்வரன்,** போடிநாயக்கனூர்

**இடம்:** திண்டுக்கல் மாவட்டம், ஆத்தூர் வட்டம், சித்தரேவு

**காலம்:** *10ஆம் நூ. வட்டெழுத்து*

**செய்தி:** வென்பி நாட்டு குறண்டியைச் சார்ந்த கோமன் அருளன் வைத்த செக்கு இதிலிந்து துடவு அளவுள்ள எண்ணை யை மன்றத்து மாறாயனுக்கு வழங்க மறுப்பு கூறுபவர் பாவத்துள் படுவர் என்று குறிக்கப்பட்டு ள்ளது.

1. **ஸ்ரீ வென்பி நாட்டுக் குறண்டி கோமன் அருளன்**
2. **இடுவிச்ச செக்கு இதில் துட -**
3. **வெண்ணை மன்றத்து மாராயனுக்கு அட்டுக வேண்டா வென்பான்**
4. **இப்பாவ[த்*]து கொழ்க**



# 10. இருக்கந்துறை சிவன் கோயில் கல்வெட்டுகள்

**சொ.சாந்தலிங்கம்,**மதுரை
**மு.ஆறுமுகம்,**இராஜபாளையம்
**ஆர்.உதயகுமார்,**மதுரை

## 10:1

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டம்,ராதாபுரம் வட்டம், சிவன் கோவில்,கருவறை வடபுற அதிட்டான முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *சடையன் மாறன்,10ஆம் நூ, வட்டெழுத்து*

**செய்தி:** *சிதைந்த கல்வெட்டு.பெருநிரவி ஊர்ப்பெயர் உள்ளது.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடய மாறர்க்கு யாண்டு...**
2. **...நிரந்த பெருநிரவியோம் ந[த்த]ராய்க்க...**
3. **......**
4. **......**

## 10:2

**இடம்:** *மேற்படி, அர்த்த மண்டப தென்புற அதிட்டான முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *சோழன் தலை கொண்ட வீரபாண்டியன். யா.15+4 = பொ.ஆ.965. வட்டெழுத்து*

**செய்தி:** *முழுமையில்லை. இருக்கந்துறை பெருந்திருக்கோயில் குறிக்கப்பட்டுள்ளது*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ சோழன்தலை கொண்ட வீரபாண்டியற்கு**
2. **யாண்டு பதினைஞ்சு இதனெதிர் நான்-**
3. **கு இவ்வாண்டு புறத்தாய நாட்டு இ-**
4. **ருக்கந்துறை பெருந்திருக்கோயில்**
5. **இறைவர்க்கு இவ்வூர் அவ்வை கரிமுத்த...**

## 10:3

**இடம்:** *மேலது,கருவறை வலதுபுற நிலைக்கால்*

**காலம்:** *9–10ஆம் நூ, வட்டெழுத்து*

**செய்தி:** *புடவை வீதியர் நிலைக்கால் கொடை அளித்தமை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ இரு-**
2. **க்கந்துறை பு-**
3. **டவை வீதியர்**
4. **நாட்டுவித்த நி-**
5. **[லை]**

## 10:4

**இடம்:** *மேற்படி,கருவறை தென்புற அதிட்டானமுப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *10ஆம் நூ, வட்டெழுத்து*

**செய்தி:** *நொந்தா விளக்குக் கொடை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ இருக்கந்துறை மாதேவர்க்கு கருங்குளச் சுற்றுக் க-**
2. **ருங்குளத்துக் கோவன் செம்பனைச் சார்த்தி இந்நாட்டு பிச்சாகுடி குன்ற-**
3. **ன் சடையன் வைத்த திருநொந்தா விளக்கு ஒன்று ஆடு அய்ம்பது.**

## 10:5

**இடம்:** *மேலது, கருவறை மேற்கு அதிட்டானம் ஜகதி*

**காலம்:** *10ஆம் நூ, வட்டெழுத்து*

**செய்தி:** *நொந்தா விளக்கு வைத்தமை. ஐ என்ற எழுத்து திருநாதர்குன்று எழுத்துப்போல் இங்குள்ள கல்வெட்டு கள் சிலவற்றில் உள்ளது.*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ இப்பெருந்திருக்கோவில் தேவற்கு**
2. **இருக்கந்துறை அப்பை [க] லாரியன் வீரன் திரு-**

3. நொந்தா விளக்கு எரிய வச்ச விளக்கு ஒன்-
4. று ஆடு ஐம்பது

**10:6**

**இடம்:** *மேலது*

**காலம்:** *10ஆம் நூ, வட்டெழுத்து*

**செய்தி:** *நொந்தா விளக்கு வைக்க ஆடு கொடை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ இப்பெருந்திருக்கோயிலில் தேவற்கு
2. இருக்கந்துறை அப்பை காரி சீயன் வச்சவி-
3. ள்ளக் கொன்று ஆடு [ஐ] ம்பது இவனு சித்திரகோ-
4. டன் துக்கி விளக்கெரிய விட்ட ஆடு இருபத்த-
5. ஞ்சு

**10:7**

**இடம்:** *மேலது,கருவறை மேற்குப்புற அதிட்டான முப்பட்டைக்குமுதம்*

**காலம்:** *இராசராசன்.யா.29=பொ.ஆ.1014, வட்டெழுத்து.*

**செய்தி:** *எட்டு காசுகள் கொடை அளித்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ இரா்ராஜதேவர்க்கு யாண்டு இருபத்தொன்பது
2. இருக்கந்துறை மாதேவர்க்கு இவ்வூர் சாலிய...
3. தேவதானம் இராத்தி சிவபிர ..க்கு வைச்ச காசு இ-
4. க்காசு எட்டும் இத்திருக்கோயிலுடையோமும்
5. ன் சபை....

**10:8**

**இடம்:** *மேலது, வடபுற அதிட்டான முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *முதலாம் இராசேந்திர சோழன். யா.22 = பொ.ஆ. 1034*

**செய்தி:** *முற்றுப்பெறாத கல்வெட்டு. கோயில் பெயரும் ஊர்ப்பெயரும் மாறியுள்ளது*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பூர்வ தேசமும் கங்கையுங் கடாரமுங். . . .

2. கோப்பரகேசரி வந்மரான உடையார் ஸ்ரீராஜேந்த்3ர சோழ தேவற்[கு]

3. யாண்டு 22 ஆவது இருக்கந்துறையான சிங்களாந்தக புரத்-

4. து தேவர் தும்புரு நாரத ஈஸ்வரமுடையார்க்கு குட...

5. . . . . . . . . . . .

## 10:9

**இடம்:** *மேலது, கருவறை தெற்கு அதிட்டானக் குமுதம்.*

**காலம்:** *பரகேசரி (முதலாம் இராசேந்திரன்) யா.31= பொ.ஆ.1043, வட்டெழுத்து*

**செய்தி:** *முன்மண்டபம் கட்டியமை; திருவிளக்குக்கு ஆடு 25 கொடை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி பன்மக்கு யாண்டு முப்பத்தொன்[றா]வது

2. இவ்வாண்டு புறத்தாய நாட்டிருக்கந்துறை மாதேவற்கு இவ்-

3. வூர் அவ்வைப் பிராந்தனேன் வைச்ச திருவிளக்கு ஒன்று ஆடு இரு-

4. பத்தஞ்சு இவன்தான் எடுப்பிச்ச இமும்மண்டபத்துக்கு திருவிள-

5. க்கு எரியவிட்ட ஆடு இருபத்தஞ்சு ஆடு ஆக அம்பது-

6. ம் ஐஞ்சாதான் சூச்சியனும் இக்...

7. டெட்டுக்கும் இத்திருவமிர்து நியத...

8. சமைப்பதாகவும் முட்டில் முட்டிரட்டி...

9. இத்திருவமிது செமைப்பதர்க்கு கை...

10. ன் சூச்சியனு முன் நின்றோமே செமை...

## 10:10

**இடம்:** *மேலது. வடபுற அதிட்டனம்.*

**காலம்:** *பரகேசரி சோழன்,யா.36=பொ.ஆ. 1048,வட்டெழுத்து*

**செய்தி:** *திருவிளக்குக் கொடை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி பன்மற்கு யாண்டு முப்பத்தா-
2. று இவ்வாண்டு புறத்தாய நாட்டிருக்கந்துறை இவ்-
3. வூர் பெருந்திருக்கோயிலுக்கு இவ்வூரன் அப்பைகறைய
4. படாலகன் வைத்த திருவிளக்கு ஒன்று ஆடு இரு-
5. பத்தஞ்சு.

## 10:11

**இடம்:** *மேற்படி, முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *முதலாம் ராசாதிராசன், (பொ.ஆ.1018 - 1054)*

**செய்தி:** *மெய்க்கீர்த்திப்பகுதி. திங்களேர்தரு எனத் தொடங்கு கிறது. நில அளவுகோல் குறிக்கப்பட்டுள்ளது*

1. நிலம் அளவு கோல் + ஸ்வஸ்தி ஸ்ரீ திங்களேர்தரு... குடை....
2. ....திண்டிறல் விருதர் விக்கியும் விசையாதித்தனும்
3. ....த்தி கோ ராஜகேசரிபன்மரான உடையார்ஸ்ரீராஜாதிராச...
4. . ன .. காசு இக்காசு ஐந்நூ...
5. ... நிசத.. நிவந்த.. முட்டாமை..இவனை..லமுடையான்.

## 10:12

**இடம்:** *மேற்படி. கருவறை. வடபுற முப்பட்டை குமுதம்*

**காலம்:** *முதலாம் இராசாதிராசன், (பொ.ஆ. 1018 - 1054)*

**செய்தி:** *மெய்க்கீர்த்திப் பகுதியில் ஒரு துண்டு.*

1. ... தலைப் பொருகளத்தறிந்து..வீரகேரளனை..
2. . கொள்ளிப்பாக்கை யொள்ளெரி மடுப்பித்தெ...
3. ... செந்தில் படாரனும் மாயிலெட்டி வன்கனு...

## 10:13

**இடம்:** *மேலது. தென்புற அதிட்டானம்.*

**காலம்:** *முதலாம் இராசாதிராசன்.யா.31=பொ.ஆ.1049*

**செய்தி:** *பாடல். நொந்தாவிளக்குக் கொடை.*

1. விடைத்தவறில்..னே..சாமதனடக்குஞ்செங்கோ...

2. ...யற்கு யாண்டொருமுப்பத்து மூன்றில் தொடுஇடத்..

3. ...கவீரன் பயந்த மடந்தை சுரிகுழலிபூனங்கை...

4. ளக்கு அடைத்தன வாடிருபத்தைஞ்சு வையந்தொ..

5. ...க்குக்குத் திருநுந்தாவிளக்கவனேய் இப்பமகிடை....

10:14

**இடம்:** மேலது, கருவறை. இடப்புற நிலைக்கால்

**காலம்:** முதலாம் குலோத்துங்கன்,யா.14=பொ.ஆ.1084

**செய்தி:** இவ்வூர் நகரத்தார் கூத்தாடுந் தேவர்குளம் வழங்கியமை. இன்று கொத்தகுளம் என்று இக்குளம் வழங்கப்படுகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ புகள்
2. மாது விளங்க ஜயமா-
3. து விரும்ப நிலமகள்வளர
4. மலர்மகள் புணர உரி-
5. மையில் சிறந்த மணிமு-
6. டிசூடி மீனவர் நிலை
7. கெட வில்லவர் குலை
8. தர விக்கலர் சிங்களர் மே-
9. ல் கடல்பாய திக்கனைத்
10. துந்தன் சக்கரநடாத்தி
11. விஷையாபிஷேகம் முறைமை-
12. யில். வீரஸிங் ரஹாசனத்து
13. புவனமுழுதுடை-
14. யாளொடு வீற்றிரு
15. ந்தருளிய கோவிரா-
16. சகேசரி பன்மரானசக்-
17. கரவத்திகள் குலோத்-
18. துங்கசோள தேவர்க்கு யா-

19. ண்டு 14 வது ரா-

20. சராசபாண்டி நாட்டு உத்-

21. தம சோழ வளநாட்டு பு-

22. றத்தாய நாட்டு இருக்கந்து

23. றையான சிங்களாந்த-

24. கபுரத்தில் நகரத்தோ-

25. ம் எங்களூர் மேல்பி-

26. டாகை பட்டந [சுவாமி]

27. குளம் உடையார் தும்

28. புருநாரத ஈச்சுரம் உடை-

29. யார் கோயிலில் கூத்-

30. தாடுந்தேவர் குள-

31. த்து வடக்கெல்லை

32. இக்குள உள்...

33. . . . . . . .

10:15

**இடம்:** *மேற்படி மகா மண்டபம் இடது வரிசைத் தூண்.*

**காலம்:** *முதலாம் குலோத்துங்கன், யா.14 =பொ.ஆ 1084.*

**செய்தி:** *ராதாபுரத்து நகரத்தார் இருக்கந்துறை சிவன் கோவிலுக்கு மாணக்குளம் என்னும் குளத்தைத் தேவதானமாகக் கொடுத்தமை*

1. ...திக்கனைத்துந்தன் சக்கரநடாத்தி விசையாபிஷேகம். . . .

2. வீரஸிங்ஹாஸநத்து புவனமுழுதுடையாளோடு வீற்றிருந்தருளிய..

3. கோவிராஜகேசரி பற்மரான சக்கரவத்திகள்

4. குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 14 ஆவது

5. உத்தம சோழவளநாட்டு புறத்தாய நாட்டுப் பூசங்குடியான ராச

6. ராசபுரத்து நகரத்தோம் எங்களூர் மாணக்குளம்

7. இருக்கந்துறையான சிங்களாந்தகபுரத்து தும்பு-

8. ரு நாரத ஈஸ்வரமுடையாற்கு

9. தேவதானமாக முன்-

10. னாள் உத3கபூர்வம் பண்ணிக் குடுத்தமையில்

11. ...சந்திராதிச்சவல் இத்தேவதானம்...

12. நிறை...பிரமாணம் பண்ணி உத3கபூர்வம் பண்ணி

13. குடுத்தோம் பூசங்குடியான ராசராசபுரத்து நகரத்தோம் இ-

14. ருக்கந்துறையான சிங்களாந்தக புரத்து தும்புருநாரத ஈஸ்வர முடையார்க்கு

## 10:16

**இடம்:** *மேலது, கருவறை. மேற்கு அதிட்டான முப்பட்டைக் குமுதம்.*

**காலம்:** *முதலாம் குலோத்துங்கன்,யா. 21= பொ.ஆ.1091*

**செய்தி:** *செங்கொடி நங்கை எனும் பெண்வைத்த கொடை கல்வெட்டு முற்றுப் பெறவில்லை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ புகழ்மாதுவிளங்க ஜயமாது விரும்ப நிலமகள்வ ளரமலர்மகள் புணர உரிமையிற்சிற-

2. ந்த மணிமுடி சூடி மீனவர் நிலை கெடவில்லவர் குலைதரவிக்கலர் சிங்களர் மேல் கடல் பாய திக்கனைத்துந்

3. தன் சக்கர நடாத்தி வினஜயாஷிபஷேகம் பண்ணி வீரஸிரஹாஸனத்து புவனமுழுதுடையாரொடும்

4. வீற்றிருந்தருளிய சக்கரவத்தி ஸ்ரீ கொலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 21 புறத்தாய நாட்டு இருக்கந்துறை-

5. யான சிங்களாந்தக புரத்து தும்புரு நாரத ஈஸ்வரமுடையாற்கு இவ்வூர் சேம்தன் செங்கொடி நங்கை வை...

## 10: 17

**இடம்:** *அதே ஊர். சிவன் கோயில். பல துண்டு கல்வெட்டுகள். அதிட்டானப் பகுதி*

**காலம்:** *10-11ஆம் நூ*

**செய்தி:** *முழுமையான செய்திகள் இல்லை.*

துண்டு-1

1. ....லையல் பில்லையூ...
2. ...திறைவனலங்கலமுட....
3. ...ணியன்மாராயனுஞ்...

துண்டு-2

1. ..செவெங்விமாடத்துக்கடவூர்கிழராமகுடமு..
2. ..மடைமுழுவதுமிழந்துங்கடலீழமுங்...
3. ..மடார்நிழற்றியும் உள்ளிட்ட சிஙகளாந்தக..
4. ..டில் எங்களூர்க்குக் கோயிற் தமராயர்.

துண்டு -3

1. ..யாண்டு இருபத்து..
2. ..றைமாதேவர்க்கு..

துண்டு -4

1 ...யான் கங்கைகொண்ட சோழநல்லூர் குட...
2. னையும் உற்றர்குணம் பணியாச் சிலையும் சிர...
3. ...வைத்த திருநுந்தாவிளக்கு + (ஒன்று*) வெள்...
4. .இ படைத்தலைவன் செங்கோடன் தேவனேன்
5. . . . . . . . . . . . .

10:18

**இடம்:** *மேலது ஊர், நாலாயிரத்தம்மன் கோயில் முன்மண்ட பத்தூண்*

**காலம்:** *19-20ஆம் நூ.*

**செய்தி:** *முன்மண்டபம் கட்டியமை*

1. பார்த்திப வ-
2. ருசம் சூன்
3. மாதம் அற்பசி
4. 18 தேதி சுக்கிரவா-
5. ரமும் பவர்ண[மி]-
6. யும் கூடிய சுப

7. தினத்தில்
8. அரியநாய-
9. கிபுரம் மயி-
10. லப்ப முதலி-
11. யாரவர்கள்
12. குமாரன்
13. சிவக்கொ-
14. ளுந்து முத-
15. லியார-
16. வர்கள்
17. உபையம்
18. சதாசேவை

# 11. சின்னாரிபட்டி ஐயனார் சிற்பக் கல்வெட்டு

**சு.இரவிக்குமார்,**அவிநாசி
**க.பொன்னுச்சாமி,**பல்லடம்

**இடம்:** திருப்பூர் - காங்கேயம் சாலை படியூரில் இருந்து தெற்க்கே 3கிமீ தொலைவிலுள்ள சின்னாரிபட்டி கம்பத்தீஸ்வரர் கோவில். ஐய்யனார் சிற்பக்கல்லின் பின்பக்கம்.

**காலம்:** 10ஆம் நூ

**செய்தி:** இராசிங்க பல்ல[வ]ரையர் அலுவலர் காலத்தில் கோநேன் என்ற வேட்கோவர் செய்த சிலை. 100 செ.மீ அகலமும், 85 செ.மீ உயரமும் உடையது. முன்பக்கம் பீடத்தில் ஐயனார் இடதுகாலைக் குத்திட்டு தன் இடது கையை அக்காலின் மீது இருத்தி, வலது காலைத் தொங்கவிட்டும் வலது கையில் செண்டு ஆயுதம் பிடித்தபடியும் உத்குடிகாசனத்தில் உள்ளார். தலை ஜடா மண்டல அலங்காரத்தில் உள்ளது.

1. **இராசிங்க பல்ல[வ]ரை**
2. **யந் ஏறின போது கோ -**
3. **நேன் வேட்கோ[வ]...**



# 12. குட்டகம் மொக்கணீசுவரர் கோயில் வட்டெழுத்துக் கல்வெட்டு

**சி.வீரராகவன்**,விழுப்புரம்.
**து.சுந்தரம்**,கோவை.
**ஜெயசங்கர்**,அவிநாசி.

**இடம்:** *திருப்பூர் மாவட்டம் அவிநாசி வட்டம் (சேவூர்) குட்டகம் மொக்கணீசுவரர் கோயில் வளாகத்தில் நடப்பட்டுள்ள கற்பலகை.*

**காலம்:** *கொங்குச்சோழன் கலிமூர்க்க பராக்கிரம சோழன். யா. 5=பொ.ஆ. 1009. வட்டெழுத்து.*

**செய்தி:** *வடபரிசார நாட்டைச் சேர்ந்த குடவோடான இராசவிச்சாதிர நல்லூரில் வாழும் முள்ளி குலத்தைச் சேர்ந்த வெள்ளாளன் விச்சாதிரனின் மனைக் கிழத்தி எறுளங்கோதை என்பாள் கோயில் கட்டியமை.*

1. [ர பதி] மூர்க்க ஸ்ரீபராக்ரம சோழ[தே]-
2. வர்க்குத் திருவெழுத்திட்டுச் செ-
3. ங்கோலோச்சி வெள்ளி வெண்குடை மி-
4. ளிரவேந்தி ஆறில் ஒன்று கொ-
5. ண்டல்லவை கடிந்து நாடு வள-
6. ம் படுத்து நை குடியோம்-
7. பிக் கோவீற்றிருந்து குடி
8. புறங்காத்துப் பெற்றகுழ-
9. விக்குற்ற நற்றாய்போல் செ-
10. ல்லாநின்ற திருநாள் யாண்டு
11. அஞ்சாவதில் இத்திருக்கோ-
12. யில்லெடுப்பிச்சேந் வட-
13. பரிசாரத்தில் குடவோ-
14. டாந இராசவிச்சாதிர நல்-

15. லூரிருந்து வாழும் வெள்-

16. ளாளந் முள்ளிகளில் கோ-

17. வன் விச்சாதிரந் மநை-

18. க்கிழத்தி எறுளங்கோ-

19. தையேன் என் நி

20. ............ ந் தாந்



# 13. கொங்குப் பகுதியில் புதிய கல்வெட்டுகள்

து.சுந்தரம்,கோவை.

## 13:1

**இடம்:** திருப்பூர் மாவட்டம் உடுமலை-மூணாறு சாலையில் சம்பக்காடு என்னும் கேரளப்பகுதியை அடுத்து வனப்பகுதியில் தமிழகப் பகுதியில் உள்ள தளிஞ்சி மலைக்கிராமத்திலுள்ள தனிக்கற்கள். இவ்வூரை திரு. குழந்தைவேலன் முழுமையாக ஆய்வு செய்து தென்மொழியில் இக்கல்வெட்டைப் பதிப்பித்து உள்ளார். ஒரு சில பாடவேற்றுமை உள்ளமையால் இக்கல்வெட்டு இங்கு பதிப்பிக்கப்படுகிறது (ப.ஆ).

**காலம்:** வீரநாராயணன் அதிசய சோழன், யா. 29= பொ.ஆ. 1011

**செய்தி:** தழிஞ்சியூர் உடையார் அதிசெய சோழ ஈஸ்வர ஆலயத்திற்கு இருபது கலம் நெல் தழிஞ்சி ஊரவர் ஒற்றியாக பொன் பெற்றுக் கொடுத்தமை.

**தூண்டு -1**

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ கோவீரநாராயண அ-**
2. **திஜெயசோழ தேவக்கு திரு-**
3. **வெழுத்திட்டு செல்லானிந்-**
4. **(ற்) ற யாண்டு பத்தொன்பதாவ-**
5. **து மங்கலத்து . . . .ற் தழிஞ்சி**
6. **யூர் உடையார் அதிசெய**
7. **சோழ இ[ச்வரர்]க்கு ஒற்றி வ-**
8. **ச்சுக் குடுத்த பொந்மாடை**
9. **....... ட்டும்மு......கு.**
10. **....யணிமுகைமுவறரியு-**
11. **ழவுக்கு வச்சு குடுத்தோம் உ-**
12. **டையார் தழிஞ்சியூர் இ-**
13. **ச்வரற்கு சந்தி**

துண்டு -2

1. . . . . . . . .
2. . க்குமவர் கவுணிகர்
3. ஒலோக மாணிக்க...
4. ரைநென் அன்கும. . .
5. டமும் கு . . . .நெ . .தே-
6. வற்கு பளிகற மூதரை-
7. யநே எந்வயல் பகந-
8. றையந் ஒற்றி வச்சு
9. இருபதுங்கல நெ-
10. ல் கொண்டேந் சாந்தம
11. . . .வ நான்கும் சிவந்
12. . . . . .

## 13:2

**இடம்:** *கோவை மாவட்டம் கிணத்துக்கடவு வட்டம் - மன்றாம்பாளையம் மாரியம்மன் கோயில்.*

**காலம்:** *கலியுக ஆண்டு 4941=பொ.ஆ. 1840*

**செய்தி:** *செம்பகுல கோத்திரத்தைச்சேர்ந்த நல்லிக்கவுண்டன் பந்தல் தரைக்கான பாக்கல் (பாவுகல்) கொடை அளித்ததமை. இறுதியில் உள்ள வரிகள் சிதைந்து காணப்படுவதால் கொடை விவரம் தெளிவில்லை..*

1. கலியுக ச -
2. கார்த்தம்
3. 4941
4. வரு. மேல்-
5. ச்செல்லா
6. நின்ற சார்-
7. விகிரி வரு.

8. சித்திரை
9. 10 தேதி
10. சித்தூற்குச்-
11. சொந்தம்
12. சாமன்ன்-
13. மய்யம்பாளை-
14. யத்திலேயி-
15. ருக்கும் பற-
16. ஞ்சேர்வலி
17. செம்பகுல-
18. கோத்திர-
19. த்தில்செ-
20. ல்லிகவு-
21. ண்டன் ம-
22. கன் நஞ்ச-
23. ப்பகவுண்ட
24. ன் மகன்
25. நல்லிக்க-
26. வுண்டன்
27. மாரியம்ம-
28. ன் கோவி-
29. ல் முன்பாக
30. பந்தல்கல்
31. [பொடிவைத்]
32. த சதா [சேர்]
33. வை

## 13:3

**இடம்:** *கோவைக்கருகில் பெரிய குயிலி சிற்றூரில் கருப்பராயன் கன்னிமார் கோயில் நிலத்தில் உள்ள கல்.*

**காலம்:** *13-14-ஆம் நூ.*

**செய்தி:** *உடைந்த கல்வெட்டு. அடிப்பீடமாக வைக்கப்பட்டுள்ளது. வீரநாராயணவதி குறிக்கப்பட்டுள்ளது.*

1 **[வீ ர நா] ரா ய ண வ தி**

2 **க்கு [அ]தி ரா ச தி ரா ச [ந்]**

3. . . . . . .

## 13:4

**இடம்:** *மேற்படி, ஆதி குயிலியம்மன் கோயில் தூரி (ஊஞ்சல்).*

**காலம்:** *1922*

**செய்தி:** *ஆதி குயிலியம்மன் கோயிலுக்கு கண்ணபாளையம் ஊரைச் சேர்ந்த வி.ரெங்கபோயன் என்பவர் ஊஞ்சல் அமைத்துக் கொடுத்தமை.*

1. **1922**
2. **ஆடி**
3. **28 தே-**
4. **குயி-**
5. **லாத்த-**
6. **ளுக்கு**
7. **கண்-**
8. **ணப்-**
9. **பாளை**
10. **யம்**
11. **வி.**
12. **ரெங்-**
13. **கபோ-**
14. **யன்**

**13:5**

**இடம்:** *மேற்படி மாவட்டம், கோவில்பாளையம் கவைய காளியம்மன் கோயில் வளாகத் தரையில் கிடக்கும் நிலைக்கால் .*

**காலம்:** *17ஆம் நூ.*

**செய்தி:** *கவையம்புத்தூரில் இருந்த வெள்ளாளரில் பிள்ளந்தைக் குலத்தைச் சேர்ந்த இராக்குதப்பெருமாள் என்னும் பிறவிக்கு நல்லார் என்பவர் கவையகாளியம்மை கோயிலுக்கு முன்மண்டபம் கட்டியமை.*

1. **ஷம் வைகாசி**
2. **மீ 20 உ நாலூ-**
3. **ற்பற்று நா -**
4. **ட்டுக்கவை-**
5. **யம்புத்தூரி-**
6. **ல் வெள்ளா-**
7. **ழர் பிள்ளந்-**
8. **தைகளில் இ-**
9. **ராக்குதப்பெ-**
10. **ருமாள் பிற-**
11. **விக்கு நல்லா-**
12. **ர் கவையகா-**
13. **ளியம்மை-**
14. **கோயில் முன்**
15. **மண்டபம்**
16. **கட் . . . .**
17. **- 21**

**13:6**

**இடம்:** *மேற்படி மாவட்டம், அன்னூர் அருகில் உள்ள தாசபாளையம் அப்பச்சிமார் கோயில் வாசலில் உள்ள பலகைக் கல்*

**காலம்:** *ருத்ரோத்காரி, பங்குனி.= பொ.ஆ 1924, மார்ச்சு.*

**செய்தி:** *தாசபாளையத்தைச் சேர்ந்த பழநித்தேவன் என்பவரது மகன் குட்டித்தேவன் என்பவர் அப்பிச்சி ஆண்டவனுக்கு மடப்பள்ளி கட்டிவைத்தமை.*

1. **ருத்துரோகாரி வருஷ -**
2. **ம் பங்குனி மீ 5 தேதி**
3. **தாசா பாளை-**
4. **யத்துலே யி-**
5. **ருக்கும் அப்பிச்-**
6. **சி ஆண்டவனுக்கு**
7. **மேற்படி யூருலெ யிருக்கும் ப-**
8. **ழனித்தேவன் மகன்**
9. **குட்டித்தேவன்**
10. **தரும மடப்பள்ளி**
11. **கட்டி வச்சது உ-**
12. **பயம்**

**13:7**

**இடம்:** *திருப்பூர் மாவட்டம் அவிநாசி வட்டம் - நடுவச்சேரி சிவளாபுரியம்மன்கோவில் கதவில் பதிக்கப்பட்ட பித்தளைத் தகடு.*

**காலம்:** *கலியுகம்,4993, கர வருடம் =பொ.ஆ.1891. ஏப்ரல்,13.*

**செய்தி:** *நடுவச்சேரி செவளாபுரி அம்மனுக்கு முன் கொரட்டு வாசல் நடைமண்டபம், கதவு ஆகியவற்றைக் கருக்கம்பாளையத்தில் இருக்கும் பெரியாயிபாளையம் சாமிசெட்டியார் குமாரர் நஞ்சப்ப செட்டியார் செய்தமை.*

1. **சிவமயம்**
2. **செவளாபுரி அம்மன் துனை**
3. **கலியுக சகாற்தம் வருஷம் 4993 செல்லாநின்ற கர வரு. சித்தி-**
4. **ரை மாசம் 2 தேதி சோமவாரமும் மிருகசீருஷ நட்சேத்திரமும் கூடிய சுபதி-**

5. னத்தில் நடுவச்சேரி செவளாபுரி அம்மனுக்கு முன் கொரட்டுவாசல் நடை-

6. மண்டபமும் யிந்தக்கதவும் கருக்கம்பாளையத்தில் யிருக்கும் பெரியாயி-

7. பாளையம் சாமிசெட்டியாற் குமாரற் நஞ்சப்பசெட்டியாற் செய்துவை-

8. ய்த்த உபையோகம் கருக்கம்பாளையம்

9. 1891 வரு. யேப்பிரல் மீ 13 உ பெ.ச. நஞ்சப்ப

10. செட்டியாற்

# 14. திருவிசநல்லூர் தேவராஜ அய்யனார் கோயில் கல்வெட்டு

ஆ.ராஜா,தஞ்சாவூர்

**இடம்:** *தஞ்சாவூர் மாவட்டம்,, திருவிடைமருதூர் வட்டம், தேவராஜ அய்யனார் கோயிலில் வடக்குப்புற நிலைக்கால்*

**காலம்:** *11ஆம் நூ.*

**செய்தி:** *இத்திருநிலைக்கால் கோமாறன் என்று உள்ளது.*

**1. ஸ்வஸ்தி ஸ்ரீ**

**2. இத்திரு நிலைக் [கா]-**

**3. ல் கொமாறாயன்**

**4. . . தன் . இந்த**

# 15. திருவிடையார்ப்பட்டி, மறமடக்கி கல்வெட்டுகள்

**பா.மாரியப்பன்,** அரிமளம்

## 15:1

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், ஆலங்குடி வட்டம், தென்வெள்ளாற்று வடகடையில் திருவிடையார்ப்பட்டி சிவன் கோவிலின் நுழைவு வாயில் வடசுவர்

**காலம்:** *11 நூ.*

**செய்தி:** திருவிநாச்சியாருக்கு விட்ட நிலம் பற்றிய செய்தி

1. **[யா]ண்டு பாலைக்குடை-**
2. **யாந வேளாந்**
3. **திருவிந் நாச்சியாற்-**
4. **கு விட்ட நிலத்தில் மு-**
5. **தல் கொ-**
6. **ண்டு**
7. **செய்தன**

## 15:2

**இடம்:** மேற்படி மாவட்டம், திருமயம் வட்டம், மறமடக்கி சிவன் கோயிலில் உள்ள துண்டுக் கல்வெட்டு

**காலம்:** *13 நூ.*

**செய்தி:** ஆசிரியம் கொடுத்தமை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ மறம-**
2. **டக்கி ஊர் உடை-**
3. **யார் திருநெல்-**
4. **வேலி உடையார்**
5. **ஆசிரியம்**

# 16. பேட்டைவாய்த்தலை சிவன் கோயில் கல்வெட்டுகள்

**எ.சுப்பராயலு,** கோவை
**அ.அப்துல் மஜீத்,** சென்னை

**16:1**

**இடம்:** திருச்சிராப்பள்ளி மாவட்டம், குளித்தலை வட்டம் பேட்டைவாய்த்தலை மத்தியார்ஜுனேஸ்வரன் கோயில் மகா மண்டபக் கிழக்கு நோக்கிய வலச்சுவர்

**காலம்:** முதலாம் இராஜேந்திரன், யா 7=பொ.ஆ.1019.

**செய்தி:** ஊரில் வணிகத்தின்பொழுது அளக்கப்படும் அளவுகளுக்கும் வாய்க்காலுக்காகப் பெறப்படும் வரிகளிலிருந்து மதுராந்தக ஈசுவரமுடையார் கோயிலின் திருப்பணிகளுக்கு ஐந்து வேலி நிலம் வாங்கி அளிக்கப்பட்ட அரசாணைச் செய்தி.

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி பந்மராந உடையார் இராசேந்திர சோழ தே3வற்கு யாண்டு எ வது கோநேரிம்-**
2. **மேல் கொண்டான் கேரளாந்தக வளநாட்டு றாஜந்த்ர சோழப் பேட்டையில் செட்டிகளுக்கு தங்[க]ளூரி-**
3. **ல் காலற்கூலி கோலற்கூலி எண்ணுவன கூலி உள்பட்ட கூ[லி] இ முதல் கொண்டு தங்களூரில் ஸ்ரீ கயி-**
4. **லாஸம் மதுராந்தக ஈச்வரமுடைய மஹாதேவற்கு அவ்வேலி அற்சநாத தேவர்களுக்கும்**
5. **திருக்கோயிற் திருப்பணிகளுக்கும் வேண்டுவன செய்க இவை திருப்பாலைகுடி கிழவந் எ-**
6. **ழுத்து யாண்டு எ வது நாள் நூற்றிருபத்து மூந்றுநால் திருவாய் மொழிந்தருளி திருமுகம் ப்ரஸாதம்**
7. **செய்தருளிந திருமுகப்படி**



16:2

**இடம்:** மேலது இடச்சுவர்

**காலம்:** குலோத்துங்கன், மூன்றாம், யா. 23=பொ.ஆ.1201

**செய்தி:** இராசகெம்பீர் வளநாட்டு சூரலூற் கூற்றத்தில் இருந்த இராசேந்திர சோழப் பேட்டையிலுள்ள மதுராந்தீஸ்வரமுடைய கோயிலுக்கு தேவதான இறையிலியாக மேற்குறித்த நாட்டிலிருந்த கொற்ற மங்கலத்தில் பத்துவேலி நிலம் அளிக்கப்பட்ட செய்தி. அரசனின் வாய்மொழிக்கேற்ப அரசாணை வெளியிடப்பட்டு வரி நீக்கம் செய்யப்பட்டு நிலம் அளிக்கப்படுகிறது. தற்பொழுது பேட்டைவாய்த்தலை என வழங்கப்பெறும் இவ்வூர் சோழர் காலத்தில் இராசேந்திர சோழன் பேட்டை என வழங்கிய நகரமாக இருந்துள்ளது. கல்வெட்டில் மிகுந்த பிழைகளும் எழுத்துக்கள் விடுபட்டும் உள்ளன. கல்வெட்டை வெட்டுவதற்கு முன் செவ்வண்ணம் கொண்டு சுவரில் எழுத்தறிந்தவர் ஆவணத்தை எழுதிய பின் எழுத்தறிவு தெரியாத கல்தச்சர் கல்வெட்டை வெட்டியுள்ளதால் இப்பிழைகள் ஏற்பட வாய்ப்பு உள்ளது. மேலும் இக்கல்வெட்டின் இறுதியில் கல்வெட்டை வெட்டிய தச்சரின் பெயர் ஒழுங்கற்ற நிலையில் கிறுக்கப்பட்டுள்ளதும் இங்கு குறிக்கத்தக்கது.

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்ரவத்திக் கோனேரின்மை கொண்டா[ன்] இராசகெம்பீர வ-**
2. **ளநாட்டு சூரலூற் கூற்றத்து இராசேன்திர சோழப் பேட்டையில் உடையார் மதுராந்திஸ்வரமுடைய-**
3. **மாஹேச்வர கண்காணி செவ்வாருக்கும் சீகாரியம் செவ்வார்க்கும் தேவர்க்கும் கோஇல்**
4. **[தா....]ள் தங்களுக்கு இறுப்பதாக இன்னாட்டுக் கொற்ற மங்கலத்திலே பதிற்று வேலி நிலம்**
5. **23வது முதல் தேவதான இறையிலியாக இடக்கடவதாகச் சொல்லி கணக்கிலும் இட்டுக் கொள்ளக் க-**
6. **டவதாக வரிக்கூறு செவ்வார்களுக்கும் சொன்நோம் இந்நிலம் 23 வது முதல் தேவதா-**
7. **ந இறை இலியாக கைக்கொண்டு நிவந்தஞ் செலுத்தப் பண்ணுக எழுதிநான் திரும-**

8. ந்திரஓலை நெறி உடைச் சோழ மூவேந்த வேளான் இவை வில்லவராயன் எழு[த்] து இ-

9. வை பங்களத்தரையன் எழுத்து இவை விழிஞத்தரையன் எழுத்து இவை வரகுண

10. ராயன் எழுத்து இவை தொண்டைமான் எழுத்து இவை திரிபுவனச் சக்ரவத்திகள்

11. மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியந் முடித்தலையும் கொண்டு ஸ்ரீகுலோத்துங்க

12. சோழ தேவற்க்கு யாண்டு 23வது நாளிரண்டினால் திருவாய் மொழிந்தரு-

13. ளி ப்ரஸாதம் செய்தருளிய திருமுகப்படி

திருமுடித்தழுமயர்*

*கல்வெட்டை வெட்டிய தச்சரின் பெயராக இருக்கலாம்.



# 17. தேவனூர் திருநாகீச்$_2$வரமுடையார் கோயில் கல்வெட்டுக்கள்

**கோ.விஜயவேணுகோபால்**,பாண்டிச்சேரி
**சீ. ஸ்ரீதர்**,புதுச்சேரி
**த.ரமேஷ்**,முண்டியம்பாக்கம்
**த.ரங்கநாதன்**,விழுப்புரம்

**17:1**

**இடம்:** *விழுப்புரம் மாவட்டம் மேல்மலையனூர் வட்டம், தேவனூர் திருநாகீச்$_2$வரமுடையார் கோயில், அர்த்த மண்டபத்தெற்குச் சுவர்*

**காலம்:** *விக்கிரம சோழன்,யா.10=பொ.ஆ. 1128*

**செய்தி:** *நொந்தவிளக்கு வைத்தமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பூமாது புணர புவிமாது வளர [நாமாது]விளங்க
2. ஜயமாது விரும்பத் தன்னிரு பதமலர் மன்னவர் சூட மன்னிய [உ]
3. ரிமையால் மணிமுடி சூடிச் செங்கோல் நின்று திசைதொ...
4. ஞ் செலுத்த வெங்கலி நீக்கி மெய்யறந் தழைப்பக் கலிங்[க]
5. மிரியக் கடர்மலை நடாத்தி வலங்கொளாழி வரை ஊழி திரிய
6. சுடரளவும் ஒருகுடை நிழற்கீழ் முக்கோக்கிழாநடிகளொடும்
7. வீற்றிரும் தருளிய கோப்பரகேசரி பம்மரான சக்ரவத்திகள் ஸ்ரீ விக்கிரம
8. சோழ தேவற்கு யாண்டு ய 10வது ஜயங்கொண்டசோழ மண்டலத்து வு-
9. த்தம சோழவளநாட்டுத் தேவனூர்த் திருநாகீச்வரமுடைய ஆளு-
10. டையார்க்கு இன்னாட்டுப் பல்குன்றக் கோட்டத்து நெடுங்குன்ற நாட்டு..
11. ர் தவரப்பூண்டி இருக்கும் வெள்ளாளன் அண்ணங்குடையான் நம்பி காடன் ம . . . .
12. லை மிதுன நாயற்று பூர்வ பக்ஷத்து ச$_2$துத்தியும் ஆயிலையமும் பெ-
13. ற்ற நாயற்றுக்கிழமை நாள் இத்தேவர்க்கு திருநந்தா விளக்கு ஒன்றுக்கு விட்-

14. ட எருமை உரு 10 இப்பத்தும் கைக்கொண்டு திருநுந்தா விளக்கு
15. ஒன்றும் செலுத்தக் கடவோமா . . . ஸம்மத்தித்து கைக்கொண்டோ-
16. ம்

**17:2.**

**இடம்:** *மேலது,கோயில் கருவறை, தென்புற அதிட்டானக் குமுதப்பட்டை*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன்,யா.5=பொ.ஆ. 1138*

**செய்தி:** *வரிகள் சிலவற்றை கோயிலின் பூசைக்கு மாற்றியமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபு$_4$வனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்க்கு யாண்டு 5 ஆவது ஜயங்கொண்டசோழ மண்டலத்து உத்தம சோழ வளநாடான சிங்கபுர நாட்டு தேவனூர் ஆளுடையார் திரு நாகீச்வரமுடை-
2. ய நாயநார்க்குச் செங்கேணி நாலாயிரவன் அம்மை அப்பநான ராஜேந்த்ர சோழச் சம்புவராயனே[ன்]இத்தேவர் தேவதானம் தேவனூர் பெரும்பாடி காவலும் சிறுபாடி காவலும் வெட்டியுந் தனியாளும்உள்ளிட்ட கைக்கோளர் தறிக் கடமை மற்றும் இவர்கள் பேரில்
3. சில வரிகளாலும் இத்திருமடை விளாகத்திலிருக்கும் வாணியர் பேர்க் கடமையும் அச்சர வேர்கடமையும் இந்நாயனார்க்குத் திருவொத்தசாமத்துக்குத் திருவமுதுபடிக்கும் சந்தன சிதாரி திருப் பரிசட்டங்களுக்கும் விட்டு இத்தேவர் .கூல கோலுங் கணக்கும் அளவாதபடிக்கும் சந்தன சிதாரி திருப்பரிசட்டங்களுக்கும் விட்-
4. டேன் செங்கேணி நாலாயிரவன் அம்மை அப்பநான ராஜேந்த்ர சோழச் சம்புவராயனேந் இறக்குவான் கங்கையிடை குமரி இடைச் செய்தான் பாபம் படுவான் இ த$_4$ம்மம் ரக்ஷிப்பான் ஸ்ரீபாத மிரண்டும் என் தலை மேலின இது பன்மாஹேச$_2$வர ரக்ஷை

**17:3**

**இடம்:** *மேலது*

**காலம்:** - *இரண்டாங் குலோத்துங்கன்,யா.14 = பொ.ஆ.1147*

**செய்தி:** *விளக்கிற்கு 4 பசு கொடுத்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவந சக்ரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 14 வது தே-
2. வனூர் உடையார் திருநாகீச்சுரமுடைய நாயனாக்கு மருதூர் முருக கிழான் பெருமா...
3. யாந் பெற்றாந் செல்வனேந் இந் நாயநார்கு சிறுகாலை சந்தியிலே னந்தா
4. விளக்கு ஒன்றுக்கு விட்ட பசு $_4$ நாலுங் கொண்டு சந்திரா....
5. கடவோமானோம் யிக்கோயில் சிவப்பிராமண நம்பி -
6. யும் சொக்கந் அரதம் பிள்ளையும் . . .

**17:4**

**இடம்:** *மேலது*

**காலம்:** *இரண்டாம் குலோத்துங்கன், யா.26= பொ.ஆ. 1159*

**செய்தி:** *நாட்டுப்பிரிவு, இறைவன் பெயர் குறித்த உடைந்தகல்வெட்டு.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபு$_4$வனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கி யாண்டு 26 வதுசெயங்கொண்ட சோழ மண்டலத்து உத்தம சோழ வளனாட்டுத் தேவனூ ராளுடையார் திருனாகீசுர
2. முடைய னாயனாற்குச் சி....

**17:5**

**இடம்:** *மேலது*

**காலம்:** *இரண்டாங் குலோத்துங்கன், 12ஆம் நூ.*

**செய்தி:** *நிலக்கொடை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு. ஆவது வனூர் ஆளுடைய நாயநார்க்கு செங்கேணி நாலாயிரவந் அம்மை அப்பநான ராஜேந்த்ர சோழச் சம்புவராய-
2. நேன் இன் நாயநர்க்கு வடபட்டியில் திருமந்திர போநகப்படிக்கு விட்ட நிலம் அரை 2 ம நில அரையேஇரண்டு மாவும் நெடுவேளூரில் நான் திரித்தி விட்ட அப்பந் பற்று வஞ்சி ஸதிரம் உட்பட விட்ட

3. நிலம் 2 1/2ரு நிலம் இரண்டரையும் அமுதுபடிக்கு பெரும்பாடி காவல் திறுபாடி காவல் வெட்டி தனியாள் உள் யிட்ட காடாயமு விட்டேந் அம்மை அப்பநான ராஜேந்த்3ர சோழசம்பு ....

17:6

**இடம்:** *மேலது*

**காலம்:** *இரண்டாம் இராசராசன்,யா.10 = பொ.ஆ.1156*

**செய்தி:** *திருநொந்தாவிளக்கிற்கு பசு கொடுத்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபு4வநச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தே2 ...யாண்டு 10 ஆவது ஜயங்கொ -
2. ண்ட சோழ மண்டலத்து உத்தம சோழ வளநாட்டுத் தேவனூர்த் திரு... க்கு ஊற்றுக்காட்டுக்கோட்டத்து
3. ஊற்றுக்காட்டு வெள்ளாளந் செந்தாமரைக் கண்ணநாந சோழகோந் திருநந்...க்கு விட்ட பசுமுப்பத்திரண்டும்
4. கைக்கொண்டோம் இக்கோயில் தேவர்கந்மி பொற்கோயில் நம்பியும் தழுவக் குழைஞ்ச பட்டநும் சந்த்ராதித்தவரை இத்திரு நந்தா விளக்கு செலுத்தக் கடவோம் பந்மாஹேச்2ர ரக்ஷை

17:7

**இடம்:** *மேலது*

**காலம்:** *இரண்டாம் இராசராசன்,யா.12 =பொ.ஆ.1158*

**செய்தி:** *திருநந்தாவிளக்கு வைத்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபு4வன சக்கவத்திகள் ஸ்ரீராஜராஜ தே3வற்கு ஆண்டு 12 ஆவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து உத்தம சோழ வள னாட்டுச் சிங்கபுர னாட்டுத் தேவனூர்த் திரு நாகீ3ச்2வரமுடைய சீ மஹாதே3வற்கு இம்மண்டலத்துப் பங்கள
2. னாட்டுப்பிருதுவிகங்கன் கூத்தாடுந் தேவன் வைத்த திருனந்தா விளக்கு ஒன்றுக்கு விட்ட பசு 32 ருஷபம் 4 ம் கைக்கொண்டு இத்திருனந்தா விளக்கு ஒன்றும் சந்த்3ராதித்தவரை செலுத்தக் கடவோமானோ மின்னாயனார் கோயிற் காணியுடை -
3. ய சிவப்3ராஹ்மணரோம் இது பந்மாஹேச்2வர ரக்ஷை

17:8

**இடம்:** *மகாமண்டபம்,இடதுபுறஅதிட்டானம்,குமுதப் படை*

**காலம்:** *இராஜாதிராஜன்,யா. 2=பொ.ஆ.1165*

**செய்தி:** *விளக்கிற்கு பசு 4 கொண்டமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபு₄வநச் சக்ரவத்திகள் ஸ்ரீராஜாதி₄ராஜ தே₃வற்கு யாண்டு 2 ண்டாவது உடையார் திருநா-
2. கீ₃ச்₂வர முடையார் திருமடை விளாகத்திலிருக்கு மாண்டார் திருவெண்காடுடையா னஞ்சுண்டாநான பொ-
3. ற்கோயிற் பிள்ளை இன்னாயனார்க்கு சிறுகாலைச் சந்தியி~ல எரிப்பதாக வைத்த சந்தி
4. விளக்கு ஒன்றுக்கு பசு 4 யின் னாலுங் கைக்கொண்டு சந்த்₃ராதி₃த்தவரை உபை₃யங்
5. கொண்டோம் யிக்கோயில் சிவ பிராமண நம்பி தேவப் பிள்ளையு சொக்க ரெ..ம்..ப....
6. ளைய் யிவ்விருவோம் யிது பன்மாஹேசுர ரகைஷ சொக்கந் அனந்தம் பிள்ளையும்

**17:9**

**இடம்:** *மேலது, தெற்குச் சுவர்,குமுதப் படை*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்கன்,யா.18 =பொ.ஆ. 1196*

**செய்தி:** *திருப்பலிக்கு 200 காசு கொடுத்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திர்புவனச் சக்கரவத்திகள் மதுரையும் பாண்டியன் முடித் தலையுங் கொண்டருளிய ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு பதின் எட்டாவது கங்கை கொண்ட சோழபுரத்துப் புறப் படை வீட்டுப் பெருந்தனத்து மலையாண் படைவீட்டில் இருக்கும் வியாபாரி கண் உடையாந் உய்ய வந்தான் பாண்-
2. டியனுய றா..[ப]டை வீட்டில் இருக்கும் வியாபாரி பையூர் கிழவ நித்தாநந்தனும் றாப்ப விருவோமும் ஜயங்கொண்ட சோழ மண்டலத்து உத்தமசோழ வளநாட்டு தேவனூருடையார் திருநாகீசிரமுடையா' நாயனார்க்கு திருப்பிலிக் கூடத்துக்கு சீ பண்டாரத்தில் குடுத்த காசு இருநூறும் சீ பண்டாரத்தார் கைக்கொண்டு இக்காசில் பொ-
3. லிசை கொண்டு ஆண்டு ......ர் இத் திருப்பிலிக் கூடம் அழிவு சோரக் கடவோமாக
4. சம்மத....இ...ங்க....பதும் ....ப....ரத்தேய் யிட்டு இத்திருப் பிலிக்கூடம் ஆண்டுவரை அழிவு சோரக் கடவோம் இக்கோயில் தானத்தாரோ... இப்படி சம்மதித்தோ....இந்தக் கல்வெட்டினபடி இத் திருப் -

5. பிலிக் கூடம் .ச்சயித்து செய்விப்பான் திருவடிமலர் இரண்டும் தலை மேலே.

## 17:10

**இடம்:** *மேலது,மகாமண்டபம், நுழை வாயில், வலது புறச் சுவர்*

**காலம்:** *இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்,யா.13 =பொ.ஆ. 1290*

**செய்தி:** *நாட்டவர் மற்றும் பலர் கூடி திருப்பணிக்கு கொடை அளித்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருவாய்க் கேழ்வி முன்னாகக் கோச்சட பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ சுந்-
2. தர பாண்டிய தேவற்கு யாண்டு 13 வது மகர நாயற்று அமர பக்ஷத்து ஏகா$_3$தசி$_2$யும் திங்கள் கிழமையும்
3. மூலமும் பெற்ற நாள் ஜயங்கொண்ட சோழ மண்டலத்து பல்குன்றக் கோட்டத்து அண்ணமங்-
4. கல பற்று நாடவரும் அகம்படியாரும் கைய்க்கோள முதலிகளும் பள் நாடவரும் ப-
5. ள் முதலிகளும் தென்னாற்றூர் நாட்டு மேலைச் சேரியில் சித்திர மேழித் தேசி நா-
6. யகன் பறியன் புளி அடியில் நிறைவற நிறைந்து குறைவறக் கூடி இம்மண்டலத்து இ-
7. க் கோட்டத்து தேவனூர் உடையார் திருநாகீ$_3$சுரமுடைய நாயனார்க்கு திருப்-
8. படி நிமந்தத்துக்கும் திருப்பணிக்கும் திரு நாளுக்கும் தேவதானமாக விட்ட
9. இம் மண்டலத்து இக் கோட்டத்து சிந்தவன புத்தேரி நாற்பாற் கெல்லைக் கு-
10. ட்பட்ட நன்சை நிலமும் புன்செய் நிலமும் நத்தமும் ஏரியும் ஏரி வா-
11. ய்ப் புறவடையும் மேனோக்கின மரமும் கீணோக்கின கிணறும் புறக்கல-
12. னையும் தறி இறையும் வாணியக் குடி இருந்து பரிமாறுவார் செக்குக் கடமை தறி இறை

13. தட்டார் பாட்டம் இனவரி ஏரி மீன் பாட்டம் மாவடை மரவடை மற்றும் எப்பேற்ப-

14. ட்ட சுகப் பார்த்திகளும் இன்னாயனார்க்கு அனைத்தாயங்க... அடங்கலி-

15. றையிலியாக விட்டோம் இப்படிக்கு சந்த்3ராதித்தவரை செல்வதாக இன்னாயனார் கோயிலிலே கல்லிலும் செம்பிலும் வெட்டி-

16. க் கொள்வதாகச் சொன்னோம் அண்ணமங்கலப் பற்று நாடவரும் அகம்படியரும் அகம்படி முதலிகளும் பள் நாடவரும் பள் முதலிக...

## 17:11

**இடம்:** *மேலது,அர்த்த மண்டபம்,தெற்கு அதிட்டானம்,குமுதப் படை*

**காலம்:** *இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்,யா.18= பொ.ஆ.1295*

**செய்தி:** *திருவீதி நாச்சியாரை எழுந்தருளிவித்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீசுந்தர பாண்டிய தேவற்கு யாண்டு 18 வது உடையார் திரு நாகீசுரமுடைய நாயனாற்கு உத்ஸ்ஸவ எழுந்தருளுகிற நாயகற்கு திருவீ-

2. தி நாச்சியாரை எழுந்தருளப் பண்ணி அறமளந்த நாச்சியார் என்று திருநாமம் சூத்தி திரு ப்ரதிஷ்டை பண்ணி திருக்கல்லியாணமும் பண்ணி குடுத்தேன் இவ்வூற் தேவரடியாரில் திருநிலை

3. யழகியார் மகன் பல்லவநேன் இது ஸ்ரீ மாஹேச்2வர ரக்ஷை உ

## 17:12

**இடம்:** *மேலது, மகாமண்டபம்,தெற்குச் சுவர்*

**காலம்:** *சம்புவராயர்-இராசநாராயணசம்புவராயர், யா.4=பொ.ஆ. 1341*

**செய்தி:** *யாதவராயருக்கு பழைய மடப்புற உரிமைகளை கோயில் திருப்பணிக்காக அளித்தமை*

1. [ஸ்வ]ஸ்தி ஸ்ரீ சகலலோகச் சக்கரவத்திகள் உதாரகுண ராமன் [இரா]ஜ நாராயண சம்புவரா-

2. யற்கு யாண்டு 4 வது தேவனூர் உடையார் திரு நாகீ₃ச்₂வர முடையி னயி..கோயிலுக்கு இவ்வூரில்தே

3. வரடியாரில் ஆத்தாணாச்சியார் மகன் அடியாற்கு நல்லாண் யாதவன் இக்கோயிலுக்கு மு-

4. ன்பு உள்ள மரியாதி...ழிய திருநடை மாளிகை திருவரங்கு பண்ணுகையாலும் சன்னதி திருவீதி தி-

5. றந்து தெருவி.....கெ....லும்...ஞ்சணைக்குளம் வெட்டுகையாலும் இக்கோயில் முன்னாள் ....ணிக்கு...

6. யாய்க் கிடந்த திருப்பணிக்குறை தீருகை ஆகையாலும் இன்னாயினார் திருநாமத்துக் காணி ஆன இந்த தேவனூரில் எல்-

7. லைக்குள்ளே ஏந்தலும்வெட்டி ஏந்தல் கீழே நிலமுந் திருத்துகையாலும் இன்னாயினாற்கும் ஊற்கும் வேண்டும் நன் -

8. மைகள் செகையாலும் இவர் வெட்டின ஏந்தலும் திருத்தின நிலமும் இவற்கு தனிக் காணி ஆட்சிஆகவும் ஏந்தல் கீழே

9. இவ.....லே குடுத்தன யாதவ -

10. ராய...நஞ் செறுவும் குண்டி -

11. லும் [நாட்டளவு] கோலாலே குழி

12. ஆயிர[மு]ம் இவற்குத் திருப்பணி

13. ஆண்....க இவற்கு மடப்புறமா -

14. க ஸர்வ மானியமாகச் சந்திராதித்த -

15. வரையாக நடத்திக் கொள்ளுமென்று தா -

16. னத்தாரும் ஊராரும் [முந்]குடுத்த ஓலைப்ப[டி]-

17. யே நாமும் யாதவராயற்கு குடுத்துக்

18. கல்லு வெட்டிக் கொள்ளவும் சொன் -

19. னோம் இப்படிச் செய்வதே.

## 17:13

**இடம்:** *மேலது*

**காலம்**: *சம்புவராயர், இராசநாராயணச் சம்புவராயர், யா.11=பொ.ஆ. 1348*

**செய்தி:** *திருப்பணியில் இறந்த கல்தச்சரின் குடும்பத்திற்கு நிலம் கொடுத்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சகலலோகச் சக்கரவத்திகள் இராசநாராயண சம்புவராயற்கு யாண்டு 11 ஆவது தேவனூர் உடையார் திரு நாகீ-
2. சுரமுடைய நாயனார் திருமண்டபத்தில் சீ மாயேச்$_{2}$வரர்க்கும் தானத்தாரும் பட்டர்களும் கைக்கோளர் கைக்கோள முதலிகளும்
3. நிறைவற நிறைந்து குறைவற கூடி இருந்து இக்கோயில் திருப்பணி செய்கிற ஆலாலசுந்தர ஆசாரி முன்பே மண்டபத்துக்கு கல்லு ஏறடுகை-
4. யில் திருமுன்பேயாக கல்லு விழுந்து சாகையில் இவன் மகன் ஆளவந்தானுக்கு ஆலாலசுந்தர ஆசாரி என்று பேரும் குடுத்து இவன் தமையன் மருதாண்-
5. டைக்கு நாவிலங்காத ஆசாரி என்று பேரும் குடுத்து இன்னார் திருநாமத்துக் காணியிலே இவர்களுக்கு காணியாக விட்ட வடக்குத் தெ-
6. ருவில் குளந்தை மனைக்கு கிழக்கு கருமானர் மனைக்கு மேற்க்கு உட்பட்ட மனையும் மனைப் படப்பையும் வட கழனியில் ஏழு குட்டத்தம-
7. யில் ஆத்தி வட்டம் உட்பட்ட நிலத்திலே இருநூறு குழியும் புன்செயிலே இருநூறு குழியும் முதலடங்க இறையிலி ஆக இன்னாள் முதல் சந்திரா-
8. தித்தவரையும் செய்வதாகக் குடுத்தோம் இப்படி செய்வதே . . .

**17:14**

**இடம்:** *மேலது,மகாமண்டபம்,மேற்குச் சுவர்*

**காலம்:** *சம்புவராயர்-இராசநாராயணச் சம்புவராயர்,யா.14 =பொ.ஆ.1351*

**செய்தி:** *கோயிலுக்கு சறுவமானிய இறையிலி அளித்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சகலலோகச் சக்கிரவத்திகள் இராஜநாராயண சம்பூராயர்க்கு யாண்
2. டு 14 வது தேவனூர் உடையார் திரு நாகீச்சுரமுடைய நாயனாற்கு இவ்வூரில் கைக்கோளர்
3. பேரால் நூலாயம் ஆட்டைச் சம்மாதம் வாணியர் பேரால் நூலாயம் ஆட்டைச் சம்மாத -
4. ம் செக்கு கடமை பேற்க் கடமை ஆயம் மற்றும் புறக்குடி பேற் கடமை ஆயம் ஆட்டைச் சம்மாத -

5. ம் உப்பட இந்நாயினாற்கு சறுவ மானிய இறையிலி ஆக சந்திறாதித்தவரையும் நடக்க கல்லி-

6. லும் வெட்டி கொள்ள சொல்லி குடுத்தோம்.

## 17:15

**இடம்:** *மேலது, அலங்கார மண்டபம், வலதுபுறம், தெற்குச் சுவர்*

**காலம்:** *சம்புவராயர்-இராசநாராயணச் சம்புவராயர், யா.16=பொ.ஆ.1353*

**செய்தி:** *உடைந்துள்ளது.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சகலலோக சக்கிறவத்திகள் ஸ்ரீ இரா[சநா]

2, ராயணன் சம்பூராயற்கு யாண்டு 16 வ [து ே]

3. தவனூருடையார் திருநாகீசுரமுடையார்

4. ரடியாரில் ஆசிரியந் கர்த்தரான .....

## 17:16

**இடம்:** *மேலது*

**காலம்:** *விசயநகர, வீர புக்கண்ண உடையார்,சகம் 1327, பார்த்திப, தசமி,ஞாயிற்றுக் கிழமை=பொ.ஆ.1405*

**செய்தி:** *நிலக்கொடை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மஹாமண்டலீச்$_2$வ...

2. ஹரிராய விபாடன் பாஷை....

3. புவ ராயர கண்டன் ஸ்ரீ வீர

4. க்கண உடையாற்கு சகாத்தம் ...

5. து முன்னூற்று இருபத்து ஏழி...

6. நின்ற பாத்திப வருஷம் காந...

7. தசமியும் ஞாயிற்றுக் கிழமையும் ஜெயங்-

8. கொண்ட சோழ மண்ட-

9. லத்து சிங்கபுர நாட்டு அண்ண...

10. யார் திருநாகீசுரமுடைய நாயினா...

11. ரரும் ஸ்ரீருத்திரரும் ஊரவரும் மன...

12. மாள் திரு ஓலக்க மண்டபத்தில் நிறைவ-

13. ற நிறைந்து இவூரில் கைக்கோளரில்...

14. கைக்கோளர் நமச்சிவாயர் தேவர்...

15. ண்டு முன்னூறு பணம் இட்டு ஏரி . . . .

16. த ஏந்தலிலே சறுவ மானிய இறையிலி . . . .

## 17:17

**இடம்:** *மேலது*

**காலம்:** *விசயநகர மல்லிகார்ச்சுன தேவ மகாராயர்,சகம் 1333,விஷு,ஆவணி,3 =பொ.ஆ.1411*

**செய்தி:** *கோயில் திருநளுக்கு கொடை கொடுத்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மன் மகாமண்ட
2. லீச்$_2$வரன் அரிய இராய விபா
3. .. பாஷைக்கு தப்பு இராய-
4. ர கண்டன் துலுக்க
5. தள விபாடன் பூறுவ
6. தெக்ஷிண பச்சிம உத்-
7. தர சது சமுத்திராபதி எம்
8. மண்டலமு கொண்ட
9. இராசாதிராச இராய பரமேசுரன் கெச வேட்-
10. டை கண்டருளிய தேவராயற் குமாரற் ஸ்ரீ வீர
11. பிறதாப மலுகாற்சின தேவ மகா இராய
12. பிறிதிவி இராச்சியம் பண்ணி அருளா நின்ற சகா-
13. தம் 1333 மேல் செல்லா நின்ற
14. விஷு வருஷம் ஆவணி மீ 3 உ ஸ்ரீமன் மகா மண்டலே-
15. சுர கோடைய இராய நிருப நாராயண இராய உலிஇரா-
16. கண்ட பேருண்ட உலிய இராமைய தேவ மகா இராசா தேவ-
17. னூர் ஆள் உடையார் திரு நாகீசுரமுடைய நாயனார்
18. ஸ்ரீபண்டாரத்துக்கு உதக பூறுவ தந்ம சாதநம் பண்-
19. ணி குடுத்தபடி நம்முடைய நாயக்கத்திற் சீர்மையா

20. ன அண்ணமங்கலப் பற்று வாழைப்பழவன் தாங்-

21. கல் கிறாமம் ஒன்றும் உடையவக்கு அங்கரங்-

22. க போகத்துக்கும் திருநாள் திருப்பணிக்கும் இ-

23. ற்றை நாள் துவாதெசி புண்ணிய காலத்திலே

24. தாரா பூறுவமாக குடுகையில் இந்த கிறாமத்து-

25. க்கு சீர்மையும் கல்லு வெட்டி இ நில உண்டென சகலாதாயமும் ஸ்ரீபண்டாரத்தாரே கொ-

26. ள்ள தக்கிதாக சறுவ மானியமாக சந்திறாதித்தவரையும் நடக்க கடவது ஆகவும் இதுக்கு

27. அகுதம் பண்ணினவர்கள் கெங்கையில் காராம் பசுவை கொன்ற பாவத்திலே போக கடவர்கள் ஆக

## 17:18

**இடம்:** *மேலது*

**காலம்:** *விசயநகர, மல்லிகார்ச்சுன தேவ மகாராயர்,சகம் 1383, விஷு,13,சிம்ம= பொ.ஆ. 1461*

**செய்தி:** *தேவரடியாருக்கு நிலக்கொடை கொடுத்தமை.உட்டு வளி என்பது கன்னட ஹட்டு வளி என்பதன் தமிழ் வடிவமாகும். கன்னட அரசர் ஆட்சியின் காரணமாக இவ்வழக்கு வந்துள்ளது.*

1. சு$_2$ப$_4$மஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹா மண்டலேச்$_2$வரந் ஹரிராய விபாடன் பாஷைக்கு தப்புவ இராயர க...

2. கண்ட .....வராய....ண்டன் ....ந்தராய காற்த்திஎலர் துலுக்க தள விபாடன் கண்ட நாடு கொ-

3. ண்டு ....றுவ தெக்ஷிண பச்சிம உத்தர சது சமுத்திராதிபதி எம் மண்ட -

4. லமு கொண்ட இராசாதி...இராய பரமேசுரன் கெச வேட்டை கண்டருளிய தேவராய குமாரரான வீரப்-

5. பிறதாப மல்லிகார்ஜுன தே-

6. வ மஹாராயர் ப்ருதிவி ரா-

7. ஜ்யம் பண்ணி அருளா நின்-

8. ற சு$_2$காப்தம் 1383

9. மேல் செல்லா நின்ற
10. விஷ வருஷத்து 13 ஸிம்ஹ
11. நாயற்று முதல் அண்ணமங்-
12. கலப் பற்று தேவனூர் ஆண்ட-
13. தி...மதலிலே ஸ்ரீமன் மகா
14. மண்டலேசுர மேதினி மீசுர கண்-
15. ட கட்டாரி சாளுவ நாரசிங்-
16. கய மகா ஆதிகள் தெண்-
17. டன் பண்ணிக் குடுத்த தன்மா-
18. தனம் தேவனூர் தேவடிஆரில்
19. பூப்பண மாணிக்கம்
20. தேவனூர் ஆண்டார்
21. இவ்வூரு கிறாமம் குடுத்தால்
22. தன் காணி ஆட்சியாகப் பண்-
23. ணிக் கொண்டு நாயினார் கோ-
24. யில் திருப்பணி என்றென்று
25. ம் நடத்திக் கொண்டு வருகிறே-
26. ன் என்று சொல்லுகையில் இ-
27. ந்த மார்கழி மாதம் மாதப் பிறப்பு பு-
28. ண்ணிய காலத்திலே தாராபூறுவமா குடுத்த-
29. து படை வீட்டு இராச்சியம் அண்ணமங்-
30. கலப் பற்றில் புத்தேந்தல் கிறாமம் ஒன்-
31. றுக்கு குள ப்ரமாணம்பொன் பத்து -
32. க்கு உட்டு வளி பொன் அஞ்சு இந்தக் குளப் பிற-
33. மாணம் பொன் பத்துக்கு உட்டு வளி பொன்
34. பொன் அஞ்சும் அண்ணமங்கலப்பற்றுப் புத்தேந்-
35. தல் க்ஈறாமம் தேவனூர் ஆண்டார் திருநாகீஈசுர-
36. முடைய நாயனாற்க்குத் தாரா பூர்வம் ஆக கு-
37. டுத்தோம் ஆனபடிஆலே இந்தக் கிறாமத்துக்கு
38. செல்லும் சது சீர்மையிலுள்ள நஞ்சை புஞ்-

39. சை முதலானதும் நிதி நிக்ஷேப ஜல பாஷண ஆகாமி போ4கரம் அட்ட போகமும் சமதை ஆதாயமும் உள்பட தாரா பூறுவம் ஆக குடுதோம் ஆனபடிஆலே இந்த கிறாமத்தில் உண்டான பொன் வற்கம் நெல் வற்கம் பூப்பண மாணிக்கம் கண்டு கொண்டு தேவனூர் ஆண்டார்க்கு திருப்பணி காரியம் சந்திறாத்த வரை ஆக நடத்த கடவன்னா கவும்....கிறாமம் புத்தேந்தல் குடி நீங்கா தேவதானமாக பயிர் செய்து கொள்ள-

40. கடவன்னாகவும் இந்த புத்தேந்தலிலே பூப்பண மாணிக்கத்துக்கு மடப்புறமாக நாட்டளவு கோலாலே நன்செயிலே ஆயிரங் குழியும் புன்செயிலே ஆயிரங் குழியும் பெரிய சோழனில் கிணறு ஒன்றும் மனை ஒன்றும் சறுவ மானியமாக நடக்க கடவது ஆகவும் இந்த தந்மத்துக்கு அகுதம் பண்ணினவர்கள் கெங்கை கரையிலே காராம் பசுவை கொன்ற பாவத்திலே போக கடவர்கள் ஆகவும் இ-

41. ப்படிக்கு இவை ஆற்றுழான் உடையான் எழுத்து இப்படிக்கு இ

42. சோழப் பல்லவரையன் எழுத்து இப்படிக்கு இவை வீர நுளம்ப

43. ட்டு வேணாதரையன் எழுத்து இப்படிக்கு பணை கிழான்...ய.. எழுத்து

44. தன்மைக்கு இவை வீற்றிருந்தான் எழுத்து இப்படிக்கு பண...ட்டு ப்ர....

45. அபிமான பூசன வேளான் எழு.. இப்படிக்கு இவை பள்ளிகட்டு வேளான் எ...பட்ட க...

## 17:19

**இடம்:** *மேலது*

**காலம்:** *விசயநகர, விருப்பண்ண உடையார், தாது, ஆனி மாதம் 10 =14.நூ*

**செய்தி:** *குடிநீங்கா தேவதானமாக அளித்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மன் மஹா மண்டலேச்$_2$வரந்
2. பாஷைக்குத் தப்புவ ராயர கண்டன் ஹரியண உ-
3. டையார் குமரர் ஸ்ரீ விருப்பண உடையர்க்கு செல் -
4. லா நின்ற தா$_3$து ஸம்வத்ஸரத்து ஆனி மாதம் பத்தாந்
5. தியதி தேவனூருடையார் திருநாகீ$_3$ச்$_2$வர முடைய நாயி -

6. ணார் கோயிலில் ஸ்ரீ மாஹேச்$_2$வரரும் தானத்தாரும் கைக் -

7. கோளரும் கைக்கோள முதலிகளும் மன்னரை முடி சூட்டும்

8. பெருமாள் திருவோலக்க மண்டபத்தில்

9. நிறைவற நிறைந்து குறைவற கூடி இருந்து தான

10. கடைமீடு குடுத்தபடி தோவொள நாச்சியார் தேவ -

11. தானம் அனாதி புலைத்தலையாய்க் கிடக்கையில் அப்ப நாயன்

12. தென்னவதரையர் சிங்கரசன் ஏந்தல் என்று ஏரியும்

13. வெட்டி நிலமுந் திருத்திக் கிணறும் வெட்டி கடமையும் இறு -

14. த்துக் கொள்ள நஞ்சை புஞ்சை நாற்பாற் கெல்லையும்

15. தென்னவதரையற்கு குடி நீங்காத் தேவதானம் ஆக குடுத்தோம் சந்திறாதித்த வரையும் செ...

## 17:20

**இடம்:** *மேலது*

**காலம்:** *விசயநகர, விருப்பண்ண உடையார், சகம் 1321 விபவ , கற்கடக,அமர பக்ஷம், நவமி, அசுபதி=பொ.ஆ.1399*

**செய்தி:** *பெரும் கரையாருக்கு குடிநீங்கா தேவதானம் அளித்தமை*

1. ஸ்ரீமன் மகாமண்டலீசுர....விபாடன் பாஷைக்கு தப்புவ ராயர கண்டன்

2. அரியண உடையர் குமரன் விருப்பண்ண உடையர்க்கு செல்லா நின்ற சகாத்தம் ஆ-

3. யிரத்து முன்னூற்று இருபத்து ஒன்றின் மேற் செல்லா நின்ற விபவ வருஷத்து

4. கற்கடக நாயற்று அமர பக்ஷத்து நவமியும் அசுபதியும் பெற்ற நாள் அண்-

5. ண மங்கலப் பற்று தேவனூர் உடையார் திரு நாகீசுரமுடைய நயினார்க்கு திருநா[ம]-

6. த்துக் காணி ஆக குடுத்த இப்பற்று வளத்தியில்...

7. வஞ்சி விளாகத்து ஏரிக்கு மேற்கு தென்பாற் கெல்லை கள...கு வடக்கு மேல்-

8. பாற் கெல்லை எறகு கொல்லை ஆலுக்கு கிழக்கு வடபாற் கெல்லை தேவனூ ரெல்-

9. லைக்கு தெற்கு உட்பட்ட நிலம் தேவனூரில் இலாதவள... சிவலிங்க பெரும்

10. கரையாளர்க்கு குடி நீங்கா தேவதானமாக சன்திராதித்தவரையும் உழுது கடமை

11. இறுத்து கொள்ள நாயினார் திருநாகீசுர முடைய நாயி[னா]ர்க்கு தி[ருநாம]த்துக் காணி ஆக குடுத்-

12. தோம் வளத்தியில் பனை கிழார்களோம் இவை குகுல ராய[ந்எ] ழுத்து இவை வாணாதரார்யர் எழுத்து

13. இவை பழந்தீப ராயர் எழுத்து இவை நிகரிலி சோழப் பல்லவரையர் எழுத்து

14. இவை தொண்டைமானார் எழுத்து இப்படிக்கு ஊர்க் கணக்கு னோ...

15. ....ந்த ராய சோழ பிரமாதி ராயன் எழுத்து

## 17:21

**இடம்:** *மேலது*

**காலம்:** *விசயநகர, விருப்பண்ண உடையார், சகம் 1321, ப்ரமாதி = பொ.ஆ. 1399*

**செய்தி:** *நிலக்கொடை*

1. ......ஹரிராய விபாட பாஷைக்கு தப்புவ ராயர் கண்டன் சதுற் சமுத்திராதிபதி ஸ்ரீ ஹரியணஉடையர் குமாரர் ஸ்ரீ வீர விருப்பண்ண

2. உடையாற்கு செல்லா நின்ற ச2காப்தம் 1321 மேல் செல்லா நின்ற ப்ரமாதி வருஷம் முதல் உடையார் திருமேனிக்கு நன்றாக அண்ணம-

3. ங்கல பற்று தேவனூருடையார் திருநாகீசுரமுடைய நாயினாற்கு சமத்தன் ஏந்தல் நத்தமும் ஏரியும் காசாய வற்கங்களும் நூலாயமும் ந-

4. ஞ்சை புஞ்சையும் நாற்ப்பாற் கெல்லையும் ஏரி வாறவடையும் சந்த்ராதி4த்த வரையும் செல்ல ஸர்வ மாந்ய இறையிலி யாக குடுத்தேன் இந்-

5. தற்மத்துக்கு எவன் அகுதம் பண்ணினவன் குராற் பசு கொன்றான் பாவம் கொள்வர்

**17:22**

**இடம்:** *மேலது*

**காலம்:** *விசயநகர, கம்பணர், விசுவாசு, தை,25=14ஆம் நூ.*

**செய்தி:** *நிலக்கொடை*

1. **விசுவாவருஷம் தைமாதம் இருபத்து அஞ்சாந் தியதி நாள்**
2. **ஸ்ரீமது மனு மகா மண்டலிகன் வீர பொக்கண உடையர் குமரர் கம்பணர்**
3. **தேவனூர் உடையார் திரு நாகீசுரமுடைய நாயினார் கோயிலில் தேவரடியாரி[ல்]**
4. **ஆசிரியங் காத்தார் மன்னரை முடி சூட்டும் பெருமாள் இன்னாயினாக்கு திருவோலக்க**
5. **மண்டபம் பண்ணுகையால்லே அண்ண மங்கலப் பற்றில் சமத்தன் ஏந்தல்லிலே நாட்ட-**
6. **ளவு கோல்லால் இரண்டாயிரம் குழி மல்லிநாதன் கிணரு சூழ கட்டளை சேர மடப்புறம்மாகச் சறுவமானி-**
7. **ய இறையிலியாக சந்திராதித்தவரையும் செல்ல கல்லு வெட்டி குடுத்...**

**17:23**

**இடம்:** *மேலது, மகா மண்டபம், மேற்குச் சுவர், குமுதப் பட்டை*

**காலம்:** *விசயநகர, சாளுவ நரசிங்க ராசாவின் காரிய கர்த்தர் சொக்க நயினார்,=16ஆம் நூ.*

**செய்தி:** *நிலக்கொடை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ மன் மகா மண்டலீசுரன் மேதினி மீசுர கண்ட கட்டாரி சாளுவ னரசிங்க ராசாவின்காரியத்துக்கு கடைவரு**
2. **ரான சொக்க நயனாற் தம்மமாக பழம்பூண்டியில் குழி 7 கழனியிலே பறையன் தாங்கல் கழநியிலே குழி விட்டது**

**17:24**

**இடம்:** *மேலது*

**காலம்:** *சோபகிருது,சித்திரை, 15 =16ஆம் நூ.*

**செய்தி:** *இளைய நாயனாரை எழுந்தருளுவித்தமை*

1. சோபகிருது வருஷம், சித்திரைமீ, 15 உ தேவனூர் தானத்தாரும் கைய்கோள முதலியளும் தேவனூராண்ட தம்பிரானார்
2. நாவிலூறு பிள்ளையார் யிளைய நயனாரில்லை யென்று குருக்களும் சொல்லுகையில் தம்பிரானார் திருவிளத்தினா
3. நாம் எழுந்தருளப் பண்ணுகையில் திங்கள் திவசம் திருநாளுக்கு கூட எழுந்தருளப் பண்ண கடவோமாகவும் எழுந்த
4. பண்ணாம லிருந்தால் ஸ்ரீ பண்டாரத்துக்கு பன்னிரண்டு [பொ] ன் குடுக்[க]கடைவோ மாகவும். உ

# 18. நைனார்பாளையம் கல்வெட்டுகள்

**சி.வீரராகவன்,** விழுப்புரம்
**க.குழந்தைவேலன்,** சேலம்
**பொன்.வெங்கடேசன்,** ஆறகழூர்

**18:1**

**இடம்:** விழுப்புரம் மாவட்டம், கள்ளக்குறிச்சி வட்டம், நைனார்பாளையம் வடக்குகாடு நத்தம் கோப்பாலி கண்ணன் என்பவர் நிலம் அருகே கிழக்கிலுள்ள செக்குக்கல்.

**காலம்:** *12*ஆம் நூ.

**செய்தி:** பாதூர் என்னும் ஊரை ஸ்ரீ கரணநல்லூர் என பெயர் மாற்றி காரி குணமாலையாள் என்பவள் செக்கு கொடுத்தமை.

1. **ஸ்வஸ்திஸ்ரீ பாதூர் என்னும் பேர் [பு] துக்கி ஸ்ரீ கரண நல்லூர் என்று க-**
2. **ணி கொண்ட காரி குணமாலையாள்**
3. **செய்விக்கப்பட்டது**



18:2

**இடம்:** *மேலது, தியாகப்பிள்ளை என்பவரின் மகன் பால கிருஷ்ணன் என்பவர் நிலத்தில் உள்ள துண்டுக்கல்*

**காலம்:** *12 ஆம் நூ.*

**செய்தி:** *நிலதானம் பற்றியது.*

1. இவ்வூர் நான்கெல்லை நீடு வாழ்க கல்லு
2. நட்டு இவ்வூர் நான்கெல்லைக்குட்பட்ட நஞ்-
3. செய் புன்செய் புரவடை ஏந்தல் களப்பு மற்றும்
4. எப்பேற்பட்ட உபாதைகளும் - - - - - - - -
5. நம்பி திருநாளைக்கு உடலாக க[ல்]லிலும் செம்பிலும்
6. வெட்டி சந்திராதித்தவரை கோயில் தானத்தார் வ-
7. சம் கடமை செய்வார்க்கு இவை பூவள
8. ஏத்த ஆடுவர் இத் தன்மம் அழிவு செ-
9. ய்வான் நம் குதிரைக்கு புல்லிடும் வெட்டி-
10. யானுக்கு தன் மினாட்டியை கொடுத்தவனாவான்
11. வன்......

# 19. தென்னலூர், நெய்வாசல் கல்வெட்டுகள்

கரு.ராஜேந்திரன்,மேலப்பனையூர்

**19:1**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், இலுப்பூர் வட்டம், தென்னலூர் மாரியம்மன் கோவிலுக்கு வடபுறமுள்ள பொட்டலில் நிற்கும் தூண்

**காலம்:** *12ஆம் நூ.*

**செய்தி:** திருநல்லூர் வேளார் ஆளுநாயக்கனான செம்பியதரையர் கிழத்தி தலைநீரனிவு என்று செம்பியதரையர் மனைவியின் பெயரில் நீர் தெளித்து நடப்பட்டுள்ளது. புதுக்கோட்டைப்பகுதி நெரிஞ்சிக் குடி, சாரணக்குடி போன்ற ஊர்களில் இது போன்ற கற்களில் தலை நீராழிக்கல் என்ற கல்வெட்டு வாசகம் காணப்படுகிறது. ஆனால் இக் கல்வெட்டில் தலை நீரனிவு என்று காணப்படுகிறது.



1. **ஸ்வஸ்தி ஸ்ரீ**
2. **திருநல்லூ-**
3. **ர் வேளார்**
4. **ஆளுநாய-**
5. **க்கனான-**
6. **செம்பிய-**
7. **தரைய-**
8. **ர் கிழத்-**
9. **தியார் த-**
10. **லை நீர-**
11. **னிவு**

**19: 2**

**இடம்:** மேற்படி, 2ஆவது தூண்

**காலம்:** *10ஆம் நூ.*

**செய்தி:** திருநல்லூர் கிழவன் என்று ஆட்பெயர்.

1. ஸ்வஸ்தி
2. ஸ்ரீ திரு-
3. நல்லூ-
4. ர் கிழவ-
5. ன்

19:3

**இடம்:** மேற்படி மாவட்டம், திருமயம் வட்டம், நெய்வாசல், அகத்தீசுவரர் கோவில் மகாமண்டபம் தென்புறப் பட்டிகை

**காலம்:** *13ஆம் நூ.*

**செய்தி:** நெய்வாசல் குளத்து நீர்பிடிப்பு தாழைவயலில்உள்ள சுக்கன் வயலில் நீரேறி நிற்க வேண்டிய அளவு குறித்தது. பெருக்கு காலத்தில் முன்குளத்து வயலில் நீரேறி நிற்க வேண்டிய அளவை குறிப்பதற்காக இரண்டு கிடைமட்ட கோடுகள் போடப்பட்டு அதன்மீது கல்வெட்டு எழுதப் பட்டுள்ளது. இரண்டு கோடுகளுக்கு இடைப்பட்ட அளவு *33.5* செ.மீ. நீரொட்டி என்ற சொல் நீரொட்டை என்றும் நிக்கா அளவு, நிக்காகளவு என்றும் தவறுதலாக குறிக்கப்பட்டுள்ளது.

1. இன் நெய்வாசகுளம் தா-
2. ழை வயலில் சுத்தன் வயக்கல் நீ-
3. ரொட்டை னீரேறி நிக்காகளவு



# 20. சிறுமலைக்கல்வெட்டு

**சி.வீரராகவன்,** விழுப்புரம்
**பொன்.வெங்கடேசன்,** ஆறகளூர்
**வை.கலைச்செல்வன், பெருமாள், பொன்னம்பலம்,** சேலம்

**இடம்:** சேலம் மாவட்டம் வாழப்பாடி வட்டம் பேளூர் அருகே அருநூத்து மலையில் உள்ளசிறுமலை மாரியம்மன் கோயில் அருகே வயலில் உள்ள பலகைக்கல்

**காலம்:** மூன்றாம் குலோத்துங்கன்,யா.24= பொ.ஆ .1202

**செய்தி:** சிறுமலையில் நடந்த பூசலில் இறந்த தோட்டப் படப்பையை சேர்ந்த அரணமுடையான் புயிலன் சேந்தன் கேசன் என்பவருக்காக எடுக்கப்பட்ட நடுகல்

1. [திரி] புவநச் சக்க[ரவத்திகள்]
2. ஸ்ரீ குலோத்துங் [க சோழ]
3. தேவற்கு இயா[ண்]டு இரு[பத்*]-
4. து நாலாவ[தி]ல் மகதை [நா]-
5. டா[ழ்] வார் சேலஞ்[சூ]ற்றிய் [இ]-
6. .னாட்டைச் சிறுமலையில் [கா]-
7. ணத்தில் தோட் பக்க [ப]-
8. டப்பில் இருக்கும் அரணமு-
9. டையான் புயிலன் சேந்த-
10. .ந் நான கேசந் எந் மண்ண-
11. ழிய வந்திடத்தில் படை .னய்
12. காத மாறு கெடுத்து
13. எய்த புயிலன் கேச-
14. நேந் பட்டேந்



# 21. இலட்சியம் கல்வெட்டுக்கள்

சி.வீரராகவன், விழுப்புரம்
பொன்.வெங்கடேசன், ஆறகளூர்

## 21:1

**இடம்:** விழுப்புரம் மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டம் இலட்சியம் கிராமத்தில் உள்ள நூறுயோஜனை உடைய மஹாதேவர் கோயில் கருவறை தெற்குச்சுவர் குமுதப்பகுதி

**காலம்:** *மூன்றாம் இராசராசன், யா.12=பொ.ஆ. 1228*

**செய்தி:** *சனநாத வளநாடு வட நரையூர் கூற்றம் இலட்சியம் நூறுயோஜனை உடைய மஹாதேவர் கோயிலுக்கு கூந்தலூரைச் சேர்ந்த இராமன் சிற்றம்பலமுடையான் என்பவன் நான்கு உற்சவர் சிலைகள் செய்து கொடுத்து அதன் பூசைக்காக நில தானம் செய்தமை*

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ புயல் வாய்த்து வளம் பெருக பொய்யாத நான்மறையின்**
2. **செயல்வாய்ப்பத் திருமகளும் ஜயமகளும் சிறந்து வாழ வெண்மதி பொற்கடை**
3. **விளங்க வேல்வேந்தர் அடி வணங்க மண்மடந்தை மனங்களிப்ப**
4. **மனிநீதி தழைத்தோங்க சக்கரமும் செங்கோலும் திக்கனைத்துங் காவல்**
5. **புனக் கற்பகாலம் புவிகாடப் பொஹ்பமைந்த முடிபுனைந்து செம்பொன்**
6. **வீரஸிங் ஹாஸநத்து புவனிமுழுதுமுடையாளோடு**
7. **வீற்றிருந்தருளிய இராஜராஜதேவற்கு யாண்டு 12**
8. **வது மலாடாகிய ஜனநாத வளநாட்டு வடநரையூர்க் கூற்றத்து இலச்சியம் உடைய**
9. **கூந்தலூருடையான் இராமன் திருச்சிற்றம்பலமுடையான் ஆன பாஞ்சாலராயன்**
10. **இந்த வூரில் நூறு யோஜனை உடைய மஹாதேவர்க்கும் இக்கோயிலில்**

11. இப்பாஞ்சாலராயன் எழுந்தருளுவித்த திருமேனி நாயமாரில்

12. சந்திரசேகர தேவற்க்கும் நாச்சியாற்கும் கூத்தாடும் தேவர்க்கும்

13. நாச்சியாற்கும் திருப்படி மாற்றுக்கும் திருப்பணிக்கும் விட்ட நிலமாவது இவன்

14. காணியான இலச்சியத்தில் கழனிக்கு வடக்கு சிற்றேரியான காட்டேரியும் இந்த

15. வேரியால் நீர்ப்பாயக் கடவ நன்செயும் இந்நிலத்துக்கு தெற்கும்

16. துறிசலூர் எல்லைக்கு மேற்கும் பெரியேரி கழனிக்கு வடக்கும்

17. மேலைக்கல்லைக்கு கிழக்கும் மாலனூர் எல்லைக்கு தெற்கும் உள்ப்பட்ட

18. புன்சையும் பெரியேரித் தென்கடையில் இவன் திருத்தின நன்செய் குழி ஆயிரத்து

19. அஞ்னூறும் இந்த வூர் இறைவார்ப் புன்செயில் குழி எண்ணாயிரமும்

20. இந்நாயமாற்கு திருப்படி மாற்றுக்கும் திருப்பணிக்கும் இறையிலியாகவும்

21. இந்நாயனார் திருமடை வளாகமும் திருவெல்லை புறமும் சந்திராதித்த வரையும்

22. செல்வதாக சொன்[னேன்] இப்படிக்கு கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க

23. இவை நம் எழுத்து

## 21:2

**இடம்:** *மேலது.கருவறைச்சுவர் வடக்குக் குமுதம்*

**காலம்:** *குலோத்துங்க வாணவதரையர்,யா.18=13ஆம் நூ.*

**செய்தி:** *குற்றம் அறிந்த பிள்ளையார் கோயிலுக்கும் அளித்த நில தானங்கள்.*

1. ஸ்வஸ்திஸ்ரீ சிங்கள அராயனும் புரவரியாரும் செய்ய கடவபடி

2. கு[லோ]த்துங்க வாணவதரையற்கு யாண்டு 18வது முதல் இலச்சியத்து

3. உடையாரானூறு யோஜநை உடைய னாயனாற்கு அமுதுபடிக்கும் திருனுந்தா

4. விளக்குக்கும் இவூரில் பெரிஏரியில் வரா பற்றில் நன்சை நிலத்தில் முதல்

5. தரத்தில் அடைத்த குழி முன்னூறும் இராண்டாம் தரத்தில் தெற்க்கு அடைய

6. அடைத்த குழி இருனூறும் திருநந்தாவானத்துக்கு அடைத்த

7. குழி இருனூறும் ஆக குழி 700ம் இவூரில் இறைவார் புன்சையில்

8. சந்தி விளக்குக்கு அடைத்த குழி னாலா ஆயிரமும் ஊரில்

9. இருக்கும் குந்றம் அறிந்த பிளையாற்கு

10. பூசைக்கும் திருவிளக்குக்கும் முதல் தரத்தில் வடக்கு அடைய நன்சை குழி

11. நூற்று ஐம்பதும் இராண்டாம் தரத்தில் தெற்க்கு அடைய அடைத்த குழி முன்-

12. னூறும் இறைவார் புன்சையில் மேற்கு அடைய அடைத்த குழி இரண்டா

13. ஆயிரமும் அனைத்தா ஆயமும் இழக்க இறையிலியாகக் குடுத்தோம்

14. சந்திராதித்தைவரையும் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும்

15. வெட்டி கொள்க இவை வாணகோவரையன் எழுத்து சிங்களராயன் எழுத்து

## 21:3

**இடம்:** *மேலது கோயில் கருவறை மேற்குக் குமுதம்*

**காலம்:** *தாயினும் நல்ல பெருமாள் என்ற வாணகோவரையர்,யா10, =13ஆம் நூ.*

**செய்தி:** *திருப்பணிக்கும் பூசைக்கும் பெரிய ஏரி வாரப்பற்றில் நன்செயில் 1500 குழி நிலம்கொடுத்தமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ விலாடராயனும் குருகுலராயனும் புரவரியாரும் செய்ய கடவபடி

2. இலச்சியத்து உடையாரானூறு வோஜனை உடையனாயனாற்க்கு இவூரில்

3. பெரிஏரியில் வாராப் பற்றில் நன்சைய் நிலத்தில் முதல் தரத்தில் தாயிலும் நல்ல

4. பெருமாளுக்கு 10ஆவது முதல் அடைத்த நிலம் ஆயிரத்தை னூறும்

17. கரையிலே காறம் பசு-
18. வை கொன்ற தோஷத்தி-
19. லே போகக் கடவனாகவும்
20. இப்படிக்கு நாட்டவர்கள் செய-
21. ல் படிக்கு நாட்டு கணக்கு
22. ஆற்றூர் நாட்டு வேளார் கா-
23. மீசுவரன் எழுத்து.





# 35. நாகபட்டினம் வட்டாரக் கல்வெட்டுகள்

ஆ.ராஜா,தஞ்சாவூர்

35:1

**இடம்:** *நாகபட்டினம் மாவட்டம், வட்டம், நர்த்தனமங்கலம் விசுவநாதசுவாமி கோயில்.*

**காலம்:** *சாதாரண, ஆனி மாதம்,3=16ஆம் நூ.*

**செய்தி:** *நர்த்தனமங்கலத்தில் உள்ள விசுவநாதசுவாமி கோயிலுக்கு பயிற்செய்து கொள்வதற்காக சொக்கப்பமுதலியார் வடவூருக்கு உட்பட்ட ஆறு வேலி நிலக்கொடை.*

1. [சாதார்ண வருஷம் ஆ]
2. ணி மாதம் 3இல் நிறு[த்]-
3. தனமங்லம்
4. விசுவநாதசுவா-
5. மிக்கு பயிற் செயலுக்-
6. கு றாச ஸ்ரீ சொக்கப்ப மு-
7. தலியார் அய்யனவ-
8. ர்கள் கட்டளையிட்டது வட-
9. வூரில் வடகுட்பட்ட 400 மும் அய்யனார் .
10. ட்ட 400மும் அதுக்குள்பட்ட புஞ்-
11. சை நிலமும் நிலம் 6 வேலி
12. அந்த நிலம் ஆறு வேலியும் சந்-
13. திறாயித்த உள்ள வரை
14. க்கும் பயிற் செய்து அனுப
15. வி[த்]துக் கொள்ளவும்

35:2

**இடம்:** *மேற்படி, நாகபட்டினம் வரதராஜப்பெருமாள் கோயில் தாயார் சன்னதி கருவறை பின்புறச் சுவர்*

**காலம்:** *18ஆம் நூ.*

**செய்தி:** *இராமசுவாமி நாயக்கரால் திருப்பணி செய்யப்பட்டமை.*

*வலப்பக்கம்*

1. **தாகுறு சுவாமி நாயக்கர்**

**இடப்பக்கம்**

2. **. . . . . .**
3. **. . . . . .**
4. **வருஷம் ஆனி மாதம் 10 . புதன் கி-**
5. **ழமை பூசநக்ஷத்திரம்**
6. **யிந்த சுபதினத்தில் நாகை**
7. **வெளிப்பாளயம் முத்து சு-**
8. **வாமி நாயக்கரவர்கள் கு-**
9. **மாரன் இராமசுவாமி நா-**
10. **யக்கரால் செய்யப்பட்**
11. **டது 1857..**
12. **.....கொயந்**

35:3

**இடம்:** மேற்படி மாவட்டம், சீர்காழி வட்டம், திருமைலாடி சுந்தரேஸ்வரர் கோயில் சுப்ரமணியர் சன்னதி வடக்குபுறம் சுவர்

**காலம்:** *1895,மே.27*

**செய்தி:** ரெங்கநாதபுரம் வெங்கடாசலப்பிள்ளை மகன் வெங்கிடகிருஷ்ணபிள்ளை சதாசேவை.

1. **ஸ்ரீ சுந்தரேஸ்வர ஸ்வாமி சஹாயம்**
2. **1895 வருஷம் மே(ன்) மாதம் 27**
3. **ஸ்ரீறெங்கனாதபுரம் வெங்கடாசல பிள்ளை**

4. **குமாரர் வெங்கிடகிஷ்ணபிள்ளை**

5. **சதாசேவை**

## 35:4

**இடம்:** *மேற்படி மாவட்டம், மேற்படி வட்டம், மாதானம் முத்துமாரியம்மன் கோயில் மண்டபம் தெற்குபுற சுவர்*

**காலம்:** *கீலக, வைகாசி, 30, 1908*

**செய்தி:** *முத்துமாரியம்மன் திருக்கோயில், வடகால் சின்னவகுப்பு குமாரசாமி ரவுத்த மிண்டநயினார் அவரால் திருப்பணி முடிந்து கும்பாபிஷேகம் செய்யப்பட்ட*

1. **1908 கீலக வருஷம் வைகாசி மாதம் ஸ்ரீ**
2. **முத்து மாரியம்மன்கோவில் திரு-**
3. **ப்பணி வேலை முடி[த்]து மேற்படி மாதம் 30 தேதி**
4. **மஹாகும்பாவக்ஷேகம் செய்வித்-**
5. **து வடகால் சின்னவகுப்பு குமார-**
6. **சாமி ரவுத்த மிண்டநயினார் அவ**
7. **[ர். . . செய்யப்பட்டது]**

## 35:5

**இடம்:** *மேலது, நாகநாதசுவாமி கோயில் கோபுரம் வாயில் உட்புற சுவர்*

**காலம்:** *18-19ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *அடியாரின் பெயர்கள்.*

1. **சிதம்பரம் நித்தம்**
2. **சதாசெற்வை உ**

## 35:6

1. **சிதம்பரம் அல்லி**
2. **யங்கொதை ஆயியார் உ**

# 36. திருக்கடவூர் தேவாங்கர் செப்பேடு

**ச.கிருஷ்ணமூர்த்தி,** சென்னை

**இடம்:** *தியாகப்ப செட்டியார், திருக்கடவூர்*

**காலம்:** *சகம். 1524= பொ.ஆ.1602*

**செய்தி:** *தமிழகத்தின் பல ஊர்களிலும் வாழ்ந்த தேவாங்கர் என்னும் கன்னடச் செட்டியார்கள் மகமை வசூல் செய்து சோழமண்டலத்தில் திருக்கடவூரில் மடம் ஒன்று கட்டியமை. இதேபோல் பழனி, மதுரை போன்ற இடங்களில் இச்சமூகத்தினர் மடம் கட்டியதாக செப்பேடுகள் முன்னரே அறியப்பட்டுள்ளன.*

1. **சுபமஸ்து ஸ்ரீ மன்மகா மண்டேலேஸ்வரன் அரி அரராய வாடன் பாஷைக்குத் தப்புராய கண்டன் மூவராய கண்டன் கண்-**
2. **டனாடு கொண்டு கொண்ட னாடு குடாதான் பூறுவ தெ1ஷ்ஷண பச்சிம் உத்தர சது சமுத்திராதிபதி2 இம் மண்டலமும் கொண்**
3. **டு ஈழமுந் திறைகொண்ட இராசாதிராசன் இராசபரமேசுரன் இராச மாற்தாண்டன் இராசகெம்பீரன் இரசாக்கள் தம்பிரான்**
4. **கட்டாரி சாளுவன் இளவரசர் மணவாளன் வடவரசர் குலகாலன் விருதரைக பாடன் விருது மாத்-**
5. **தாண்டன் மத்தப்பிறமந்தன் சித்தப் பிறசித்தன் துட்ட நிக்கிறக சிட்ட பரிபாலன் துலுக்க தளவிபா-**
6. **டன் துலுக்கர் மோகந் தவிழ்த்தான் ஒட்டிய தளவிபாடன் ஒட்டிய மோகஞ் தவிழ்த்தான் தொண்டைமண்-**
7. **டல மனோபயங்கரன் அவகண்டராய மகுடவிபாடன் நவகோடி நாராயணா சிவபூசாதுரந்தரன் சிவசமய**
8. **பரிபாலகன் சனசுத்த சிவராசர் சம்பண்ணன் பினணையென்னும் லோபியர்கள் கண்டன் எண்டி**
9. **சாமுகன் இந்திர சுரத்தரணன் மத்தகவீரன் சுத்த பரிநகுலன் அகண்டிதப் பிறதாவ அபங்குற பிறதி**
10. **பதி பாண்டி மண்டலப்பற மாசனங்கொண்டு சோழ மண்டல துருவ மாற்தாண்டன் தொண்டை மண்டல ஸ்த-**
11. **பானாசாரியன் ஆழி சூழ் உலகனைத்தும் ஒரு குடைக்கீழ்ராச்சியம் பண்ணி கெசவேட்டை கண்டருளி-**

12. ய ஸ்ரீ வீரநரசிங்க தேவ மகாராயர் சதாசிவ தேவ மகாராயர் மல்லிகா[ர்]ச்சுன தேவ மகாராயர் புயவலிரா-

13. யர் அச்சுத தேவ மகாராயர் கிஷ்ணதேவ மகாராயர் ராமசந்திர தேவ மகாராயர் ஸ்ரீ வேங்கிடபதிதேவ

14. மகாராயர் பிறுதிவி ரச்சியம் பண்ணி அருளாநின்ற சகாற்தம் 1524 இதன் மேல் செல்லா

15. னின்ற சுபகிறீ சம்வச்சரத்து வைய்யாசி மாதம் 6 உத்தராயணத்து மேஷானாயத்து பூறுவ ப-

16. ட்ஷத்து கிறித்திகையும் ஆதித்த வாரமும் பெற்ற அததி நக்ஷத்ரமும் அமுதயோகமும் சிறி சோழ

17. மண்டலம் காவேரியாற்று தெற்கு சந்திர மவுலியாற்றுக்கு வடக்கு தேவமாணிக்க ந-

18. ல்லூ[ர்] உள்பட்ட உய்ய கொண்ட சோழ வளனாட்டில் திருவாரூர் சாவடியான வடகா-

19. ல் திருப்புகலூர் பற்றுக் கீழ் சீமையில் திருக்கடவூரானது கச்சி மஞானம் காசிமஞா-

20. னம் கடவூர் மாஞானம் மென்று சொல்லபட்ட திருமஞானத்துக்கு மேல் பாரிசமும் தில்

21. லையாளி என்று சொல்லபட்ட தேவஸ்தாநத்துக்கு வடபாரிசமும் சூரற்மனை சங்கரித்த கு-

22. மார சுவாமியார் எழுந்தருளி இருக்கிற தேவஸ்தானத்துக்கு வடகிழக்காகவும் திருச்ச-

23. மன்பள்ளி என்கிற காவேரி சூழ்ந்த குலத்துக்குத் தென்கிழக்காவும் அம்பனாடன்தி[க்கு]

24. தென்பாரிசமாகவும் வீரசோழ வதிக்கு வட பாரிசமும் இப்படி தேவத்தாருங்களும் நதியளும்

25. சூழ்ந்திருக்கப்பட்ட திருக்கடவூராந் தலத்தில் வாசம் பண்ணப்பட்ட கன்னடியச் செ-

26. ட்டியள் லிங்கி செட்டியள் காமாட்சி செட்டியார் காரிப்ப செட்டியார் உள்ளிப்பாட்டர்-

27. க்கு மேல்படி ஊரிருக்கும் ஞானமுத்தி குருக்களேன் என்னுடைய மடம் விக்கிறயம்

28. பண்ணிக் குடுத்த பட்டயம் என்னுடைய மடத்துக்கு வடக்கு கைக்கோளர் மடத்துக்கு மேற்கு தெ-

29. ற்கு வடக்கு நூற்று நாற்பத்தஞ்சடியும் கிழக்கு மேற்கு இரு நூற்று அன்தடியும் மேல்னோக்கின

30. தென்னமரமும் கீழ் நோக்கின கிணறும் இந்த மலையில் கண்ட நிஷேபமும் கூட இவர்களுக்-

31. கு மத்தியத்தர் நிர்ணயம் பண்ணின அன்றாடகன் வழங்கும் வாசிபடா நற்சக்கரங் குளிகை

32. 100 இந்தப்பணம் னூறும் ஒருகிழிபடனோட்டக்காரன் பார்வையாக பற்றிக் கொண்டப-

33. டியினாலே இதுவே விலை ஓலையும் தாம்பிர சாதனமுமாக கொள்ளக் கடவராகவும் இதுக்கு

34. யாதொரு விக்கினங்கள் உண்டானால் னானே தீர்த்துத் தரகடவேனாகவும் இந்த தலத்து மா-

35. ற்கம் ஆதினாயகர் அமுற்தகடயீசுரர் மேற்குப் பார்த்த சன்னதியும் கோபுர வாசலில் கள்ள-

36. வனப்பிள்ளையார் கோடியில் வீரட்டப்பிள்ளையார் மேற்குக் கோடியில் வெள்ளைப்பிள்ளை-

37. யார் வடகீழைக் கோடியில் சோமீசுரப்பிள்ளையாரும் தெஷ்ஷினாகோடியில் பொய்-

38. யாத பிள்ளையாரும் கோடிக்கு மேல் பாரிசத்தில் ஆணக் குளத்தங்கரையில் பிறுமீசுரரும் மறுபக்கம்

39. தென்பறிசத்தில் ராமனாதிசரமும் அய்யன்துக்கையம்பதினேமு பிடாரியும் இரண்-

40. டாம் பிறகாரத்தில் கபாலபுற்கரணியும் சூரியபுற்கரணியும் பரபுற்கரணியும் திருமெ-

41. ஞ்ஞானத்துக்கும் திருக்டவூருக்கும் நடுவாக மாற்கண்டேய சுவாமியை சுவூரசை ப-

42. ண்ணின தீர்த்த குளமும் முப்பத்து முக்கோடி தீர்த்தத்துக்கு சரியான இந்த னாலு தீர்த்தமும் இதும்

43. திருச்சுத்தில் ஏற்கால தேவர் இரண்டு மூற்தியளும் ஆதி வில்லவனாதருமு தெற்குப்பாத்-

44. த சன்னதி இயம சங்காரம் பண்ணின காலகாலனாயகரும் இவர்களில் அதிகராக இருக்-

45. கசிப் படாநின்ற அமுதகட ஈசுரரும் இரண்டாம் பிறகாரத்தில் கிழக்கு பாத்த சன்னதி வாரா

46. முலை அம்மையும் இப்படிக் கொத்த தேவஸ்தானத்தில் சித்திரை மாதம் பூறுவ பக்கிஷ-

47. த்தில் திருவிழா கண்டருளுகிற னாளில் கன்னடியச் செட்டியார் மடத்தில் சோமீசுர-

48. ப் பிள்ளையற் சன்னதியில் திருக்கண்சாத்து அன்னக் கொடி ஏறின நாள் முதல் தே-

49. ரோட்டம் கழிக்கந்தனையும் தினம் ஒன்றைக்கு அன்பது தம்பிரான்களுக்கு மாயீசுர பூ-

50. சையும் மற்றதிதியளில் பசித்திளைத்து வந்தபேர்களுக்கும் அன்னப் பால் நீராகாமுங்

51. கட்டளையிட்டு திருக்கடவூரில் மாற்கண்டீசுரம் மாற்கண்டிய பண்டாரத்துக்கு இந்-

52. த மடதன்மமும் மாயீரசுபூசையும் தவிழ[ரா]மல் நடத்திவரச் சொல்லி சோழ மண்டல-

53. த்தில் உள்பட்ட சாதியார் கன்னடிய செட்டியற் மாற்கண்டேயப் பண்டாரத்தை கட்டளை

54. யிட்டபடியினாலே இந்த மட தமம் நடக்க வேண்டி சோழ மண்டலம் தொ-

55. ண்டை மண்டலம் பாண்டி மண்டலம் மக[த] மண்டலம் இந்த னாலு மண்டத்தில் உள்

56. பட்ட கன்னடிய செட்டியள் கண்டர் கண்ட கண்ட பேரண்ட பெரணி புர வலாதீசுர சுற்ச

57. சுத்த சிவராச சம்பன்னர் சிவசமைய பரிபாலகர் சிவபூசா துரந்தரர் சோமீசுர

58. திவ தேவ ஸ்ரீ பாத சேகரரான கன்னடியச் செட்டியள் சாதி மார் புண்ணியமாகக்

59. கட்டளையிட்டபடி வருஷம் ஒன்றுக்கு தறிக்கு அரைப்பணமும் கலியாணத்துக்கு ஒரு

60. பணமும் கட்டளையிட்ட படியினாலே புத்திற புத்திற தலை முறையும் இத்தன்மம் நடத்தி

61. வரக்கடவராகவும் இந்த தன்மத்துக்கு யாதாமொருவர் இதம் அகுதம் பண்ணினவர்-

62. கள் கங்கைக் கரையில் தன்மாத பிதாவையும் காராம் பசுவையும் வதைத்த பாவ-

63. த்திலே போகக் கடவராகவும் இந்த சாதனத்துக்கு ஓலைக் குற்றம் எழுத்துக்குற்றம் வாச-

64. கப் பிழை வரிமாறாட்டம் எக்குத்தமும் குத்தமென்று சொல்லக் கடவதல்ல வாகவும் இ-

65. ந்தச் சாதனம் எழுதிநமைக்கு ~ இவை நீலா பொம்மு செட்டியார் மகன் கைபூஷ-

66. னன் எழுத்து உ குரு தன்மம் உ இதுக்குச் சாழ்ச்சி தமிழாகரத்தம்பிரான் உ கால-

67. ர் பட்டர் உ காங்கையா பிள்ளை மருதூருடையார் வல்லமுடையார் உ கோ-

68. யிற் கணக்கர் உ பஞ்சாஷ்ஷரனாதர் பாதுகாவல் பொம்மனாயக்கர்

# 37. கோட்டாறு செட்டு சமூக மரகதவிநாயகர் கோவில் கல்வெட்டு

அ.கா.பெருமாள், நாகர்கோவில்

**இடம்:** *கன்னியாகுமாரி மாவட்டம் நாகர்கோவில் கோட்டாறு செட்டு சமூகத்தினருக்குச் சொந்தமான மரகதவிநாயகர் கோவிலின் உள்நடையின் இடப்புறமுள்ள கன்னிமூலை விநாயகர் கல்சிற்பத்தின் அருகில்.*

**காலம்:** *சாலிவாகன சகாத்தம் 1619, கொல்லம் 827, மார்கழி,26 வெள்ளிக் கிழமை. = 1697. ஜனவரி.*

**செய்தி:** *கோட்டாறு செட்டு சமூகத்தைச் சேர்ந்த செட்டு வெண்டவளந்தான் தீத்தான் மூப்பனார் இவ்விநாயகர் படிமத்தை எழுந்தருளிவித்தமை. கல்வெட்டில் குறிப்பிடப்படும் நெடுந்தெரு இப்போது செட்டித்தெரு என அழைக்கப்படுகிறது. இச்சமூகத்தினரின் பின் ஒட்டாக செட்டியார், மூப்பனார், பிள்ளை ஆகியன வழங்கி வருகிறது. தொடக்கத்தில் 872 எனக்குறிக்கப்படும் கொல்லம் ஆண்டு கல்வெட்டு முடிவில் 862 எனக் குறிக்கப்பட்டுள்ளது.*

1. **சகாத்தம் 1619 இதன்**
2. **மேல் செல்லா நின்ற கொல்லம்**
3. **872 வருடம் மார்களி மாதம் 26 தியதி**
4. **வெள்ளியாட்சையும் உரோ-**
5. **குணியும் பூர்வ பக்கிசத்து**
6. **துவாதசியும் புலிக்கரணமும்**
7. **சுபவேளையும் பெற்ற இன்னாள்**
8. **கோட்டாறு நெடுந்தெருவில்**
9. **செட்டு வெண்டவழந்தான்**
10. **தீத்தான் மூப்பன் 86**
11. **2**

# 38. அயோத்தியாப்பட்டினம் கல்வெட்டு

சி.வீரராகவன்,விழுப்புரம்
பொன்.வெங்கடேசன்,ஆறகளூர்
வை.கலைச்செல்வன், கே.சீனிவாசன்,சேலம்

**இடம்:** சேலம் மாவட்டம் அயோத்தியாப்பட்டினத்தில் ஆஞ்சநேயர் கோயில் தெருவில் வீதியின் நடுவில் இருக்கும் பலகைக்கல்

**காலம்:** *17*ஆம் நூ

**செய்தி:** வெண்மொசி நாராயண செட்டி என்பவர் அயோத்தி யாப்பட்டிணத்தில் கிணறு வெட்டி கொடுத்தமை

1. ஆனந்த
2. வருஷ [ம்]
3. அயோ-
4. த்தியாப்பட்டி-
5. ணத்தில்
6. இருக்கு-
7. ம் நகர கிணரி-
8. ல் வெண்மொ-
9. சி நாராய-
10. ந செட்டி உ.



# 39. இடையன்வயல் கோபாலமடத்துச் செப்பேடு

**வள்ளி சொக்கலிங்கம்,** காரைக்குடி

**இடம்:** *சிவகங்கை மாவட்டம், திருவாடானை வட்டம், இடையன் வயல், பெருமாள்கோன் வழியினரிடம் உள்ள செப்பேடு*

**காலம்:** *கிழவன் ரெகுநாத சேதுபதி,சகம் 1628,விய, தை,= பொ,ஆ,1706,*

**செய்தி:** *'பெருமான்கோன்' என்பவருக்கு 'கோபாலமடம்' என்ற பெயரில் ஒரு மடத்தை நிறுவி அதனைப் பரிபாலனம் செய்வதற்காக 'இடையன் வயல் என்ற ஊரையும் மேலும் சில வருவாய்களையும் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது, இடையன்வயல் ஊரைச் சுற்றி உப்பளங்கள் இருப்பதால் உப்பளங்களிலிருந்தும் மடத்துக்கு உப்பாக வருவாய் கொடுக்கப்பட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது, மேலும் சேதுமார்க்கத்தில் அமைந்துள்ள அம்மடத்திலிருந்து யாத்திரிகர்களுக்கும் வழிப்போக்கர்களுக்கும் நீர்மோர், தபன கஞ்சி (சூடான கஞ்சி) , உப்பு, ஊறுகாய் ஆகியவை கொடுக்கப்பட வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது, இரண்டு ஏடுகளாக உள்ள இச்செப்பேட்டின் இறுதியில் முப்பது ஆண்டுகள் கழித்து, பெருமான் கோனுக்கு சருவமானியமாக மீண்டும் இத்தருமம் புதுப்பித்துத்தரப்பட்டுள்ள செய்தி கூறப்பட்டுள்ளது, இடையன்வயலில் 'இராமர் பாதம்' உள்ள கோயிலும், அருகில் ஒரு மடமும் சிதைந்த நிலையில் இன்று காணப்படுகிறது,*

## முதல் ஏடு முன்புறம்

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாற்த்தம் 1628 இதன்மேல் சென்ற**
2. **விய நாம சம்வக்ஷசரத்து உத்தராயணமும் ஏமந்த ருதுவும் மகரமா**
3. **சமும் புதவாரமும் திருவோண நட்செத்திரமும் அமாவாசையும்**
4. **விதிபாத நாமயோகமும் சகுனிகரணமும்பெற்ற மஹா உதைய புண்ணி**

5. ய காலத்தில் தேவைநகராதிபன்சேதுமூல ராச்சிய துரந்தரன் ரா
6. ம நாதசுவாமி காரியா துரந்தரன் சிவபூசா துரந்தரன், பரராச
7. சேகரன் ரவிமன் ரவிமாத்தாண்டன் ரவிகுலசேகரன் ஸ்வஸ்தி ஸ்ரீமன்
8. மகா மண்டலேசுரன், அரசராவண ராமன் அடியார் வேளைக்காரன், பா
9. தழ விபாடன் உரிகோலசுரதானன், அந்தமபா கண்டன், ஸஸவாமித்து
10. ரோகியள மிண்டன், சாடிக்காறர்கள் மிண்டன், கண்ட நாடு கொண்டு கொ
11. ண்ட நாடு குடாதான், தாலிக்கு வேலி, சத்துருவாதியள மிண்டன்
12. தொண்டியந்துறை காவலன், துரகரெ பந்தன், வைகை வழ
13. நாடன், வன்னியராட்டந் தவிழ்த்தான், சொரிமுத்து வன்னியன்
14. வீரவெண்பாமாலை இளஞ்சிங்கம் தழஞ்சிங்கம், பகைமன்னர் சிங்கம்
15. ஆற்றுப்பாச்சி கடலிற்பாச்சி மதப்புலி அடைக்கலங்காத்தான், வீரை
16. வழநாடன் வேதியன் காவலன் வீரதண்டை சோமதலைவிளங்கு மிருதாளி
17. னான், குனமனைய மேருவில் குன்டு வளைகுனில பொமித்தவன், திலதநுதல்
18. மடமாதர் மடலெழுத வருசுமுகன், சிந்தித்தகாரியம் செயம் ப
19. ண்ணு மனோகரன், புனுக்குவார் கண்டன், இவுளிபாவடி மிதித்
20. தேறுவார் கண்டன், வீரலட்சுமி காந்தன், விசையலட்சுமி சம்ப
21. ன்னன், சகலசாமிபிறாச்சிய லட்சுமிநிவாசன், பட்டமானங்
22. காத்தான், துட்டாயிர கண்டன், பரராசசிங்கம், குடைக்குக் க
23. ன்னன், பரிக்கு நகுலன், சத்திய பாஷா அரிச்சந்திரன், பரத நாட
24. கப் பிறவீணன், கருணாகடாட்சன், பாதள விபாடன், உரிகோல
25. சுர தானன், இவுளி பாவடி மிதித்தேறுவார் கண்டன், பனுக்குவார்
26. கண்டன, பரராச சேகரன், துகவூர் கூற்றத்துக் காத்தூரான குலோ
27. த்துங்க சோழ நல்லூர்க் கீள்பால் விரையாத கண்டனிலிருக்கும்

## முதல் ஏடு பின்புறம்

28. சேதுபதி வங்கிஷாதிபனான ஸ்ரீ ஹிரண்யகெற்பயாசி ரவிகுலசேகர
29. ரகுநாத திருமலைச் சேதுபதி காத்த தேவரவர்கள் புத்திரன் ஸ்ரீ
30. ஹிரண்யகற்பாயஜி ரகுநாதக் காவேரி நிர்மித்த ரகுநாத சேதுபதி
31. காத்ததேவரவர்கள் ஸ்ரீமந் நாராயண சுவாமியார் பத்தசபை
32. பிறிய பரமசுவாமியாரஎழுந்தருளி வந்து நந்தகோபாலனுக்கு
33. காட்சிகொடுத்தருளிய தம்பி உடையார் தன்மசத்திரத்துக்கு
34. தெட்சணபாரிசம் தீத்தாண்டதானத்துக்கு உத்தரபாரிசத்திலே
35. பெருமான்கோனைத் தன்மமடம் கட்டிவிக்கச்சொல்லி திரு

## இரண்டாவது ஏடு முன்புறம்

36. வுளமானபடி நாமும் உத்தாரங் கொடுத்தும் மடதன்மமும் கட்டிவிச்சு அந்த மட தன்ம
37. தன்மசாசன பட்டையங் குடுத்ததாவது, இந்த மடத்திலே நீர்மோரும் தபன
38. க் கஞ்சியும் உப்பு ஊறுகாயும் குடுத்து தன்ம நடப்பிக்கச் சொல்லிக் கட்ட
39. ளையிட்டது, நம்முடைய ஆதினத்திலே கொம்புதொழில் வைத்த போயிண்ட மா
40. சிவியார் குடைக்காறன் தீவெட்டிக்காறன், ஆலவட்டக்காறன் ஒட்டக காறி
41. றன் டக்கயூன் இந்த வகைப் பேர் எல்லாம் வருஷத்திலே பேரரிக்கத்துக்கு
42. இரண்டு பணமும் சிவியான மற்ற பேற்கெல்லாம் சனத்துக்கு ஒரு பணமும் நா
43. ட்டு இயைடரகுடி சேந்திருந்த கனகிறாமத்துக்கு ஊருக்கு இரண்டு பண
44. மும் கொஞ்சக் கிறாமமாய் இருக்கிறதுக்கு ஊருக்கு ஒரு பணமும் குடுத்து ந-
45. டப்பிக்கச் சொல்லி பெரிச்சி போயிண்டன் தன்மபோயிண்டன் ஆண்டி
46. போயிண்டன் அழகிச்சி போயிண்டன் பூவபோயிண்டன் குடைக்காற

47. வெயிலான் சேருவைக்காறன் சின்னய்யா வகை பொரிக்கம வீராண்டி போயிண்டன்

48. உடையா போயிண்டன் அழகிச்சி போயிண்டன் கலிதீத்தா போயிண்டன் ஒச்சா போயிண்டன்

49. முருகிச்சி போயிண்டன் கலிதீத்தா போயிண்டன் சங்கரமூத்தி போயி-

50. ண்டன் அன்னதாரி போயிண்டன் தீவெட்டிக்காற குப்பையாண்டி ஆவுடையான்

51. கீதராம மணியம் உலகப்பன் கிறாம வழிக்கோன்கள் முதலான பேரையெல்லாம்

52. கோபால மடதன்மத்துக்கு இன ஒப்புரவாக குடுக்கச் சொல்லி உத்தா-

53. ரங்கொடுத்து இந்த தன்மத்துக்கு தம்பி உடையார் விட்டுக்கொடுத்த இடை-

54. யனேந்தலுக்கு எல்லை எட்டிசேரி வயலுக்கு கிளக்கு ரகுநனாத சமுத்திரத்து

55. வயலுக்கு தெற்கு சாத்தன்வயலுக்கு மேற்கு பீயாத்துக்கு வடக்கு இன்னா

56. ன்கெல்லைக்கு உள்பட்ட இடையன்வயலும் எட்டிசேரி நஞ்சையில் அரைமா

57. நிலமும் களக்குறுணியும் ரகுனாதசமுத்திரத்து வயலில் அரைமாநிலமும் கள கு-

58. றுணியும் மருங்கூர் வயலில் அரைமாநிலமும் களக்குறுணியும் பட்டமடங்கலத்தில்

59. அரைமாநிலமும் மானவனேரியில் களக்குறுணியும் இடையனேந்தலில் ஒரு பள்ளுக்கு

60. இறைவரி ஊழியம் உலுப்பை இல்லாமல் சறுவமானியமாகவும் தீத்தாண்டதானத்து-

61. ப்பளத்தில் நூதனமாய் வெட்டிக்கண்ட இரண்டு உப்புப் பாத்தியும் உடை

62. ய மாறகப் பாதையில் சீமை உள்நாடுள்பட தீத்தாண்டதானத்தளம் அரசனேரி அ-

63. ழம் கலியனேரி அழம் இந்த அழத்திலே வருகிற உப்பு எருதுக்கெல்லாம் எருவை

64. 1க்கு நாழி உப்பும் பெட்டிச் சுமைக்கு ஒரு சிறங்கை உப்பும் கழுதைப் பொ-

65. திக்கு ஒரு சிறங்கை உப்பும் இதெல்லாம் பிட்சைத் திரவியமாகக் கட்டளையிட்ட

66. படியினாலே ஆற்சந்திராற்தமாக எண்ணெண்ணைக்கும் அனுபவித்து...

67. ...... ...... ...... ...... ......... .............................................

## இரண்டாவது ஏடு பின்புறம்

68. ............... பரிபாலனம் பண்ணி ......வாராகவம் ..., இந்த தன்ம

69. தன மொருதர் பரிபாலனம் பண்ணினபேர் காசியிலேயும் ராமேசுரத்திலே

70. யும் புண்ய க்ஷேத்திரங்களிலேயும் அனேகம் கோடி சிவலிங்க பிறதிட்டையும்...,

71. டையும் அன்னதான மகாதானங்களும் பண்ணின சுகுந்தத்தை யடைவாராகவும்

72. இந்த தன்மத்துக்கு அகிதம் பண்ணினவன் கங்கையிலே ராமசேது தனுக்கோ-

73. டியிலே சிவதலம் விட்டுனு தலங்களிலே அனேகம் பிராமணரையும் ஸ்த்திறிய

74. ளையும் மாதாபிதாவையும் வதைபண்ணின தோஷத்திலே போகக் கடவாராகவும்

75. இந்த சாசனம் எழுதினேன் திருஉத்தரகோச மங்கையிலிருக்கும் சில்பாராசிரியரில்

76. வீரப்பாசாரி மகன் ஆதிவீரன் லிகிதம் உ சுபமஸ்து உ குருப்யோ நம:

## [புதுப்பிக்கப்பட்ட செய்தி]

1. சித்தாதி ஸ்ரீ பங்குனி மீ யகஉ உலகப்பன் ராமலிங்கன் மங்கனாத இடையன்மடம் பெருமான் கோ-

2. னுக்கு பட்டையம் குடுத்தபடி தன்பேரில் ..., புண்ணிமாக உத்தாரப்படி இடையன்

3. மடத்துக்கு மோர்வைக்கச் சொல்லிச் சறுவமானியமாகக் கட்டளையிட்டோம், அந்தப்படி

4. க்குத் தற்மம் பரிபாலனம் பண்ணிக்கொண்டு சுகத்திலே இருக்கவும், இந்த தற்மத்து

5. க்கு யாதாமொருவன் அகிதம் பண்ணினவன் கெங்கைக் கரையிலே காராம்பசுவையும்

6. மாதாபிதாவையும் கொன்ற தோஷத்திலே போகக்கடவாராகவும், இடையன் மடம் கோ-

7. னுக்கு உலகப்பன் ராமலிங்கம் மங்கனாதன் இந்த மூன்று வகைப்பேரும் பட்டயங் குடுத்-

8. தோம், இவர்கள்சொல்படி இந்த பிறகாரத்துக்குப் பட்டைய மெழுதினேன்.

# 40. முள்ளிக்குளம் பாளையம் செப்பேட்டு நகல்

ஆ.திருநீலகண்டன்,இலஞ்சி

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டம், சங்கரன்கோவில், புளியங்குடி சாலையில் அமைந்துள்ள முள்ளிக்குளம் கிராமத்தில், பண்ணைவீடு சு.பாண்டியக்கோனார், வழக்கறிஞர் சு.இராமசாமிக்கோனார் ஆகியோரின் குடும்ப ஆவணத் தொகுப்பு*

**காலம்:** *சகம்-1687, கொல்லம்-939, ஆவணி 11 = பொ.ஆ 1764 -1765*

**செய்தி:** *முள்ளிக்குளம் பாளையத்தின் அரசுரிமையை, அதன் வழி வழி பாளையக்காரர் களிடமிருந்து கைப்பற்றிக் கொள்ளும் முயற்சியை திருமாந்தத் தலைவனார், சூரசங்குத் தலைவனார் ஆகிய இருவரும் மேற்கொண்டனர். இம்முயற்சிக்கு, முள்ளிக்குளம் பாளையத்தின் கணக்கராக (நாட்டுக்கணக்கு) இருந்த நமச்சிவாயம் பிள்ளை உறுதுணையாக விளங்கினார். இதன் பொருட்டு, அவர், நாட்டுக்கணக்கர் பதவியையும் அதன் வழி கிடைத்து வந்த நிலமாணியங்களையும், பிற வருவாய்களையும் உதறிவிட்டு தலைவனார்களோடு சேர்ந்து கொண்டார். நமச்சிவாயம் பிள்ளை செய்த இவ்வுதவிக்குப் பதிலாக, தலைவனார்களால் அவருக்கு வழங்கப்பெற்ற நிலமாணியங்களும் அவற்றுக்கான எல்லைகளும் இச்செப்பேட்டு நகலில் விவரிக்க ப்பட்டுள்ளன.*

உ

**ஸ்ரீ ராம ஜெயம்**

**சாலிவாகன சகாத்தம் 1687க்கு மேல் செல்லா நின்ற கொல்லம் 939க்கு ஆவணி மீ 11 ..... சுக்கிரவாரமும் திருவோண நட்சத்திரமும் பூருவபட்சத்துத் திசமியும் கூடிய ஷ சுபதினத்தில் திருமலைபுரம் இந்திரத் திருமாந்தத் தலைவனாரவர்களும் சூரசங்குத் தலைவனாரவர்களும் முள்ளிக்குளம் நாட்டுக்கணக்கு சீவலப்பிள்ளை குமாரன் நமசிவாயம் பிள்ளைக்கு எழுதிக் கொடுத்த தாம்பூர சாதனம். முன் மாமூல் அரமனையில் நடந்துவந்த நாட்டுக்கணக்கு மாணிபம் நஞ்சையில் அஞ்சு கோட்டை விரைப்பாடும் புஞ்சையில் மூன்று கோட்டை விரைப்பாடும் புள்ளிப்பணம் சீட்டுவரி நாட்டுக்கணக்குள்ள ஊதிபம் நீக்கி நமசிவாயம் பிள்ளை நம்ம ஆதிக்கத்துக்கு**

நிரம்பவும் உபகாரமாய் நடந்து கொண்டு வந்தபடியினாலேயும் நமக்கு முள்ளிக்குளம் கிராமம் அரமனைக் கிராமமாகயிருந்த பூமியை முன் மாமூல் பாளையக்காரர் பூமியென்றுருதிபாணம் அதிகாரம் பண்ணுகிற ராசமானிய ராசஸ்ரீ சாதியவர்கள் ஷம ஷமத்தில் அறிக்கை செய்து நெடுகிலும் காத்திருந்து பிரெத்தினம் பண்ணி முள்ளிக்குளம் கிராமம் சேகரம் ஆதிக்கத்துக்கு நிலைநாட்டுப் பண்ணிக்கொடுத்தபடியினாலே நமசிவாயம் பிள்ளைக்கு நாமும் உபய ராணுவமும் திருவாய்மொழியம்மன் கோவில் சன்னிதியில் நம்பிக்கை உறுதி பண்ணிக்கொடுத்த மேனர்க்கு பேய்க்குளம் நஞ்சையில் நிலமாணிபம் கைக்குள சமுசு கானடவி தெருவுக்கும் புளியமரத்துக்கும் தெற்கு, முடுக்கங்கரை தென்வடல் நடவரம்பு ஊடுபாதைக்கும் கிழக்கு வீரமுடிதாங்கினாத்தேவன் ஊரணி மேல்கரைக்கும் நல்லதண்ணீர் கிணத்துக்கும் மேற்கு நஞ்சையில் நில மாணிபம் ஒரு ........... படிக்கு அஞ்சு கோட்டை விரைப்பாடும் ............. ஈவு நிலமாணிபம் ரெண்டு கோ[ட்டை வி]ரைப்பாடும் சர்வமாணிபமாக விட்டுக்கொடுத்தபடியினாலே எங்களாதிக்கங்கள் பரியந்தமும் சந்திராள் சூரியாள் கல்லுங் காவேரி பூமி, ஆகாசமுள்ள பரியந்தமும் நமச்சிவாய பிள்ளை புத்திர பௌத்திர பாரம்பரியந்தமாய் நஞ்சை புஞ்சை மாணிபமும் ஆண்டனுபவித்துக் கொண்டு சுகத்திலிருக்கும்படியாய் எழுதிக் கொடுத்த சாஷநம் இந்த சாஷநத்திலெழுதிய நஞ்சை மாணியம் புஞ்சை மாணிபத்துக்கு யாதாமொருத்தர் விகாதவிக்கினம் பண்ணினால் கெங்கைக்கரையில் காராம்பசுவைக் கொன்ற தோசத்திலடைவாராகவும். இந்தப்படிக்கு தாம்பூர சாஷநமெழுதிக் கொடுத்தோம். திருமாந்தத் தலைவனாரவர்கள். ஒப்பம்.

கோட்டியப்பர்சுவாமி துணை

# 41. திருமூர்த்திமலைக் கல்வெட்டு

க.பன்னீர்செல்வம்,சென்னை

**இடம்:** *கோயம்புத்தூர் மாவட்டம், உடுமலைப்பேட்டை வட்டம், திருமூர்த்திமலை திருமூர்த்திசுவாமி சிலையின் முன்(மு.ப இ.க.ஆ.186/1927).*

**காலம்:** *பொ.ஆ.1793 ஆம் ஆண்டு, எத்துலப் நாயக்கர் என்ற உள்ளூர் ஆட்சியாளர்.*

**செய்தி:** *அமண சமுத்திரம் சீர்மையில் எத்துலப்ப நாயக்கர் என்ற உள்ளூர் ஆட்சியாளர் ஊரில் பெண் பிள்ளைகளின் கலியாணத்திற்கு அம்மணேசுரசுவாமிக்கு வரியாக நான்கு பொன் கொடுப்பதுடன் அந்தப் திருமணமாகும் பெண்பிள்ளைக்கு மாடு, கண்ணு சீதனம் கொடுக்க வேண்டும் எனக் கட்டளையிடும் செய்தி.*

1. **பரிதாபி வருஷம். . . . இம்முடிப்பட்டத்துக் கணக்காண்ட எத்துலப்ப -**
2. **னாயக்கரவர்கள் காளையில் போட்ட கல்வெட்டு அமணேசுர சுவாமியுட**
3. **பூமி அமணசமுத்திஞ் சீர்மையில் யாதாமொருத்தன் துரைத்தினத்துக்கு வந்தா**
4. **லும் அவரிட பெண்பிள்ளைக் கலியாணஞ் செய்தால் அந்தப் பிள்ளைக்கு**
5. **நால் பொன்னுக்குள்ளாக கடமை போதவும் மாடு கண்ணு சீதனங் குடுக்குவும் யிந்த தலத்துக்கு**
6. **முறையாருக்குப் பிள்ளை குடுத்துத் தலத்திலேயும் யிருந்தால் நாலு பேர் துரைமக்கள் வைத்த**
7. **மானியம் விட்டு நடப்பிவிக்கவும் இதுக்கு மிகை யாதாமொருவன் பிள்ளைப் பிரியத்துக்கு எத்தாயுடமை**
8. **போட்டாலுங் கோபாதமத்தனை பூமி சீதனங் குடுத்தாலுமவன் கெங்கைக்கரையிலே**
9. **காராம்பசுவைக் கொண்ண தோஷத்திலே போவான் அதிகாரத்தில்ச் சிறிது திரவிய மெச்சாகச்**

10. சம்பாதிச்ச பாகத்திலே புவகடவதாகச் செய்து தான தர்மஞ் செய்து தீர்க்கமாய்

11. நடந்து கொண்டவனுக்குக் காசியில் தீர்த்தமாடின பலனுண்டு யிப்படி

12. மேனிகண்டிருந்து மீதி நடப்பிவிக்க கிறமே இந்தவத்துக்கு....

# 42. ஆறகழூர் கன்னட கல்வெட்டு

**பொன்.வெங்கடேசன்,ஆறகழூர்**

**இடம்:** *ஆறகழூர் தேரோடும் வீதியில் டைலர் மணி என்பவரின் வீட்டின் பின்புறம் உள்ள தூண்*

**காலம்:** *18 ஆம் நூ, கன்னடம்*

**செய்தி:** பெயர் குறித்துள்ள

1. **காமநாத**
2. **மாணிக்ய**

# 43. கானூர்புதூர் சுமைதாங்கிக் கல்வெட்டு

**ச.மு.ரமேஷ்குமார்,** அவிநாசி
**க.பொன்னுசாமி,** பல்லடம்

**இடம்:** *அவிநாசி ஒன்றியம், கானூர்புதூர், அரசு உயர்நிலைப் பள்ளி அருகே காணப்படும் சுமைதாங்கிக்கல்*

**காலம்:** *கலியுக வருடம் பிழையாக 5903 என எழுதப்பட்டுள்ளது. விரேதிகிருது, பங்குனி ,23 என உள்ளது. 4903 ஆக இருக்கலாம்=பொ.ஆ.1802*

**செய்தி:** *சுமைதாங்கிக்கல் வைத்தமை*

1. **கலியுகாதி 5903 வரு**
2. **விரோதிகிருது பங் குனி**
3. **மீ 23 தேதி ஶ்ரீராமஜெயம்**
4. **கானூர்புதூர் செவழை செட்டியார்**
5. **மகன் காழி செட்டியார் செமை தாங்கிக்கல்**

# 44. எலுவங்கோட்டைக் கல்வெட்டு

அ.சந்திரபோஸ்,புதுக்கோட்டை

**இடம்:** *சிவகங்கை மாவட்டம், தேவக்கோட்டை வட்டம் எலுவங்கோட்டை விசுவநாதசுவாமி கோவில் முன் னுள்ள பிள்ளையார் கோயில் முகமண்டப இடப்பு றச்சுவர்*

**காலம்:** *கலி -4924, சக ஆண்டு 1745, சுபானு, ஐப்பசி-1 =பொ.ஆ.1823*

**செய்தி:** *தேவக்கோட்டை முத்துக்கருப்பன் செட்டியார் எலுவங்கோட்டையில் பிள்ளையாருக்கு கோயில் அதன் முன் தடாகம் அமைத்ததுடன் இக்கோயில் முகமண்டபத் தூணில் அவரது மகன் முத்துக்கருப்பன் செட்டியாரின் கற்சிலையும் அமைக்கப்பட்டது.*

1. **உ சிவமயம் கலி வருஷம் 4924**
2. **ஸ்வஸ்திஸ்ரீ சாலிய வாஹந ஸஹாப்தம் 1745 மேல் செல்லாநின்ற சுபானு வருஷம்**
3. **அற்பிகை மாசம் 1 ந்தேதி எலுவங்கோட்டை விசுவநாதசுவாமி கோவிலுக்கு முன்பாக தான்தோ-**
4. **ன்றி விநாயகார் கோவிலும் அதற்கு முன்பாக மணிகற்னிகைத் தடாகமுங் கேரளசிங்க வள**
5. **நாடாகிய பிரம்புர் நாட்டில் யிலுப்பக்குடியாந புகலிடங்கொடுத்த பட்டண-**
6. **த்தில் சூடாமணிபுரமுடையான் தேவக்கோட்டையிலிருக்கும் முத்துக்க-**
7. **ருப்பன் செட்டியார் மகன் முத்துக்கருப்பன் செட்டியார் செய்த பிரதிஷ்டை சுபம்.**

# 45. மேலையூர் செட்டிமண்டபம் கல்வெட்டு

மா.பவானி,தஞ்சாவூர்

**இடம்:** தஞ்சாவூர் மாவட்டம், ஓரத்தநாடு வட்டம், மேலையூர் செட்டிமண்டபம் தாராதோப்பு வயல் கல்,

**காலம்:** *சகம்-1747 பொ.ஆ.1825* தமிழ்,மராட்டி;தேவநாகரி

**செய்தி:** கண்ணந்தக்குடிக் ஊர் தானமாக வழங்கியமை

1. சாலிய வாக-
2. ன செகம் 17 -
3. 47 பாற...
4. தி .... ஸங்-
5. வச்சரம் சவுபா-
6. க்யவதி முத்த-
7. ம்மாள் புரம் அ-
8. ன்னசத்திரம் தற
9. மது சேந்த சற்-
10. வ மானியம் க-
11. ணனதகுடி தே-
12. ன்பாற்கு யெ-
13. ல்லை

# 46. ஆம்பலாப்பட்டு நில ஆவண ஓலை

கு.பாபு,புதுச்சேரி

**இடம்:** *புதுச்சேரி பிரெஞ்சு நிறுவன ஓலைச்சுவடி நூலகம் எண்- 43887*

**காலம்:** *கர வருசம் கார்திகை மாதம் 25 ஆம் தேதி 8/12/1831*

**செய்தி:** *தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டை வட்டத்தில் உள்ள ஆம்பலாபட்டு முன்பு ஆம்பிளாபட்டு என்று அழைக்கப்பட்டது. இவ்வூரைச் சேர்ந்த 22 ஓலை ஆவணங்கள் மேற்குறித்த நூலகத்தில் உள்ளன. பல நில விற்பனை ஆவணங்களாக உள்ளன. அன்றாடு ராசகோபால சக்கர குளிகைப்பணம் பொன் 8ற்கு விற்கப்பட்ட நிலம் பற்றிய செய்தி.*

## ஏட்டின் முன்பக்கம்

1. **கர வருஷம் காற்திகை மாதம் 25 தேதி ராசராச வளனாடு ராசேந்திர சோழவளனாடு பொய்யூர்க் கூத்தத் பாப்பாகுடினாடு ஆம்பிளாபட்டிலிருக்கும் காணிஉடைய அரசர்**
2. **களில்ச் செல்லமங் கண்டான் மகன் திரும்மங்கன்டானுக்கு [மேற்படி] ஊரிலிருக்கும் காணி உடைய அரசர்களில் திரும மாதிரான் மகன் சிலம்பமாதிரானும் அய்ய.**
3. **குட்டி மாதிரான் மகன் முருக மாதிரானுள்பட்டாரும் முறி குடுத்தப்படி முறியாவது யெங்கள் காணி ஆட்சியான ஆமைதோப்புக்கு யெல்லையாவது வடபாற்கெல்லை**
4. **பெத்தான் முத்தரையன் கொல்லைக்கு தெற்கு கீழ்பாற்கெல்லை கொளகிண்டான் நிலத்துக்கு மேற்கு தென்பாற்கெல்லை அடைக்கமாதிள சின்னத்தம்பி காணிக்கு**
5. **வடக்கு மேவாற்கெல்லை நஞ்சை நிலம் அணிப்புளிச்செயிக்குக் கிழக்கு யிந்தனாங்கெல்லைக்கு உள்பட்ட நிலம் விக்குறோமென்று கொள்வாரோ கொள்வாரோ**
6. **வென்று சிலம்பமாதிரான் முருகமாதிரான் முற்கூறக் கொள்வேன் கொள்வேன்னென்று திரும்மங் கண்டான் பிற்கூற யென்மொழிகேட்டு யெதிர்[மொழிமோ]**
7. **ழிந்து னால்வர் கூடி மூவர் மதித்துப் பல நடுவர் முன்பதாக அண்ணாடகம் வழங்கும் ராசகோபால சக்கரம் குளிகை [பொன்] 8 யிந்த யெட்டு............**

ஏட்டின் பின்பக்கம்

8. ..கய்யிற் பத்திக் கொண்டபடியினாலே சந்திராதித்தாருள்ள வரைக்கும் கல்லுங்காவரியும் புல்லும் பூமியும் உள்ள வரைக்கும்புத்திர புத்திர [பாரம்பரைக்கும்]

9. ..ஒத்திவச்சும் சீதன சினேகித தானங்குடுத்தும் யிப்படியாண்டு கொண்டு சுகத்திலிருக்க கடவோராகவும் யிந்த நிலத்துக்கு வேறொருகலனுமில்லை கலனுளதா

10. ய்த் தோன்டினால் வித்த னாங்களே ஆட்சிசெலுத்திக்குடுக்க கடவோராகவும் யிந்தப்படிக்கு சம்மதித்து திரும்மங்கண்டானுக்கு சிலம்பமாதிரான் முருகமாதிரான்

11. முறி குடுத்தோம் யிதுக்கு சாட்சி தயவான தஷ்யன் அடைக்கன் சேனாபதி சக்கரைத்தொண்டமான் பிரம பண்டாரம் யிந்த முறியெழுதின நன்மைக்கு நல்லவ

12. மாதிரான் நெட்டெழுத்து பாடுவான்மலர், கொம்மட்டிக்காச்சி, பொரியபிளி, கத்தரிக்காச்சி, முடுக்குப்பிளி ஆக யிந்த அஞ்சு மரமும்

13. நிலத்துச் சாதனத்தில் சேந்தது

14. யிந்த கீறல் சிலம்பா மாதிரான்

15. யிந்த கீறல் முருக மாதிரான்

# 47. வீராயி நாச்சியார் விசாரணை ஆவணம்

த.கலாஸ்ரீதர்,தஞ்சாவூர்.

## 47:1

**இடம்:** *தமிழ்ப்பல்கலைக்கழக அரியகையெழுத்துச் சுவடித்துறை ஆவண எண்: 329 மூட்டை எண் : 1A நீளம் : 18 செ.மீ, அகலம் : 25 செ.மீ,பக்கம்:2,வரிகள்: முதல் பக்கம் 22*

**காலம்:** *10.10.1843*

**செய்தி:** *வீராயி நாச்சியாருக்கு சித்தப் பிரமை உள்ளதா என்று சோதனை செய்து, அவருக்கிருந்த பைத்தியம் முற்றிலும் நீங்கிவிட்டதை குறிப்பிடுகிறது.*

**1843 ஆம் வருடம் அக்டோபர் மாதம் 12ந் தேதி இராமநாதபுரம் ஜமீன்தாரின் மகாராஜா ஸ்ரீ சையது யிசுமாயில் சாயபு அவர்கள் முன்பாக சீமை கச்சேரி ஜாகுமாலி வீராயி க கருப்பாயி நாங்கள் யிருபேரும் யெளுதிகுடுத்த அத்தாட்சி யென்ன வென்றால் அரமனை அந்தப்புறத்திலிருக்குற முத்து விஜைய ரெகுநாத அண்ணாசாமி சேதுபதி பட்டம் மாஜி உயிலில் நவநீத பஞ்சகுஞ்சரமுத்து வீராயி நாச்சியாரவர்களுக்கு சித்தபிரம்மை போல மேற்படி இருக்குற தாயி சர்க்காரில் அரிக்கையாகி அதைப்பத்தி சோதித்து வரும்படியாயி நாளது தேதியில் எங்களுக்கு உத்தரவான பிரகாரம் நாங்கள் நியாய மேற்படி நாச்சியார்களிடத்தில் பேசினதில் அவர்கள் சுபகுணமாயி ஞாபகசக்தியுடனே பேசினார்களே தவிர பிரம்மை கொண்டவரைபோல ஞாபக குறைச்சலா இப்போது இல்லை இந்தப்படிக்கி எங்கள் மனராசியினாலே (மனசாட்சி) ஆகியிருக்கிற அத்தாட்சி இந்த கீறல் வீராயி கருப்பாயி இராமநாதபுரத்திலிருக்கிற றாமாசாரி**

## 47:2

**இடம்:** *மேலது, ஆவண எண் 321, மூட்டை எண் : 1A நீளம்: 25 செ.மீ, அகலம்: 18 செ.மீ, பக்கம்: 2, வரிகள்: முதல் பக்கம் 23*

**காலம்:** *21.9.1843*

**செய்தி:** *இது சண்முகம்பிள்ளை என்பவர் கொடுத்த வாக்குமூல ஆவணமாகும்.*

இராமநாதபுரம் ஜமீந்தாரி ஸ்ரீமது முத்து விஜய ரெ[கு]நாத சேதுபதிராஜா அவர்கள் பட்டமாஜி, ஸ்ரீராணி முத்துவீராயி நாச்சியாறவர்கள் வகை சண்முகம் பிள்ளை எழுதி வைத்த வாக்குமூலம் யென்னவென்றால் மேற்படி ராணி அவர்கள் சபதிநிகனில் ராகாத்தால் வகை குடுத்து பிராதுக்கு மேற்படி ராணி அவர்கள் முதன்மையான பட்டமாஜி என்று என்று முசைக்கு கொர்ட்டு (கோர்ட்டு) உத்தரவுபிரகாரம் அப்போது ஹெட் தாசில்தாராயிருந்த நாராயணாரவர்கள் விசாரணை செயிது ரிப்போர்ட்டு செய்து தஸ்தாவேக்களை ரிக்கார்டிலிருக்குது வெகு நாளாக சித்த பிரம்மை கொண்ட மேற்படி ராணி தாவகை சில பெயருடைய துருபொத்தினாள் பேரில் இப்போது குடுத்த பிராதை குறித்து ஜவாவு சொல்ல வேண்டிய அவசியமில்லை என்பது மேற்படி ராணி அவர்கள் சொன்னபடிக்கி இருந்தவாக்கு மூலம் இந்தபடிக்கி சண்முகம்பிள்ளை

## 47:3

**இடம்:** *மேலது, ஆவண எண்: 330, மூட்டை எண் : 1A நீளம்: 25 செ.மீ, அகலம்: 18 செ.மீ, பக்கம்: 2, வரிகள் : முதல் பக்கம் 23, இரண்டாம் பக்கம் 10*

**காலம்:** *26.10.1843*

**செய்தி:** *சேதுபதி அரசியான நவநீத பஞ்சகுஞ்சர முத்துவீராயி நாச்சியாருக்குத்தான் சகல உரிமையும் முதன்மை பட்டமும் உரியது தொடர்பான செய்திகள் இந்த ஆவணத்தில் உள்ளன.*

### முதற்பக்கம்

1843 ஆம் வருடம் அக்டோபர் மாதம் 26 தேதி இராமநாதபுரம ஜமீந்தாரி மானேஜர் சையது இசுமாயில சாயபு அவர்கள் முன்பாக சீதை கச்செரி காரட்டு (கோர்ட்டு) குமாஸ்தா செண்பககுமாற பிள்ளை எழுதி குடுத்த அத்தாடசி யெனை (யென்ன) வென்றால் மேற்படி ஜமிந்தாரி அண்ணாசாமி சேதுபதி ராஜாவுடைய யிடங்களில் நவநீத பஞ்சகுஞ்சர முத்து வீராயி நாச்சியார் குடுத்த பிராதின் பேரில் முத்து வீராயி நாச்சியார் வக்கில் மூலமாய் எழுதிக் குடுத்த ஜவாபில் சகல பாத்தியமும் தனக்கு தானே பாத்தியமென்று மேற்படி ஜமின்தாரி ஜபுதியில் ஹெட் தாசில்தாராயிருந்து நாராயணராவுக்கு உத்திரவு பிறக்காமல் விசாரணை செய்து வாதி வககிலானதை வெசு ரிகார்டில யிருந்தாக கண்டு உத்திரவு குடுத்த தாக யென்னை ரிகார்ட்டை பரிசோதிது மேற்படி உத்தாவு குடுத்த பிரகாரம் நான் மேற்படி

அண்ணாசாமி சேதுபதி யிறந்து போன 82-வது வருடம் பிப்ரவரி முதல் நாராயணராயர் அதிகாரம் ஆகையால் ரிககார்டிலயிருந்த தஸ்தாவெக்களை பரிசோதித்து பார்த்ததில் மேல் முத்தியப்பட்டி முத்துப்பிள்ளை நாச்சியானர்

## இரண்டாம் பக்கம்

பாத்தியப்படுத்தி விசாரணை செய்து உசூருக்கு அரிஜி கட்டியிருந்ததாக யாதொரு தஸ்தாவெசுமிலலை இந்தப் படிக்கி ரிஜிஸ்தருடரன் மேற்படிகுடுத்த அத்தாட்சி காரட்டடு [கோர்ட்டு] குமாஸ்தா அரிவேன் சாட்சி போகலூர் கோர்டடு கணக்கு மாயாண்டியா பிள்ளை தேவஸ்தாமை கோர்ட்டு கணக்கு முத்துசாமியா பிள்ளை

# 48. திருமறைக்காட்டு ஓலையில் யாழ்ப்பாணத்து சங்கானை ஊரார் குறிப்பு

கு.பாபு,புதுச்சேரி

**இடம்:** *புதுச்சேரி, பிரெஞ்சு ஆய்வு நிறுவன ஓலைச்சுவடி நூலகம் - எண்- 43469 திருமறைக்காடு ஊரின் 38 ஓலை ஆவணங்கள் மேற்படி நூலகத்தில் தொகுக்கப்பட்டுள்ளன.*

**காலம்:** *சகர ஆண்டு 1771 என்று கொண்டு பொ.ஆ.1849 எனக் கருதலாம் (கலி -சக ஆண்டுகள் தவறாக உள்ளன)*

**செய்தி**: *இந்த தான சாதன ஓலைச்சுவடி யாழ்ப்பாணத்தில் உள்ள சங்கானை என்ற ஊரைச் சேர்ந்த 30 பேர் வேதாரணியத்தில் உள்ள சிதம்பரகுருக்கள் மகனான சோமசுந்தரக் குருக்களுக்கு செய்து கொடுத்த தர்மசாதனத்தைப்பற்றி விவரிக்கிறது.அதன்படி சுபகாரியங்கள் அசுபகாரியங்கள் செய்யும் காலங்களில் மேற்படி குருக்களுக்கு 1 பணம் வீதம் காணிக்கை தர முடிவு செய்யப்படுகிறது. சபிண்டீகரணம் என்ற பன்னிரண்டாம் நாளில் முன்னோர்களுக்கு செய்யக்கூடிய ஈமக்கிரிகை,வருஷ திதி ஆகிய செய்யும் நேரங்களில் இது போன்ற காணிக்கை தர வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. முதற்பகுதியில் சங்கானை ஊரார் பெயர்கள் உள்ளன. இறுதியில் அவர்கள் சம்மதக் கையெழுத்திட்டுள்ளார்கள்.அதற்குப்பின் உள்ள ஓம்படைக்கிளவி பகுதி பாவ புண்ணியங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இலங்கைப்பேராசிரியர் மகேஸ்வரன் அவர்கள் 'வேதாரண்யம் கோயிலில் யாழ்ப்பாணத்தார் கல்வெட்டுக்கள்' [ஆவணம்-13 பக்-82-86 ,2002]என்ற ஆய்வு கட்டுரை இது குறித்த தகவல்களைப் பதிவு செய்துள்ளது.*

**முன்பக்கம்**

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ சகாத்தம் னாலு னூறாயிரத்து முப்பத்திரெண்டாயிரம் வருழம் உடைத்தாகிய கலியுகத்தில் 1689 சென்ற செல்லா நின்ற கர வருழம் பங்குனி மாதம்**
2. **மும் துவாதேசியும் சதய நட்சத்திரமும் சுக்ரமனாம யோகமும்**

கபிலவா கரணமும் அமிற்த கடிகையும் மீனநாயுறுங்கூடிய புண்ணிய தினத்தில் தரணி முழுதுடைய உம்பரவள நாட்[டு]...

3. திருமறைக்காட்டுடைய னாயனராதி சண்டேசுவரனருளால் திருவாய் மலர்ந்தருளின படிக்கித் திருஞானசம்மந்தர் திருக்கோபுர வாசலில் தான மகேசுவர ரனைத்துக் கொத்துப் பாடி......

4. னங்களுங் குறைவறக்கூடி நிறைவற நிறைந்த சபையில் வேதாரணியத்திலிருக்குஞ் சிதம்பரக்குருக்கள் பிள்ளை சோம சுந்தரக்குருக்களுக்கு மேற்படி யாழ்ப்பாணம் சங்கானையி லிருக்கும்........

5. குமார சிற்றம்பல உடையாரும் பரமானந்தரும் அய்யன் பெருமாள் கதிர்காமருந் தில்லையரும் வேலாயுதரும் மேற்படி சத்திரவரும் சட்டம்பியார் சந்திரவரும் கங்காரும் ப.......ராமனாதருமாழ . . .

6. ரு...பத்தா கந்தப்பரும் மேற்படி அய்யன் பெருமாளும் குஞ்சாவினாயகரும் ஆழ்வார் குஞ்ச உடையாரும் நீலாகுமார வேலரும் மேற்படி சிதம்பரனாதரும் சிதம்பர அம்பலவாணரும் மேற்படி சங் . . . . .

7. வத சிற்றம்பலவரும் அய்யன் பெருமாள் வினாயகருங் குழந்யா கதிர்காமருஞ் சந்திரவாம்பலவாணரும் மேற்படி தில்லையரும் மேற்படி கதிர்காமரும் முதலிகுட்டியார் முருகரும் கந்த உடையார் . . . . . ..

8. வரும் கனகா கொத்தரு அம்மன்குட்டியார் மயில்வாகனரும் பொ₵யாரும் நீக்கிலாரய்யன் பெருமாளும் வினாயகர் பொ₵யாரும் ரெகுனாதரும் இவர்களண்ணன் தம்பி பிள்ளை குட்டி இவர்கள் வங்கி . . . ..

9. ட்ட....வர்களெல்லாருஞ் சம்மதித்து தர்ம்ம சாதனம் பட்டயமெழுதிக்குடுத்தபடி தர்ம்ம சாதன பட்டையமாவது சுபா சுபங்கள் சுபத்துக்கு ஒரு பணமும சுபத்துக்கு ஒரு பணமும். .. .

பின்பக்கம்

10. பண்ணுகிற தானமும் சபிண்டீகரணம் பண்ணுகிறத்திலொரு............ மும் வருழத் திதியில் ஒரு தானமு மிந்தப்பிறகாரம் சந்திராதித்தாளுள்ளவரைக்கும் புத்திர பவுத்திர பாரம்பரைக்கும்.......

11. எடுத்துக் கொடுக்க அனுபவித்துக் கொண்டு சுகத்திலேயிருக்க கடவராகவு மிப்படிக்கி சம்மதித்து தர்ம்ம சாதனப் பட்டயமெழுதிக் கொடுத்தோம் சோமசுந்தரக்குருக்களுக்கு சிற்றம்பல.........

12. கதிர்காமரோம் தில்லையரோம் வேலாயுதரோம் சந்திரவரோம்

மேற்படி சந்திரவரோம் ராமனாதரோம் கந்தப்பரோம் மேற்படி கந்தப்பரோம் மேற்படி கந்தப்பரோம் அய்யன் பெருமாள்ளும் வினாயகரோம் குஞ்ச உடையார் (வினாயகரு).........

13. ம் சிதம்பரனாதரோம் அம்பலவானரோம் சங்கரனாதரோம் சிற்றம்பல வரோம் மேற்படி வினாயகரோம் மேற்படி கதிர்காமரோம் மேற்படி அம்பலவானரோம் மேற்படி தில்லையரோம் மேற்படி கதிர்காமரோம்..

14. பொன்னம்பலவரோம் கோதரோம் மயில்வாகனரோம் பெரியோரரோம் மேற்படி அய்யன் பெருமாளரோம் மேற்படி பெரியோரரோம் இந்த தர்மத்தை எடுத்து உண்டுபண்ணின பேர்களுக்குத் தொண்ணூத்தாறு திருபு......

15. களிலே இடிஞ்சு போன கிணறு கட்டினப் பலனுந் தூர்ந்த கொளம் வெட்டிவச்சு பலனும் இடிஞ்சு போன கோபுரம் கட்டிவிச்ச பலனும் சிவலிங்க பிறதிட்டை பண்ணிவிச்ச பலனும் னாலொன்னுக்கு லெட்சப்பிராமண போசனம்....

16. பலனும் கோடிகன்னிகாதானம் பண்ணிவிச்சப் பலனுமுண்டு இந்த தர்மத்தை யாதாமொருதர் அழிச்சுக் கெடுத்து மழுங்கப்பண்ணின பேர்களுக்குக் காசியில் கெங்கைக் கரையிலே ராமேசுவரம் செதுக் கரையி.......

17. பசுவை அடிச்சுக் கொன்ற பாவத்திலே போகக்கடவாராகவும் சிதம்பரம் சபாபதி சன்னதியிலே நெய்விளக்கைக் கய்யினாலே அணைத்த பாவத்திலே போகக்கடவொராகவும் வேதாரணியத்திலே தீர்த்தகரையி...

18. போகக்கடவராகவும் இதுக்கு சாட்சி சந்திரன் சூரியன் அக்கினி மிந்தப் பட்டையமெழுதின நன்மைக்கு மயில்வாகனப் பண்டாரமத்தின் குமாரன் முத்தய்யன் நெட்டெழுத்து.

# 49. கோட்டாறு அடிமை ஓலை ஆவணம்

செந்தீ நடராஜன், நாகர்கோவில்.

**இடம்:** கன்னியாகுமாரி மாவட்டம் நாகர்கோவில் கோட்டாறு திரு. எம். ஏ. சவரிதாசன் வில்லவராயர் மகன் இராஜன் வீட்டில் இருந்த ஓலைச் சுவடு கட்டு

**காலம்:** சாலிவாகன சகாத்தம் 1787 கொல்லம் 1040, குரோதி, ஆனி,18 = பொ.ஆ.1865 , சூன் 30. வெள்ளிக் கிழமை

**செய்தி:** ஓலையின் வலப்புற இறுதிப்பகுதி உடைந்துள்ளது. கோட்டாறு செட்டு சமூகத்தைச் சேர்ந்த செட்டு சின்னு சாந்தன் மூப்பனார், செட்டு பாக்கியம் பிரம்மமுத்து ஆகியோருக்குச் சொந்தமாயிருந்த பறை அடிமைகளான (1) மாடத்தி புரசு கசமாடி (2) புரசு காணி (3) அவளுக்கிளைய. முலையுண்ணி ஆன புரசு சுடலைமாடன் ஆகிய மூவரை கோட்டாறு ஊரைச்சார்ந்த கத்தி பரவர் சமுகத்தினனான அந்தோனிக்கு திருவிதாங்கோடு கலியுகராமன் பணம் 112 ற்கு விலை ஆவணம் செய்து கொடுத்தமை.

திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் அடிமைவியாபாரம் நடப்பில் இருந்தது. பிரிட்டீஷார் ஆளுகைக்குட்பட்ட சென்னை ராசதானியாரின் இடையறாத வற்புறுத்தல்கள் காரணமாக அடிமை ஒழிப்புச்சட்டம் பொ. ஆ. 1855 ல் திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் நிறைவேறுகிறது. கிடைத்திருக்கும் ஓலை ஆவணம் கன்னியாகுமரி மாவட்ட நாகர்கோவிலின் ஒரு பகுதியான கோட்டாறு ஊருக்கு உரியது.

அடிமை ஒழிப்புச் சட்டம் நிறைவேறிய 10 ஆண்டுகளுக்குப்பின்னரும் அடிமை வியாபாரம் நடந்ததற்கான சான்றாக இவ்வோலை ஆவணம் அமைகிறது. அடிமை ஒழிப்பை அன்றைய திருவிதாங்கூர் அரசரோ, அதிகாரிகளோ, ஆதிக்க சமூகத்தினரோ விரும்பவில்லை என்பதுவும், பல முட்டுக்கட்டைகளை ஏற்படுத்தினர் என்பதுவும், சென்னை ராஜதானி பிரிட்டீஷாருக்கும் திருவிதாங்கூர் அரசிற்கும் நிகழ்ந்த கடிதப்போக்குவரத்து, சான்றாவணங்கள் தெரிவிக் கின்றன.

முன்பக்கம்

1. ஸ்வஸ்த்தி ஸ்ரீ சாலிவாகன சகாத்தம் 1787 ன் மேல் செல்லா நின்ற கொல்லம் 1040 குரோதி வருடம் ஆனி மாதம் 18-ந்தேதி சுக்கிற வாரமும் பூறுவ பட்சத்து சத்தமியும் உத்திரநட்செயித்திரம் னாழிகை 27 க்கு மேல் அத்த நட்செயிதி.......

2. யோகமும் வனிக்கரணமும் கூடின சுபதினத்தில் நான்ச் செயித பறையடுமை விலையோலைக் கரணமாவிது நாஞ்சி நாட்டுக் கோட்டாறான மும்முடி சோளபுரத்தில்க் கோட்டாறு நெடுந்தெருவில்ச் செட்டு (சின்னு) சாந்தான் மூப்பனாரும் மேல்படியில்ச் செட்டு பாக்கியம் பிர [மமுத்துவும் *]....

3. மேல்படியூர் கத்தி பரவல் அந்தோநிக்கு பறையடுமை விலை[யோ]லை எழுதிக்குடுத்த பரிசாவிது யிந்தனாள் நாங்கள் குரு[ப]ர[மு]டையோனாக ஆண்டனுபவித்து வருகிற கோட்டாறு மடத்து பிறஞ்சேரியில்க் கிடக்கும் தீண்டாதாரில்ப் பறை மாடத்தி புரசு கசமாடியும் அவள் புர [சு காணியும் அவளுக்கிளைய*]

4. முலையுண்ணி ஆன புரசு சுடலைமாடனும் ஆச்சனம் 3 யும் யிது விலை கொள்ளுவாருளரோ கொள்ளுவாருளரோ வென்று நாங்கள் முற்கூற விலை கொள்ளுவோம் கொள்ளுவோம் கொள்ளுவோ மென்றிவர் பிற்கூறி எம்மிலிசைந்து யெதிர்மொழி மொ [ழிந்து*]

5. மறுமொழி கேட்டு உறுமொழி பேசி பற மாடத்தி புரசு கசமாடியும் அவள் புரசு காணியும் அவளுக்கிளய முலையுண்ணி ஆன புரசு சுடலைமாடனும் ஆச்சனம் 3யும் கோட்டாறு மன்றிலருகே நிறுத்தி நல்லவரெண்மர் நடுவர் கூடி விலை நிச்செயிச்ச [அன்றாடும் வழங்கும்].........

6. நென்மேனி திருவிதாங்கோட்டு கலியுகராமன் பணம் 113 யிப்பணம் நூற்றுப்பதிமூனும் விலையாவணக் களத்தே காட்டியெத்திகைச் சிலவறக்கொண்டு விலையற வித்துப் பொருளறப் பற்றி விற்று விலை பிறமாணஞ் செயிது குடு [த்தோம்]......

பின்பக்கம்

7. செட்டு சின்னு சாந்தான் மூப்பனாரும் மேல்படி செட்டு பாக்கியம் பிரமமுத்துவும்வோம் கத்தி பரவல் அந்தோநிக்கு யிப்பரிசே விற்ற பறை மாடத்தி புரசு கசமாடியும் அவள் புரசு காணியும் அவளுக்கிளய முலையுண்ணி ஆன புரசு சுடலைமா [டனும்].............

8. யிதுவே விலையோலையாவதாகவும் யிதுவல்லது வேறு விலையாவணச் சிலவாவன பொருளாவணப் பொரு[ள்] மாவுறுதி பொருள்ச் சிலவோலைக் கரணமும் காட்டவும் கடவதன்றியே ஒருக்காலாவது யிருக்காலாவது முக்காலாவது ஓலை ..........

9. சொல்க்குத்தம் பொருள்க்குத்தம் வெட்டுச் செருக்கு வாசகப்பிழை வரி மாறாட்டம் வரி நுளைந்தெழுதல் மாறுமாக குத்தமும் குத்தமதன்றியே விற்று விலை பிறமாணம் செயிது குடுத்தோம் செட்டு சின்னு சாந்தான் மூப்பனார் முதல் பேரோம் கத்தி ..........

10. யிப்படிக்குச் செட்டு சின்னு மூப்பனார் [ஒப்பம்] மேல்படி செட்டு பாக்கியம் பிரமமுத்து யிதற்கு ஸாக்ஷி கோட்டாறு செட்டு முத்துகுமாரு சாந்தான் [ஒப்பம்] மேல்படி யூர் இருளப்பன் பிரமனாயகம் [ஒப்பம்] வாகை லெட்சுமிணப்பெருமாள் நல்லபெருமாள் [ஒப்பம்]

11. யிது கை எழுதின மீனாட்சிபுரம் சுப்பிற.... ஐயன் சுந்தரத்தோழ்

# 50. கடுவெளி, சங்கரன்கோயில், ராஜபாளையம் கல்வெட்டுகள்

சொ.சந்திரவாணன், இராசபாளையம்

## 50:1

**இடம்:** தஞ்சை மாவட்டம் திருவையாறு வட்டம் கடுவெளி கிராமம் அருள்மிகு ஆகாசபுரீசுவரர் கோயில் நந்தவனப் பகுதியில் உள்ள கல்வெட்டு

**காலம்:** *பொ.ஆ.1898, டிசம்பர், 5*

**செய்தி:** கோயிலில் நந்தவனம் அமைக்க ரூ 50 கொடுத்து அதன் வட்டியிலிருந்து நந்தவனப் பராமரிப்பும் செய்ய வேண்டி கோயில் குருக்களிடம் கொடுத்தமை

1. உ 1898 வருடம் டிசம்பற் மீ 5
2. தஞ்சாவூர் ஜில்லா
3. முகாஸா கடுவேளி கிராமத்-
4. திலிருக்கும் ஸ்ரீ ஆகாச-
5. புரியீச்வறா ஸாமிக்கி ப-
6. னையூரிலிருக்கும் மருதையா
7. பிள்ளை மகன் வெள்ளாழச் சாதி
8. கருப்பப் பிள்ளை யெழுதி வைய்த்-
9. த தருமம் மேற்படி கோவிலுக்குள் தென்
10. புறம் பிறாகாறத்தில் கீழ்மேல்
11. 30 கெசம் தென்வடல் 20 கெ-
12. சம் யதற்குள் யென்னால் போட
13. பட்ட நந்தவனம் பல சாதி புஷ்-
14. ப்பச் செடிகள் வைத்து வி-
15. ருத்தி செய்ய வேண்டியதர்க்-
16. கு கோவில் பூசை ஸ்தானிகம் உள்-
17. ள சூரியமூர்த்தி குருக்களிடத்தி-

18. ல் நாள்ச தேதியில் மவுண்ட்

19. கட்டியிருக்குறது ரூ 50

20. யிந்த அம்பது ரூக்கி மீ

21. கக்கு வட்டி ரூ 6 யிந்-

22. த ரூ கொண்டு சந்திறாள் சூ

23. றியாள்ளுள்ள வரையிலும் தா-

24. ங்களும் தானத்தார்க்கு பி

25. ன் வரும் பாத்தியஸ்தர்களும் இந்த

26. நந்தவனம் பரிபாலனத்தை நடத்திவரவே-

27. ண்டியது யிந்தப் பிறாகாரம் நடத்தா-

28. மல் நந்தவனம் பறாரியாகும் பக்ஷ-

29. த்தில் வேறே யெந்த புண்ணிய

30. புருஷர்கள் கேழ்க்குரவர்கலுக்கு மு-

32. காந்திரம் சொல்லி நந்-

33. தவள தருமத்தை நடத்தும்படி

34. செய்ய வேண்டியது உ

## 50:2

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டம் திருநெல்வேலி வட்டம் கீழக்கல்லூர் கிராமம் கனடியன் வாய்க்கால் படித்துறை*

**காலம்:** *கொல்லம் 1066=பொ.ஆ.1891*

**செய்தி:** *இப்படித்துறை பிள்ளைமார்கள் பயன்பாட்டிற்காக இவ்வூர் திரவியம் பிள்ளை மகளும் நயினார் பிள்ளை அவர்களுடைய மனைவியும் ஆன பூலாபுடையம்மாள் கட்டுவித்ததாகக் குறிப்புள்ளது.*

1. வடிவேல் துணை

2. சிலாபுரி யென்று

3. பேர் வழங்கிய கீ-

4. ழக்கல்லூரிலிரு-

5. க்கும் திருநெல்வேலி

6. இஜநா திரவியம் பி-
7. ள்ளையவர்கள் குமார-
8. த்தியும் நயினார் பிள்ளை-
9. யவர்கள் ஸ்ரீயுமான
10. பூலாவுடையம்மாள்
11. பிள்ளைமார் உப-
12. யோகத்திற்காக சொ-
13. ந்தச் செலவு செய்து இந்த
14. ப் படித்துரை-
15. த் தர்மத்தைக் கெட்டிமு-
16. டிக்கப்பட்டது - 10
17. 66 5 வைகாசி
18. மீ

## 50:3

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டம் திருநெல்வேலி வட்டம் கீழக்கல்லூர் கிராமம் சிறிய சிவன் கோயில் (தற்போது பிள்ளையார் கோயில்) நிலைப்படி*

**காலம்:** *கொல்லம் 1068 = பொ.ஆ1893*

**செய்தி:** *முருகலிங்க சுவாமி என்பவருடைய பேரனும் கோபலபிள்ளை என்பவருடைய மகனுமான கோ.முருகேசப்பிள்ளை என்பவரின் பணத்தால் மேற் படிக்கோயிலின் மகாமண்டபம், மணிமண்டபம் கட்டியமை*

1. உ ஸ்ரீ முருகலிங்க சுவாமி-
2. கள் பவத்திரரும் பா.கோ-
3. பாலபிள்ளை புத்திரருமான
4. சாத்தூர் தாலுக்கா தாசில்தா-
5. ர் ஸ்ரீ முருகேசப் பிள்ளை யுடைய
6. திரவியங் கொண்டு மேற்படி
7. சுவாமிகளின் கனிஷ்ட குமார-

8. ன் மு. ஆழ்வாரப்ப பிள்ளை யால்

9. இந்த மகா மண்டபம் மணிமண்-

10. டபம் கட்டிமுடிப்பிக்கப்ப பட்டது

11. சூசாயஅம் ஸ்ரீ நந்தவன வருடம் கா-

12. ர்த்திகை மீ

50:4

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோயில் வட்டம் சங்கரன் கோயில் கிராமம்இருமன் குளம் வடக்குக் கரைபலகைக்கல்.*

**காலம்:** *கொல்லம் 1082 =பொ.ஆ.1907*

**செய்தி:** *இருமன்குளத்தைச் சேர்ந்த மருதப்ப தேவர் மற்றும் சங்கரத்தேவர் ஆகியோரால் வெட்டப்பட்ட ஊருணி பற்றிய செய்தி*

1. 1082 மட

2. கு சிவபெரு

3. மான் கிருபை-

4. யாபேருக்கும்

5. இருமன் குளம்

6. மு. மருதப்ப தேவ-

7. ன் சங்கற

8. தேவராலும்

9. வெட்டியெ

10. வூரணி உ

50:5

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோயில் வட்டம் 'பேரியூர்' கிராமம் செல்லும் சாலையின் கிழக்குப் பகுதியிலும் ஆனையூரின் மேற்கிலும் உள்ள பாழடைந்த மண்பத்தின் உத்திரப் பகுதி*

**காலம் :** *கொல்லம் 976,துர்மதி, மார்கழி 10 = பொ.ஆ.1801*

**செய்தி:** *மேலச் செவல் கிராமத்தைச் சார்ந்த அம்மையப்பதேவர்*

மருமகன் சாயப்பெருமாள் தேவர் என்பவர் இம்மண்டபத்தைச் செய்திருக்கலாம் என்று தெரிகின்றது. உள்ளமுடையார் துணை சங்கரலிங்கம் துணை எனச் சொல்லுகிறது.

1. **976 ஸ்ரீ தும்மதி ஸ்ரீ மார்கழி மாதம் 13 மேலசெவல் அம்மை**
2. **யப்ப தேவர்மருமகன் சாயப் பெருமாள் தேவர் யெச் [தது]**
3. **உள்ள முடையார் துணை சங்கரலிங்கம் துணை**

## 50:6

**இடம்:** *விருதுநகர் மாவட்டம், இராஜபாளையம் வட்டம் இராஜபாளையம் பத்ரகாளியம்மன் கோயில்.*

**காலம்:** *சகா- 1769,கொல்லம்-1052, ஆணி, வியாழன், சுவாதி =பொ.ஆ.1877*

**செய்தி:** *விணக வைசிய செட்டியார்களுக்குப் பாத்தியப் பட்ட பத்ரகாளியம்மன்கோயில் கும்பாபிஷேகம் நடத்தப் பட்டமை*

1. **பத்திரகாளியம்மன் துணை**
2. **இராஜபாளையம் வணிகவைசிய செட்டியார் சமூகத்திற்குப் பாத்தியம்**
3. **பட்ட ஸ்ரீ பத்திர காளியம்மன் கோயில் நாளது சாலிவாகன ச-**
4. **காப்தம் 1769கொல்லம் 1052 ஸ்ரீ யீசுவர ஸ்ரீஆனிமாத-**
5. **த்தில் குருவாரமும் சுவாதி நட்சத்திரமும் கூடிய தின-**
6. **த்தில் அன்று காலை நாளினசக்கு மிதுனலக்கினத்தில்**
7. **ஜுர்ணோத்தாரனம் செய்து கும்பாபிஷேகமும் நடைபெற்றது.**
8. **நாட்டாமை த.பழனியப்ப செட்டியார்.**

# 51. போடிநாயக்கனூர் வட்ட கல்வெட்டுகள்

மு.கனகராஜ்,வடுகப்பட்டி

## 51:1

**இடம்:** தேனி மாவட்டம் போடி நாயக்கனூர் சாலை காளியம்மன் கோவில் முன்புறம்

**காலம்:** *பொ.ஆ.1898*

**செய்தி:** தேனி மாவட்டம், போடிநாயக்கனூரைச் சேர்ந்த முத்தையா நாடார் என்பவருடைய மனைவி முத்த யாம்மாள் போடியாக்கனூர் எல்லை ஆரம்பத்தி லிருக்கும் சாலை காளியம்மன் கோவிலுக்கு கொடுத்த கொடை

1. **1898 சிவமயம்**
2. **விளம்பிற சித்தி**
3. **ரைமீ தேதீ. முத்த**
4. **ய நாட்டார் பெண் சாதி**
5. **முத்தாயம்பாள்**

## 51:2

**இடம்:** மேலது, மதுரை - கொச்சின் தேசிய நெடுஞ்சாலையில் அமைந்துள்ள கோடாங்கிபட்டி கிராமத்திற்கு மேற்கி லுள்ள ஆறுமுக நாயனார் கோவில் சுவர்.

**காலம்:** *சகம்.1850,விப, ஆவணி-18,=பொ.ஆ.1928*

**செய்தி:** போடி நாயக்கனூரைச் சேர்ந்த அ.சுப்பன் செட்டியார் மகாமண்டபம் மயில் மண்டபம் மற்றும் திருமதில் ஏற்படுத்தியமை

1. **சாலிவாகன் சகாப்தம் 1850 கு விப வரு ஆவணி மாதம் 18 தி மகாமண்டபமும் மயில் - மண்ட**
2. **பமும் திருமதிலும் போடிநாயக்கனூர் அ சுப்பன் செட்டியாரால் செய்த உபயம்**

# 52. கோவிந்த நத்தம் கல்வெட்டு

மா.பவானி, தஞ்சாவூர்

**இடம்:** *திருவாரூர் மாவட்டம், மன்னார்குடி வட்டம் மன்னார்குடிக்குத் தெற்கே 20கி.மீ தொலைவில் அமைந்துள்ள கோவிந்தநத்தம் (திருமக்கோட்டை அருகில்).தனிக்கல்*

**காலம்:** *18-19ஆம் நூ.*

**செய்தி:** *திருமக்கோட்டை கோவிந்தநத்தத்தில் உள்ள ராமதே வராம கள்ள கோவிந்த நத்தம் என்ற ஊரிலுள்ள இலுப்பை மரங்கள் பெருமாள் கோயிலுக்கு கொடுத்தமை*

**முன்புறம்**

1. .... .... ....
2. சீமயெரு . . [தி*]
3. குமெயிக்கோ-
4. ட்டை கோவிந்
5. (ந்)தம் ராமதேவ
6. ர் மகள் கோவ-
7. ர்த்தநத்தில் உள்ள யிலு-
8. பை மரம் உள்ள யெ-
9. ல்லாம் பெருமாள் கோ-
10. விலுக்கு சிலாசதன-
11. ம் பண்ணி குடுத்தோ-
12. ம் யிது[க்]கு யாதா ஒரு தா-
13. பி [தம்]பன்னினால்
14. மாகா தொழசதிலே போ-
15. வான்

**பின்புறம்**

1. கங்கைக்கரையிலே கா-
2. ரா[ம்] பசுவைக்
3. கொன்ற தொ-
4. ழத்திலே போவா-
5. ன்

# 53. கிணத்துகடவு சந்தனக்கல் கல்வெட்டு

பா.அருண்ராஜ், தஞ்சாவூர்

மு.சதீஸ்குமார், கிணத்துகடவு

**இடம்:** *கோயம்புத்தூர் மாவட்டம், கிணத்துக்கடவு வட்டம், கிணத்துக்கடவு சிவலோகசுவாமி கோயிலின் நுழைவு வாயில் அருகில் உள்ள சந்தனக்கல்*

**காலம்:** *18-19ஆம் நூ.*

**செய்தி:** *குயில்க்கவுண்டன் அம்மான் சந்தனக்கல் கொடுத்தமை*

**1. குயில்க் கவுன்டன் அம்மானு உபயம்**

# 54. பொன்விளைந்த களத்தூர் கல்வெட்டு

**பெ.லெனின்,** செஞ்சி
**ல.உமாபாரதி,** சென்னை.
**பி.சத்யா,** சென்னை.

**54:1**

**இடம்:** *காஞ்சிபுரம் மாவட்டம், திருக்கழுக்குன்றம் வட்டம், பொன்விளைந்த களத்தூரில் உள்ள நரசிங்க பெருமாள் கோயிலை அடுத்து பராங்குசம் தெருவில் கீழ்திசையை நோக்கிய வண்ணம் கோதண்டராமர் கோயில்*

**காலம்:** *சார்வரி வைகாசி 12 24.05.1900*

**செய்தி:** *100 ஆண்டுகளுக்கு முன்பு நடந்த திருப்பணியைக் குறிக்கிறது.*

1. **ஸ்ரீராமஜெயம்**
2. **ஆனூர்**
3. **குப்புசாமி முதலியார்**
4. **குமாரர் திருவேங்கட**
5. **சாமி முதலியார்**
6. **தருமம் 24.5.1900**
7. **சார்வரி வருஷம்**
8. **வைகாசி மாசம் 12**

**54:2**

**இடம் :** *மேற்படி கோபுரத்தின் உட்புற சுவரில் பலகைக்கலலில்; ஆண் பெண் இருவரது சிற்பங்களுடன் கல்வெட்டு.*

**காலம் :** *துர்முகி மாசி 18-19ஆம் நூ.*

**செய்தி :** *துர்முகி வருஷம், மாசி மாதம், களத்தூர் ஸ்ரீபட்டாபிராம சுவாமி கோயில் கைங்கர்யத்தை சக்கரவர்த்தி ஆசாரியாரால் பிரதிஷ்டை பண்ணப்பட்டது.*

1. **துரமுகி வருஷம் மா-**
2. **கி மீ களத்தூர்**

3. ஸ்ரீ பட்டாபிரா-
4. ம சுவாமி கோ-
5. யிர் கைமீங்கி-
6. ரியம் சக்கர-
7. வர்த்தி யாசா-
8. ரியரால் பிரா-
9. திஷ்டைப-
10. ண்ணப்பட்-
11. டது.

# 55. தெக்கலூர் கல்வெட்டு

ச.மு.ரமேஷ்குமார், அவிநாசி

க.பொன்னுசாமி, பல்லடம்

**இடம்:** திருப்பூர் மாவட்டம்,அவிநாசி வட்டம், தெக்கலூர், ஸ்ரீ சேற்று மாரியம்மன் கோயில் அருகே நடப்பட்டுள்ள கல்பலகை

**காலம்:** *கலி -5002, சார்வரி, சித்திரை, 24 = பொ.ஆ.1901*

**செய்தி:** *பேரூர் மேல்மடம் சாலிவா[ழ]ஈசுவரர் ஞானசிவாசாரி சுவாமியர் சச்சரவை தீர்த்தது.*

**பக்கம் -1**

1. சு[வ] ஸ்தி ஸ்ரீ கலியுகாதி-
2. [வரு] 5002 க்கு சரியான
3. தமி[ழ்] சார்வரி சி-
4. த்திரை மீ 24 பேரூ-
5. ர் மல்மடம் சுப்பிரம-
6. ணிய தென்னும் நம்
7. தெய்வமான ஆர்நாடு
8. ஞானசிவாசாரியா[ர்]
9. அவர்கள் பல்-
10. லடம் தாலூகா
11. கசுபா தெக்கலூ-
12. ரிலிருக்கும் மாரி-
13. யம்மனுடைய திரு-
14. வி[ழா] தக[ரா]ர்பட்-
15. டு கிடந்ததில் அந்த
16. கி[ரா]ம ------------ தாவ
17. -த்து பஞ்சாயத்தா-
18. ருடன் விசார[ணை]செ-

19. ய்து மேற்படி கிராமம் மச-
20. ரா சூரிபா[ளை]யம் செ-
21. ம்ப[ங்] கூட்டத்தாருக்-

பக்கம் - 2

22. கு இந்-
23. த ஆல-
24. யத்தி-
25. ல் [ரா]ஜ
26. தெரிசி-
27. ணமும்
28. விபூதி
29. சகல மி-
30. ராசு பா-
31. த்தியமு-
32. ம் இவர்-
33. களுக்கு
34. தான்
35. ன[ன்று] [தீ]ர்
36. மாளிக்க-
37. ப்பட்டு இ-
38. ருக்கி[ற]து

# 56. புதுக்கோட்டை சமஸ்தான காகித ஆவணம்

பா.மாரியப்பன்,அறிமளம்

**இடம்:** புதுக்கோட்டை **காலம்:** *1913-14*

புதுக்கோட்டை சமஸ்தானம் ஸ்ரீ தர்பாரவர்கள் ஸமுகத்துக்கு திருமயம் தாலுகா அரிமழம் வட்டம் அரிமழத்திலிருக்கும் அரசப்பனம்பலகாரன் மகன் சோகரஸ முதியனம்பலகாரன். 1. லெக்ஷுமண அம்பலகாரன் மகன் நாராயணம்பலகாரன் 2. மேற்படி இரண்டு பேர்களும் வணக் கமாய் எழுதிக் கொண்ட மனு:-

1. இந்த சமஸ்தானத்தில் திருமயம் தாலூகா அரிமழம் தேக்காட்டூர் முதலான இடங்களில் பூர்வீகத்ததில் அரசாக்ஷி செய்து வந்த வெள்ளாழ அரசர்களால் மனுதார்களின் முன்னோர்களை இந்நாட்டில் துடிகளாக நிலைநிருதி பாதுகாத்து வந்தார்கள்.
2. மனுதார்களின் முன்னோர்கள் மேற்படி வெள்ளாழ ராஜாக்களுள் ஒருவராகிய வாணாதிராயர் என்ற ஒருவருக்கு ராணுவத்தலை வர்களாக வேலை பார்த்து வந்தார்கள்.
3. அரிமழம் வூர் அடங்கிய கானாடு என்ற ராஜாங்கத்துக்கு தலைவராகிய வாணாதிராயருக்கும் கோனாட்டு வேளாழர்களுக்கும் எருக்கொம்பு மலையில் நடந்த சண்டையில் மேற்படி வாணாதிராயருக்கு மனுதார்களின் முன்னோர்கள் மூவர் ராணுவதலைவர்களாகயிருந்து தங்களுடைய உயிர்களையும் தங்கள் ஆள்மாகா ணங்களில் 13 பேர்கள் உயிரையும் பழியாகக் கொடுத்து ஒத்தாசை செய்ததற்காக மேற்படி வாணாதிராயர் தன் நன்றியறிவைக் காட்ட அரிமழம் கிராமத்தை மேற்படி மூவர்களின் வார்சுகளாகிய மனுதார்களின் முன்னோர்களுக்கு பூமிக்காணியாக பெர்ல ஸுதந்தரதுடன் கொடுத்துவிட்டார்.
4. மேற்படி கானாடு என்பது மேற்படி பெயரினாலும் சரித்திர பூர்வமாயும் செம்மைக்கு சமுகத்துக்கு தெரிய வரும்.
5. தான கால முதல் அதாவது இந்த ராஜாங்கம் உண்டானதற்கு வெகுகாலத்துக்கு முன்முதல் இந்த மனுதார்களின் முன்னோர்கள் முதல் மேற்படி நிலங்களை வெட்டியும் காடுகளை அழித்து சாகு படி செய்தும் மேற்படி நிலங்கள் அனுபவிக்கப்பட்டு வருகின்றன.
6. மேற்படி வாணாதிராயர் வம்சந்தர்களென்று சொல்லும் தேக்காட்டூர் வெள்ளா ழர்கள் மேற்படி நிலங்களை சுபீக்ஷ மாயிருக்கிறதைக் கண்டு ஆசை கொண்டு, தங்களுக்கு மேற்படி அரிமழம் கிராமத்தில் கணக்கு சுவந்திரம் வசூலிக்க பாத்தியம்

கொண்டாடியதில், மனுதார்களின் முன்னோர்களுக்கும் மேற்படி தேக்காட்டூர் வேளாழர்களுக்கும் தகரார் உண்டானதில், பிரமாணத்துக்குப் போய், மனுதார்களின் முன்னோர்கள் தங்களுக்கு மேற்படி கிராமம் பெர்ல சுதந்திரத்துடன் கொடுக்கப்பட்டதாய் பிராமணஞ் செய்து விட்டதால், மேற்படி வேளாழர்கள் கொண்டாடின பாத்தியம் அற்றுவிட்டது. மேற்படி ஸங்கதியின் யாதார்த்தத்தை இப்பொழுதும் மேற்படி வெள்ளாழர்கள் அரிமழம் கிராமத்தில் ஜலபாறம் கூட செய்யாததைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம்.

7. மேலும், மேற்படி அரிமழம் கோவில் உற்சவங்களில் சண்டையில் இறந்து போன மனுதார்களின் முன்னோர்கள் மூவர்களுக்கு மரியாதையாக மனுதார்களுக்கு 3 காளாஞ்சியும் கொடுத்து வருகிறார்கள்

8. மேலும், மேற்படி வெள்ளாழர்களுக்காக மனுதார்கள் தங்கள் சிலவில் வெள்ளாழர்கள் மண்டகப்படி என்று ஒரு மண்டகப்படியும் நடத்திவருகிறார்கள்.

9. மேற்படி ஸர்க்காரவர்கள் மனுதார்களின் திரும்ப கவர்வத்தையும் மனுதார்களின் முன்னோர்கள் முன்னிருந்த ராஜாங்கத்துக்கு செய்து ஒத்தாசையும் நினைத்து, மனுதார்கள் முன்னோர்களையும் மனுதார்களையும் மிராசுதார்களாக நியமித்து, அவர்களும் வெகுகாலமுதல் வம்ச பாரம்பரையாய் மேற்படி ஸ்ர்க்காரவர்களுக்கு திருப்திகரமாய் வேலை பார்து வந்தார்கள்.

10. சுமார் 1913-1914 இ வாக்கில் அரிமழம் அம்மன்கோவில் உற்ஸவத்தில் ரதம் ரிபேராகியிருந்து சாயந்திரம் சுமார் 6 மணிக்குதான் ஓட ஆரம்பித்தது.

11. மனுதார்கள் அவ்விடத்தில் கூடியிருந்த வெகுஜனக் கூட்டதை விலக்கிக் கொண்டு ரதத்தை ஓட்டிக் கொண்டு வருகையில் ரொம்பவும் ஒடுங்கிய தெருவாகிய நாராயணன் செட்டி என்ற ஒருவர் வஜித்து வந்த வீட்டு வாசல்படி தாண்டி கொஞ்சதூரம் போனவுடன் ஸ்வாமி தெரிசிக்க வந்த வயோதிகனுக்கு மேற்டி நாராயணன் செட்டி, அவன் வீட்டு கல்படியில் விழுந்து இறந்து விட்டதாய் மனுதார்கள் கேழ்விப்பட்டு விசாரித்ததில், மேற்படி நாராயணன் செட்டி வீட்டு ஜனங்கள் மேல்கண்டபடி சொல்ல, அதை உண்மை யென்றே நம்பி, மனுதார்கள் ரதத்தை இழுத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

12. மேற்படி அரிமழம் வட்டம் மணியகாரர் போய் விசாரித்து தற்செயலாய் படிதடுக்கி விழுந்து மரணம் ஏற்பட்டதாய் மகஸர் தயார் செய்திருந்ததில், தாங்கள், கேழ்விப்பட்டதுக்கும்

ஒத்ததாகயிருந்ததால் அதை உண்மையென்று நம்பி, மேற்படி மகஸரில் இம்மனுதார்கள் கையெழுத்து செய்தார்கள்.

13. சற்று நேரத்துக்கெல்லாம், மேற்படி நாராயணன்செட்டி ரதமேறி இறந்ததாக மனுதார்கள் கேழ்விப்பட்டு, பிரேதத்தை போய் பார்த்ததில், தங்களுக்கும் ஸந்தேகம் உண்டானதால், உடனே பிரேதத்தை பந்தோபஸ்து செய்து ஸர்க்கார் உத்தியோகஸ் தரிடமும் ஒப்பிவித்துவிட்டார்கள். மேற்படி உத்தியோகஸ்தர்கள், மரணம் ரதமேறி ஏற்பட்டதாகயிருக்கலாமென்று தயாரிக்கப்பட்ட மகஸரிலும் கையெழுத்து செய்திருக்கிறார்கள்.

14. சில ஸிப்பந்திகள் மணியகாரர் தேரோடும் காலத்தில் கூட இருந்ததாக சாக்ஷியம் சொல்லும்படி வற்புறுத்தி சாசனத்தில், அதற்கு இணங்காததால், இம்மனுதார்கள் பேரில் ரிபோர்டு செய்யப்பட்டு, மகஸர் பொய்யாகத் தயாரித்த மணியம் கரணம் இவர்களுக்கு துணிந்து தண்டனையும், அவர்கள் சொன்னதை நம்பி கையெழுத்து செய்த நிரபராதியான இம்மனுதார்களுக்கு ஜாஸ்தி தண்டனையான பர்த்திரப்பும் ஏற்பட்டிருக்கிறது.

15. தரும எஜமானவர்கள் ரிகார்டுகளை மறுபடியும் பார்வையிட்டு மனுதார்களை நிரபராதியென்று கண்டுபிடித்து, மிராசு உதியோ கத்தை இம்மனுதார்களுக்கே செய்து கொடுக்க உத்திரவாக வேணும்

16. ஒருக்கால், மனுதாரகளுக்கும் தண்டனை விதிக்க வேணுமென்று அபிப்பிராயப்பட்டாலும், இதுவரை வேலையிலிருந்து நீக்கியதினால் உண்டான நஷ்டமும், மானஹாதியுமே இம்மனுதார்களுக்கு போதுமான சிக்ஷை. மனுதார்கள் மிராசு உத்தியோகம் வகிக்க லாயக்கில்லாதவர்களென்று ஸமுகத்துக்கு தோன்றினாலும், மனுதார்களுக்கு மேஜரானவும் தகுந்தவயதும் சாமர்த்தியமுமுள்ள, நிரபராதிகளாகியதுமாரர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்காவது மிராசு வேலை கொடுக்க உதிரவாக வேணும்.

17. மனுதார்களும் அவர்கள் முன்னோர்களும் முந்தின ராஜங்கத்தார்களுக்கும் இந்த ராஜாங்கத்தார்களுக்கும் வெகுகாலமுதல் செய்து வந்த ஒத்தாசையையும், காட்டையழித்து சாகுபடி நிலமாகி, வெகுசிலவுசெய்து செய்நேதிபண்ணி, இந்த ராஜாங்கம் உண்டாவதற்கு வெகு நாளைக்கு முன் முதல், ஸர்வஸ்வதந்திர பாத்தியத்துடன் அனுபவித்து வருகிறதையும், கருணையாக ஸமுகத்தில் ஆலோசித்து, மனுதார்களுக்காவது அவர்கள் வயது வந்த பிள்ளைகளுக்காகவது மிராசு வேலையை செய்து கொடுத்து ரக்ஷிக்க உதிரவாக வேணும்.

# 57. திருவிசலூர் கல்வெட்டு

பா.அருண்ராஜ்,தஞ்சாவூர்

## 57:1

**இடம்:** *தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டம், திருவிசலூர் சிவயோகநாதர் கோயில் வடபுறம் உள்ள குளக்கரையில்*

**காலம்:** *1932*

**செய்தி:** *தேவகோட்டையைச் சேர்ந்த செட்டியார்கள் கோயில் குளத்தை புனரமைத்த செய்தி*

1. **உ**
2. **சிவமயம்**
3. **ஜடா தீர்த்தம்**
4. **திருவயலூர்**
5. **ஸ்ரீ ஸொந்தர நாயகி**
6. **அம்பாள் ஸமேத**
7. **ஸ்ரீ சிவயோக நாத**
8. **சுவாமிக்கி**
9. **தேவகோட்டை**
10. **அ.ற.ம.அ.லெ.அ**
11. **அருணாஜலஞ் செட்டியார்**
12. **உபயம்**
13. **கலியுகாதி 2032**
14. **பிரஜோதி பத்தி ஆடி மாதம் 5 நாள்**
15. **இங்லீஷ் 1931 ஜூலை மாதம் 20 நாள்.**

## 57:2

**இடம்:** *மேலது, குளக்கரை வடக்கு கம்மாய்*

**காலம்:** *1931*

**செய்தி:** *குளம் புதுப்பித்தவர்கள் பெயர்கள் முதல் எழுத்து மட்டும் குறிக்கப்பட்டுள்ளது. அ-அருணாசலச் செட்டியார், ற - இராமநாத செட்டியார், அ -*

அருணாச்சல செட்டியார், லெ- லெட்சுமண செட்டியார், அ அருணாச்சல செட்டியார்

1. **1931**
2. **அ.று.அ**
3. **லெ.அ**

## 57:3

**இடம்:** மேலது, கோயில் தென்புறம் உள்ள நந்தவன சுவர்

**காலம்:** *1932*

**செய்தி:** நந்தவனம் அமைத்தவர் பற்றிய குறிப்பு

1. **உ**
2. **சிவமயம்**
3. **தேவக்கோட்டை**
4. **சி.க.பள. சு.பள**
5. **நாச்சியப்ப செட்டியார்**
6. **நந்தவன தர்மம்**
7. **கலியுகாதி 5032 பிரஜோத்பத்தி வருடம் தை மாதம் 21.**

## 57:4

**இடம்:** திருந்து தேவன்குடி வடக்கு பகுதி திடலில் உள்ள சிவன் கோயில் சுவர்

**காலம்:** *அக்ஷய, = 17ஆம் நூ.*

**செய்தி:** வடமொழி,கிரந்தம். ஸ்ரீ சம்பக நறமன் எனக் குறிக்கப்பட்டுள்ளது

1. **ஸ்ரீ சம்பக நற-**
2. **மண்ணும் உக..உ**
3. **.ந வஸந் கந்சோள**
4. **பாரக்யு பவத3.**
5. **ஸர ராயர் ஸ்ரீ ச.**
6. **ள ரான்மம் த3ம்..**
7. **க்ஷ்ய வருசம்....**

# தொல்லியல்

## 58. உத்தமபாளைய வட்டாரத் தொல்லியல்

பா. ஜோதீஸ்வரன், சென்னை

தேனி மாவட்டம் உத்தமபாளையம் வட்டத்தில் மேற்கொள்ள ப்பட்ட தொல்லியல் கள ஆய்வில் கீழ்கண்ட தொல்லியல் இடங்கள் புதிதாக கண்டுபிடிக்கப்பட்டன. அவையாவன :

| வ. எண் | ஊர் பெயர் | அமைவிடம் | கிடைத்த தொல்பொருள்கள் |
|---|---|---|---|
| 1 | தம்மனம்பட்டி | கம்பம் நகரிலிருந்து 1 5 கி.மீ.தென்மேற்கே முல்லைப் பெரியாறு கரைப்பகுதி | ஐந்து ஏக்கர் பரப்பளவு. இரும்புக்கால ஈமக்காடு. உடைந்த தாழிகள், கருப்பு சிவப்பு பானை ஓடுகள் கருப்பு நிற பானை ஓடுகள், சிவப்பு நிற பானை ஓடுகள் |
| 2. | புதுக்கோட்டை | உத்தம பாளையத்திலிருந்து வடக்கே 15 கி.மீ. | இருபுக்கசடுகள் இரும்புக்கால மட்கல ஓடுகள் |
| 3. | கன்னியம்பட்டி | உத்தம பாளையம் கம்பம் நகரின் வடக்கே 12 கி.மீ. | இரும்புக்கால கருப்பு-சிவப்பு மட்கல ஓடுகள், கருப்பு நிற ஓடுகள், சிவப்புபானை ஓடுகள் 2 ஏக்கர் பரப்பளவு |
| 4 | காமயகவுண்டன் பட்டி | கம்பத்திலிருந்து தெற்கே 10 கி.மீ. | கற்பதுக்கை, இரும்புக்கால பானை ஓடுகள் |
| 5 | கருநாக்க முத்தன்பட்டி | கம்பம் நகருக்கு அருகில் 8 கி.மீ | சாம்பல் நிற மண்மேடு, பானை ஓடுகள் |
| 6 | டி.மீனாட்சிபுரம் | உத்தமபாளையம்-தேவாரம் சாலை 10 கி.மீ.வடக்கு | நெடுங்கல், இரும்புக்கால ஓடுகள் |
| 7 | மல்லிங்காபுரம் | உத்தமபாளையம்-தேவாரம் சாலை கிழக்கு 2 கி.மீ | வரலாற்றுத்தொடக்க கால எச்சங்கல், ஊரிருக்கை, கருப்பு சிவப்பு பானை ஓடுகள் சன்கு வளையல்கள் வண்ணம் தீட்டப்பட்ட செம்பழுப்பு நிற பானை ஓடுகள் |

| | | | |
|---|---|---|---|
| 8 | மேல சிந்தலச்சேரி | உத்தமபாளையம்-சின்னமனூர் வடக்கில் 8 கி.மீ | நுண்ணிய கற்காலக்கருவிகள்- வரலாற்றுத் தொடக்க கால எச்சங்கள் |
| 9 | கீழ சிந்தலச்சேரி | மேலசிந்தலச்சேரிக்கு அருகில் | நெடுங்கல் |
| 10 | மார்க்கயன் கோட்டை | உத்தமபாளையம்-சின்னமனூர் வடமேற்காக 6.கி.மீ. | நெடுங்கல் |
| 11 | உத்தமபாளையம் | உத்தமபாளையம் அருகில் கிழக்கே 2 கி.மீ. | உடைந்த தாழிகள் இரும்புக்கால பானை ஓடுகள் |
| 12 | கருச்சிபட்டி | உத்தமபாளையம் அருகில் | நெடுங்கல் |
| 13 | சின்ன ஓவுலாபுரம் | உத்தமபாளையம் அருகில் | குகைத்தளங்கள் |
| 14 | சுக்கான்கல்பட்டி | உத்தமபாளையம்-சின்னமனூர் தென்கிழக்கில் 8 கி.மீ. | இரும்பு உருக்குப்பகுதி- 2 ஏக்கர் பரப்பளவு சுடுமண் குழாய்கள் |






# 59. ஏற்காடு தொல்லியல் சின்னங்கள்

**வீரராகவன்,** விழுப்புரம்
**பொன்.வெங்கடேசன்,** ஆறகளூர்
**பெருமாள்,** சேலம்,
**சுகவனமுருகன்,** காவேரிப்பட்டனம்

சேலம் மாவட்டம் ஏற்காட்டை சுற்றி உள்ள மலைக்கிராமங்களில் 20 க்கும் மேற்பட்ட இடங்களில் குறிப்பாக ஏற்காடு மலையில் உள்ள மோட்டூர், தங்கமலை, நல்லூர், மேலூர், வெள்ளக்கடை, செம்மநத்தம், போன்ற கிராமங்களில் கற்குவை, கல்திட்டை, புதிய கற்காலகருவிகள், குத்துக்கல், நடுகல் போன்றவை கண்டறியப்பட்டன.

## கற்குவைகள்

ஏற்காடு வெள்ளக்கடையிலிருந்து மோட்டூர் போகும் வழியில் மேலூர் கிராமத்தில் கல்திட்டையுடன் இணைந்த ஓர் கற்குவை கண்டறியப்பட்டது. மோட்டூர் கிராமம் சேட்டுப்பட்டி மலைப்பகுதியில் கற்குவையும் குத்துக்கல்லும் உள்ளன. இந்த குத்துக்கல்லின் உயரம் 60 செ.மீ.மோட்டூர் கிராமத்தின் மலைப்பகுதியில் ராமர் கோயில் என்ற இடத்தில் பத்து கற்குவைகள் காணப்படுகின்றன. இவற்றில் 7 பெரிதாகவும் 3 சிறிதாகவும் உள்ளது. மிகப்பெரிய கற்குவை ஒன்று கல்திட்டையுடன் இணைந்து இங்கு கண்டறியப்பட்டது. இதில் ஒரு வாயிலும் அதன் உள்ளே புதிய கற்கால கருவிகளும் காணப்படுகின்றன. இதன் உயரம் 300செ.மீ, அகலம் 200 செ. மீ,முன்புற வாயில் 100 செ.மீ ஆகும். இதை இங்குள்ள மக்கள் ராமர் கோயில் என அழைக்கின்றனர். இந்த இடத்திலிருந்து மலை உச்சியில் 3 கி.மீ உயரத்தில் தங்கமலை என்ற இடத்தில் 7 கற்குவைகள் வரிசையாக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றின் உயரம் 150 செ.மீ., சுற்றளவு 295 செ.மீ ஆகும்.

## கல்திட்டைகள்

ஆத்தூர் வட்டம் கெராங்காடு, பெத்தநாயக்கன் பாளையம் வட்டம் சேவூர் கிராமங்களில் கல்திட்டைகள் பாண்டியன் வீடு,குள்ளபாண்டி வீடு, சின்ன பாண்டி வீடு என அழைக்கப்படுகிறது. ஆனால் ஏற்காடு பகுதியில் இவை ராமர் வீடு எனவும், திருவண்ணாமலைப்பகுதியில் பஞ்ச பாண்டவர் வீடு எனவும் அந்தந்த பகுதி மக்களால் அழைக்கப்படுகிறது. பழங்காலத்தில் குள்ள மனிதர்கள் இதில் வசித்ததாகவும் இவர்கள்

நம்புகின்றனர். ஏற்காடு பகுதியில் கல்திட்டைகள் கற்குவையுடன் இணைந்தே காணப்படுகிறது.

## புதியகற்காலகருவிகள்

ஏற்காடு மலைப்பகுதியில் உள்ள நல்லூர், தங்கமலை, மோட்டூர் போன்ற கிராமங்களில் புதிய கற்கால கருவிகள் காணப்படுகின்றன. இந்த புதிய கற்கால கருவிகளின் ஒருமுனை கூராகவும் மறுமுனை தட்டையாகவும் உள்ளது. இவற்றை இப்பகுதி மக்கள் கோயில்களில் வைத்து வழிபட்டு வருகின்றனர்.

## காட்டுப்பன்றிகுத்திபட்டான் நடுகல்

ஏற்காடு மலையில் குழுவி என்ற மலைக்கிராமத்தில் ஊர் பொது கிணற்றின் அருகே ஒரு நடுகல் கண்டறியப்பட்டுள்ளது. இது காட்டுப்பன்றிகுத்திபட்டான் நடுகல் எனப்படுகிறது. இது 18 ஆம் நூற்றாண்டை சேர்ந்ததாக இருக்கலாம். வலக்கையில் வில்லை பிடித்தபடியும் இடக்கையில் நாணை இழுத்தபடியும் அம்பு விட தயார் நிலையில் ஓர் ஆண் நிற்கிறான். அவன் எதிரே ஒரு காட்டுப்பன்றி தாக்க வருவது போல் நடுகல் சிற்பம் அமைந்துள்ளது.






# 60. ஊத்துக்கோட்டை வட்டாரத் தொல்லியல்

ப.தெ.பாலாஜி, சென்னை

திருவள்ளூர் மாவட்டம், ஊத்துக்கோட்டை வட்டாரத்தில், சென்னை பல்கலைக்கழகத்தின் பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறையின் முதலாம் ஆண்டு முதுகலை மாணவர்களான ஐதீகா, தரணித்தா, சாந்தினி, ஜான் ஜுவான், பிரதீப், விபின், விக்னேஸ்வரன் ஆகியோர் தொல்லியல் கள ஆய்வில் கீழ்க்கண்ட தொல்லியல் இடங்களைக் கண்டுபிடித்தனர் அவை பின்வருமாறு

**மேல் மாளிகைப்பட்டு:** இவ்வூர் பெரியபாளையத்திலிருந்து 8 கி.மீ. தொலைவில் கோட்டக்கரை பகுதி மற்றும் ஓட்டாங்காச்சி மேட்டில் பழைய கற்கால கைக்கோடரிகள், கிளிப்பான்கள் இரும்புக்கால பானை ஓடுகள் கருப்பு சிவப்பு பானை ஓடுகள் வழுவழுப்பான சிவப்பு பானை ஓடுகள், சொரசொரப்பான சிவப்பு பானை ஓடுகள் கிடைத்தன.

**கல்பட்டு:** ஊத்துக்கோட்டையிலிருந்து தென்கிழக்கே 18 கி.மீ. தொலைவிலுள்ள இவ்வூரில் இரும்புக்கால ஈமக்காடு 2 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. இப்பகுதியில் முதுமக்கள் தாழிகளின் உடைந்த துண்டுகள், இரும்புக்கால மட்கல ஓடுகள் மிகுந்த அளவில் கிடைக்கின்றன.

**வடமதுரை:** ஊத்துக்கோட்டையிலிருந்து 19 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இவ்வூரின் கிழக்குப் பகுதியில் இரும்புக்கால ஈமச்சின்னங்கள் கண்டறியப்பட்டன.



# 61. விக்கிரமம் அகழாய்வு

**மோ.பிரசன்னா,** சென்னை

இந்தியத் தொல்லியல் துறை, சென்னை வட்டத்தின் தொல்லியல் கண்காணிப்பாளர் திருமதி. சத்தியபாமா பத்ரிநாத் அவர்களின் மேற்பார்வையில் 2012ஆம் ஆண்டு சோழ மண்டல கடற்கரைப் பகுதிகளில் பௌத்த சமய கள மற்றும் அகழாய்வு என்ற ஆய்வின் அடிப்படையில் தஞ்சாவூர் மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டம் விக்கிரமம் (10° 28" 10.87" N 79° 24" 37.56" E) என்ற ஊரில் சிறியஅளவிலான அகழாய்வு அவ்வூர் தென்னந்தோப்பில் மேற்கொள்ளப்பட்டது.

11-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சீன நாணயப் புதையலும், அமர்ந்த நிலையில் காணப்படும் புத்தர் சிற்பமும், சோழர் கால சிவன் கோயிலும் இவ்வூரின் தொன்மைக்கு சான்றாக விளங்குகிறது. மேலும் புத்தர் சிற்பம் காணப்பட்ட பகுதியினை புத்தடிக்கொல்லை என்று பொதுமக்களால் அழைக்கப்படுகிறது. அச்சிலைக் காணப்பட்ட இடத்தில் தொல்லியல் எச்சங்களாக முழு மற்றும் உடைந்த செங்கற்களும் பரவிக்காணப்பட்டன.

புத்தடிக்கொல்லை என்றழைக்கப்படும் அப்பகுதியில் அகழாய்விற்கான அகழாய்வு குழி 2 x 2 மீட்டர் அளவிற்கு பத்து அகழாய்வுக் குழிகள் அகழப்பட்டன. மேற்பரப்பிலே சில செங்கற்கட்டமைப்புகள் காணப்பட்டன. மற்ற அகழாய்வு குழிகளில் உடைந்த செங்கற்கள் பரவிக்கிடந்தன.

இரண்டு அகழாய்வு குழிகளின் மேற்பரப்பில் இருந்து சுமார் 5 செ.மீ. ஆழத்தில் கிழக்கு மேற்காக சுவரைப்போன்று ஒரு கட்டிட அமைப்பு உடைந்த செங்கற்களால் அமைக்கப்பட்டிருந்தது. அவை ஓர் அடுக்கு நிலையில் சுமார் 4.15 மீட்டர் நீளமாகவும், 25 செ.மீ. அகலத்தைக் கொண்டும் காணப்பட்டது.

மற்ற இரண்டு அகழாய்வுக் குழிகளின் மேற்பரப்பில் இருந்து 5 செ.மீ. ஆழத்திலிருந்து சுமார் 30 செ.மீ. ஆழம் வரை அகழாய்வு செய்யப்பட்டதில் 4 அடுக்கு நிலைகளில் செங்கற்களாலான ஒரு கட்டிடமைப்பு கிழக்கு மேற்காக 1.5 cm நீளமுடன் காணப்பட்டன. அக்கட்டிடமைப்பில் ' L ' வடிவில் ஓர் அமைப்பு காணப்பட்டது. மேலும் அதே போன்று Qdt III Bயில் 5 அடுக்கு நிலைகளில் செங்கற்களாலான ஓர் மேடைப்போன்ற அமைப்பு கிழக்கு மேற்காக 1.18 செ.மீ. நீளமுடனும் வடக்குத் தெற்காக 1.25 செ.மீ. நீளமுடன் காணப்பட்டன. மேடையானது

விளிம்பு பகுதியில் முழுமையான செங்கற்களாலும் மற்ற பகுதிகள் உடைந்த செங்கற்களாலும் கட்டப்பட்டு இருந்தன. மேலும் இவ்வகழாய்வில் கிடைக்கப்பெற்ற முழுச்செங்கற்களின் அளவானது *24 x 12.5 x 4.5* செ.மீ. ஆகும்.

இவ்வகழாய்வில் எவ்வித தொல்லியல் எச்சங்களும் (பானையோடுகள், மணிகள்)கண்டறியப்படவில்லை. இருப்பினும் பெருமளவில் அழிந்த நிலையில் காணப்படும் இம்மேடைப்போன்ற அமைப்பு புத்தருக்காக *11-12*ஆம் நூற்றாண்டுகளில் சிறிய அளவில் எழுப்பப்பட்ட கோவிலாக இருக்கலாம்.



4 மற்றும் 5 அடுக்கு நிலையில் காணப்பட்ட செங்கற்களின் கட்டமைப்பு





அகழாய்விற்கு பின் உள்ள தோற்றம்

# 62. கல்வராயன் மலை தொல்லியல் தடயங்கள்

**சி.வீரராகவன்,**விழுப்புரம்
**பொன்.வெங்கடேசன்,**ஆறகளூர்
**வை.கலைச்செல்வன்,**பெருமாள்,
**பொன்னம்பலம், கே.சீனிவாசன்,**சேலம்

*சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் பெரியகல்வராயன் மலையில் கல்திட்டைகள், கற்குவைகள், புதிய கற்காலக் கருவிகள், மற்றும் ஏராளாமான குத்துக்கற்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. பெரிய கல்வராயன் மலையில் உள்ள ஆத்தூர் வட்டம் கீழ்நாடு ஊராட்சி கெராங்காடு கிராமம், பெத்தநாயக்கன் பாளையம் வட்டம் கீழ்நாடு ஊராட்சி அடியனூர், சிறுமலை போன்ற கிராமங்களில் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. அப்போது அக்கிராமங்களில் 21 கல்திட்டைகள், 10 கற்குவைகள், புதிய கற்காலக் கருவிகள் மற்றும் ஏராளாமான குத்துகற்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இதில் 15 கல்திட்டைகள் ஓரளவு நல்ல நிலையிலும் 6 கல்திட்டைகள் சிதைந்த நிலையிலும் காணப்படுகின்றன. கற்குவைகளில் 6 நல்ல நிலையிலும் 4 சிதைந்த நிலையிலும் காணப்படுகிறது.*

**கல் திட்டைகள்**

*இக்கிராமங்களில் காணப்படும் கல்திட்டையானது மூன்று புறம் துண்டுக்கற்களால் அடுக்கப்பட்டு மேற்புறம் பலகைக்கல்லால் மூடப்பட்டுள்ளது. முன்புறம் மூடப்படாமல் உள்ளது. இதன் உயரம் 4.5 அடி, நீளம் 12 அடி, அகலம் 6 அடியாகவும் உள்ளது. மக்கள் வசிப்பிடங்களில் உள்ள கல்திட்டைகளின் உள்ளே புதிய கற்காலக் கருவிகளும், அந்தக் கருவிகளை வழுவழுப்பாக்க பயன்பட்ட பந்து வடிவ உருண்டை கல்லும், கூர் தீட்ட பயன்படுத்திய தேய்ப்புக்கல்லும் காணப்படுகிறது, கல்திட்டையின் உள்ளே விநாயகர் சிலையும் உள்ளது, இது பிற்காலத்தில் வைக்கப்பட்டு இருக்கலாம். மக்கள் வசிப்பிடம் இல்லாத மலைக்குன்றில் உள்ள கல்திட்டைகளில் புதிய கற்காலகருவிகளோ விநாயகர் உருவமோ காணப்படவில்லை.*

**கற்குவை**

*கெராங்காடு கிராமத்தின் அருகே உள்ள மலைக்குன்றின் அமைந்துள்ள பழமையான அவ்வையார் கோயில் அருகிலுள்ள பகுதிகளில் 10க்கும் மேற்பட்ட கற்குவைகள் காணப்படுகின்றன.*

செவ்வக வடிவமான நன்கு வெட்டப்பட்ட கற்கள் ஒன்றன் மீது ஒன்றாக வட்ட வடிவில் அடுக்கப்பட்டு கூம்பு வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. இதன் உச்சியில் செங்குத்தாய் ஓர் பலகைகல் வைக்கப்பட்டுள்ளது. இக்கற்குவையின் அடிப்பகுதியின் சுற்றளவு *12* அடி, நடுப்பகுதி *9* அடி, மேற்பகுதி *6* அடியாக உள்ளது. மேலே உள்ள தனி பலகைக்கல் முக்கால் அடியாக உள்ளது.

**குத்துக்கற்கள்**

நெடுங்கல் அல்லது குத்துக்கல் ஒரே கல்லில் கூம்பு கல்லாகவோ அல்லது பலகை கல்லாகவோ வைக்கப்பட்டுள்ளன. கெராங்காடு கிராமத்தில் இருந்து குன்றின் மீதுள்ள அவ்வையார் கோவிலுக்கு செல்லும் மலைப்பாதையில் ஏராளமான குத்துக்கற்கள் காணப்படுகின்றன.இவை ஒரே ஒரு பலகை கல்லால் அமைக்கப்பட்டுள்ளன. இந்த மலைப்பாதையில் செருப்பு அணிந்துகொண்டு நடக்க ஊர் மக்கள் அனுமதிப்பதில்லை.

**புதிய கற்காலக் கருவிகள்**

கெராங்காடு,சிறுமலை ,அடியனூர் போன்ற மலைக்கிரா மங்களில் மக்கள் குடியிருப்புக்கு அருகே உள்ள கல்திட்டைகளின் உள்ளே புதிய கற்காலக்கருவிகள் காணப்படுகின்றன. இவை வேறு வேறு வடிவங்களில் அமைந்துள்ள கைக்கோடரிகள் ஆகும். ஒரு அடி உயமுள்ள கற்கோடரிகளும் இங்கு காணப்படுவது சிறப்பான ஒன்றாகும்.





# 63. சோழர் நாணயங்களில் உலோகக்கலவை

**க.கமலக்கண்ணன்,**நாமக்கல்

சங்க கால சோழர்களின் நாணயங்களில் ஈயம், செம்பு மற்றும் கலப்பு உலோகங்களைப் பயன்படுத்தினர். பிற மரபுகளான சேரர்களும் பாண்டியர்களும் இவ் உலோகங்களில் நாணயங்களை வெளியிட்டனர். பிற்காலச் சோழ அரசரான இராஜராஜ சோழன் நாணய வெளியீட்டில் வார்ப்பு முறையையும் பயன்படுத்தினார். இக்கால கட்டத்தில் அதிக அளவில் நாணயங்கள்இம்முறையில் வெளியிடப்பட்டுள்ளன. இவை வெவ்வேறு எடையளவைக் கொண்டவையாகவும் விளங்கின. இக்கால கட்டத்தில் அச்சு, வார்ப்பு ஆகிய இரண்டு முறைகளிலும் நாணயங்கள் வெளியிடப்பட்டன. கீழே இராஜராஜன் கால நாணய உலோகத்தில் இருந்த கலவைகள், பூச்சுகள் குறிக்கப்பட்டுள்ளன.

1. **ஈயம்- உலோகப்பூச்சாக செம்பு மேல் ஈயம் பூசப்பட்டது. கலப்பு உலோகங்களாக செம்பு+ஈயம்+தங்கம்+வெள்ளி இருந்தன**
2. **தங்கம் - செம்பு மேல் தங்கம் பூச்சு உள்ளன. கலப்பு உலோகங்களாக வெள்ளி+தங்கம்+செம்பு இருந்தன.**
3. **வெள்ளி - செம்பு மேல் வெள்ளி பூச்சு. கலப்பு உலோகங்களாக செம்பு தங்கம் (Electron 50./.+50./.)**
4. **பித்தளை - செம்பு மேல் வெள்ளி மேல் தங்கப்பூச்சு.செம்பு + வெள்ளி (Electron 50./.+50./.)**
5. **சுத்தமான செம்பு- வெள்ளி மேல் தங்கம்**
6. **செம்பு ஆகிய உலோகங்கள் இராஜராஜன் காலத்தில் நாணயங்கள் செய்ய பயன்பாட்டில் இருந்தன.**



# 64. மொழியியல் நோக்கில் ஐராவதம் மகாதேவன் அவர்கள் எழுதிய தொன்மைத் தமிழ் கல்வெட்டுகள் (தொடக்ககாலம் முதல் பொ.ஆ.6 ஆம் நூற்றாண்டு வரை)

# (Early Tamil Epigraphy- from the earliest times to the sixth century C.E)

செ.வை. சண்முகம்,சிதம்பரம்

## தொல் மொழி

*தொல்லியல் ஆய்வில் எழுத்து மொழி முக்கிய பங்கு வகிக்கிறது. அவ்வகையில் மொழியியல் ஆய்வில் இன்னொரு தொல்லியல் உள்ளது. அதுதான் வரலாற்று ஒப்பிலக்கண மொழியில் மேற்கொள்ளப்படும் தொல் மொழி (proto language) என்ற கருத்தமைவு ஆகும்.*

*மொழி ஆய்வில் வரலாற்று ஒப்பிலக்கணம் என்ற புதிய முறை 18ஆம் நூற்றாண்டில் தோன்றியது. மொழிகளுக்குள் இன உறவு ( genetic relation) உடையவை/ இல்லாதவை என்று கண்டறிந்து, இன உறவு உடைய மொழிகளை (genetically related languages) ஒரு மொழிக் குடும்பம் ( Language family) என்று பெயரிட்டு, அந்த இன உறவு உடைய மொழிகளை ஒப்பாய்வு செய்து, அந்த மொழிகளுக்கு எல்லாம் மூலமான மொழியை -தொல் மொழியை (proto language) மீட்டுருவாக்கம் ( reconstuction) செய்வதுதான் அதன் முக்கியக் கடமை. அது அந்த மொழிக் குடும்ப மொழிகளில் கிடைக்கும் மிகப் பழைய எழுத்துச் சான்றுக்கு உரிய காலத்தை விட குறைந்தது ஆயிரம் ஆண்டுக்கு முந்தைய மொழி அமைப்பையும் கண்டறிய உதவுவது. அந்த மொழிகள் எப்படித் தனிமொழிகளாக உருப்பெற்றது என்பதை ஆராய்ந்து ஒரு குறிப்பிட்ட மொழியின் தொல் வரலாற்றை (pre history of a lanaguage) விளக்குவது, அதாவது அந்த மொழிக்கு எழுத்துச் சான்றுக்கு உரிய கால கட்டத்துக்கு முற்பட்ட மொழி அமைப்பை மீட்டுருவாக்கம் செய்து அதன் மூலம் மொழியின் தொல் வரலாற்றையும் அந்த மொழி தனி மொழியாக உருப்பெற்றதைக் கண்டறிய உதவுவது போன்ற கருத்தமைவுகள் அடங்கியுள்ளன. அதுதான் மொழிக் குடும்பம் என்ற கருத்தமைவுதான் அடிப்படை.*

18ஆம் நூற்றாண்டு வரை எல்லா இந்திய மொழிகளும் வட மொழியிலிருந்து கிளைத்தது என்ற கருத்து மறுக்கப்பட்டு தமிழ், மலையாளம், கன்னடம், துளு, தெலுங்கு முதலிய மொழிகள் திராவிட மொழிக் குடும்பம் என்ற தனிக் குடும்பத்தைச் சேர்ந்தது என்றும் கண்டறியப்பட்டது. அத்தோடு தென்னாட்டில் உள்ள பழங்குடிகளான தோடா, கோட்டோ, இருளா, குறும்பா, காட்டு நாயக்கா ஆகிய மொழிகளோடு மத்திய பிரதேசம்,பீஹார் மாநிலங்களில் பேசப்படும் கோண்டி, பர்ஜி, கூயி, மால்டா, குறுஹ் முதலிய மொழிகளும், இன்றைய பாகிஸ்தான் பகுதியில் ஒரு பழங்குடி இனத்தவரால் பேசப்படும் பிராஹுஇ மொழியும் திராவிட மொழி இனத்தைச் சேர்ந்தது என்று கண்டறியப்பட்டுள்ளது. அதன் அர்த்தம் என்ன? பண்டைய இந்தியா அதாவது இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேஷ் முழுமையும் திராவிட மொழி பேசும் மக்கள் வாழ்ந்து வந்தார்கள் என்று இன்று ஆய்வு பூர்வமாக நிறுவப்பட்டுள்ளது. அதனால் i.ரிக் வேதத்திலும் சில திராவிட மொழிச்சொற்கள் இருப்பது ஆய்வு பூர்வமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ii. சிந்துவெளி நாகரிகக் குறியீடுகள் திராவிட மொழிச் சொற்களாக இருக்கலாம் என்பதற்கான பல ஆதாரங்களை ஐராவதம் மகாதேவன், ஆஸ்கோ பர்ப்போலா போன்ற பலர் ஆய்வு மூலம் கூறிவருகிறார்கள். அப்படியானால் வரலாற்று ஒப்பிலக்கண ஆய்வு மேற்கொள்ளும் தொல் மொழி ஆய்வு, மக்கள் வரலாறு அறியவும் துணைநிற்கிறது என்பதை மறுக்கமுடியாது.

## அறிவுத் தொல்லியல்

ஆங்கிலத்தில் *Archaeology of knowledge* என்ற தொடர் உண்டு. அதைத் தமிழில் அறிவுத் தொல்லியல் என்று கூறலாம். எழுத்தாக்கத்துக்குப் பின் மனித சாதனையாகக் கருதப்படுவது எழுத்து இலக்கியம் படைப்பதும், அதன் அறிவு சார் முயற்சியாக மொழிக்கும் இலக்கியத்துக்கு இலக்கணம் படைப்பதும் ஆகும். 'எள்ளிலிருந்து எண்ணெய் எடுப்பதுபோல் இலக்கியத்திலிருந்து எடுப்பது இலக்கணம்' என்பது முதுமொழி. அதன்படி எழுதப்பட்ட இலக்கணமே மனிதனின் அறிவு சார் முயற்சியாகக் கொள்ளப்பட வேண்டும். அதாவது இலக்கியம் மனிதனின் சமூக உணர்வு சார் முயற்சி ஆகும்.

எழுதப்பட்ட இலக்கணத்தை அறிவுத் தொல்லியல் நோக்கிலும் ஆராயலாம். சமூக மொழியியலில் இலக்கண உருவாக்கத்தையும் அதன் அறிவு அடிப்படையும் ஆராய இலக்கணச் சமூகவியல் நோக்கில் (*sociology of grammar*) என்ற ஒரு உள்துறையும்

வளர்ந்துள்ளது (பார்க்க சண்முகம், 1989, 1994) குறிப்பிடத்தகுந்தது.

அந்த முறையில் எழுத்து மொழியின் தமிழ்ச் சமூகச் சாதனையின் கொடுமுடியாக விளங்கும் சங்ககால இலக்கியமும் இலக்கணமான தொல்காப்பியமும், அறிவுத் தொல்லியல் நோக்கில் தொல்லியல் தரவுகளாகக் கருதத் தகுந்தவை.

## இலக்கியத் தொல்லியல்

பண்டைக்கால இலக்கியமான சங்க இலக்கியம், சிலப்பதிகாரம் ஆகியவைகளைப் பயன்படுத்தி போன நூற்றாண்டு வரலாற்று அறிஞர்களான பி.டி.சீனிவாச ஐயங்கார், நீலகண்ட சாஸ்திரி, இராமசந்திர தீட்சதர், கே.கே,.பிள்ளை போன்றோர் தமிழக தொல் வரலாற்றைத் தமிழ் இலக்கியங்கள் மூலம் மீட்டுருவாக்கம் செய்துள்ளார்கள். சங்க இலக்கியத்தில் மோரியர், வடவர், ஆரியர்,நந்தர், வடுகர், யவனர்ஆகிய பிற இனக் குழுக்கள் இருப்பது குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்கள் தொழில்கள், அவர்களின் சமூக மதிப்பு ஆகியவை முன்னரே சுருக்கமாக ஆராயப்பட்டுள்ளது (சண்முகம்,1989 : 210-239).

இலக்கியத்தின் ஒரு சிறப்பு உலகில் வாழும் பல வகை மனிதர்களின் பிரதிபலிப்பாகவும் இலக்கிய மாந்தர்களையும் இலட்சிய மனிதர்களையும் படைத்துக் காட்டுவது.

சங்க இலக்கியத்தின் சிறப்பு சமயச் சார்பற்ற இலக்கியம், மொழி பெயர்ப்பு இலக்கியம் அல்ல. அது பண்டைத் தமிழரின் இலக்கிய சாதனை. அடுத்து இலக்கணமும் வரலாற்று நிலையிலும், இலக்கணம் எழுந்த மொழிச் சமூகத்தின் அறிவுத் தொல்லியல் நோக்கிலும் ஆராயப்படவேண்டும்.

## இலக்கணத் தொல்லியல்

வரலாற்று நோக்கில் தொல்லியல் ஆய்வுக்குக் கல்வெட்டு ஆய்வு பெரிதும் துணைநிற்கிறது என்பதை மறுக்கமுடியாது. தமிழின் மிகப் பழைய இலக்கணமான தொல்காப்பியம் எழுத்து மொழி பற்றி செய்திகள் ஐராவதம் மகாதேவன் குறிப்பிட்டுக்காட்டித், தமிழ் பிராமி எழுத்துகளின் வரலாறு, வளர்ச்சிபற்றிய கருத்துகளைக் குறிப்பிட்டுள்ளார். பொதுவாகத் தமிழ் எழுத்து வடிவம் பற்றிய கருத்துகள் பிறமொழியிலிருந்து கடனாளப்பட்டு திருத்தம் செய்யப்பட்டது என்று புலப்படுவதையும் ஐராவதம் மகாதேவன் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியர் செய்யுள் ஈட்டச்சொற்களாக அதாவது செய்யுளில் பயன்படுத்தும் சொற்களில் ஒன்றாக வடசொல்லைக்

(சொல். எச்சவியல் 1) குறிப்பிட்டு அந்த சொற்களைத் தழுவும் முறை பற்றியும் (எச்சவியல் 5,6) கூறியுள்ளது அவர் காலத்திலேயே வட மொழியோடு தொடர்பு ஏற்பட்டு வடமொழிச் சொற்களைக் கடனாளும் மரபு ஏற்பட்டுவிட்டதைப் புலப்படுத்துகிறது. செய்யுள் ஈட்டச்சொற்களாகத் திசைச்சொல் என்று கூறியது இன்று மொழியியல் நோக்கில் வட்டாரக் கிளைமொழிகள் (regional dialects) என்று அடையாளம் காணப்பட்டுள்ளது. தொல்காப்பியர் 'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம்' என்று (எச்சவியல்.4) கூறி அவைகளை அடையாளம் காட்டாவிட்டாலும், அன்றைய தமிழகம் மொழியியல் நோக்கில் 12 வட்டங்களாகக் கருதப்பட்டது என்பது அரசியல், பொருளாதார, பண்பாட்டு அடிப்படை கொண்டது என்பதை மறுக்கமுடியாது.

சமூகம் அரசியல், சமூக நிலையில் மாறுபட்டாலும் வட்டார வழக்கைத் தாண்டி எல்லாருக்கும் பொதுவான ஒரு வழக்கு இருந்ததை- இயற்சொல் அதாவது தகு வழக்கு (standard dialect) இருந்ததை 'இயற் சொல் தாமே/ செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி/ தன்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே' எச்சவியல். 2) கூறியிருப்பது மொழி பயன்பாடு பற்றிய தெளிந்த வெளிப்பாடு.

தன்னுடைய கால அரசியல் சமூகப் பண்பாட்டுநிலையை உணர்ந்து செய்யுள் ஈட்டச் சொற்களாக இயற்சொல், திரிசொல், திசைச்சொல்லோடு வட சொல்லையும் சேர்த்தது அவருடைய பரந்த அறிவியல் பூர்வமான அணுகுமுறைக்கு கூடுதல் சான்று. அதற்கு அடுத்த நிலையில் நூல் வகைகளைப் பேசும்போது முதல் நூல் (original), வழி நூல் என்று இரண்டு வகைப் பிரித்ததோடு, வழிநூலின் வகைகளாக 'தொகுத்தல், விரித்தல், தொகைவிரி என்ற மூன்று வகைகளோடு மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தல் 'மரபியல் 99) என்று மொழி பெயர்ப்பு நூலையும் சேர்த்தது, அவருடைய அறிவுசார் நுண்ணுணர்வோடு உலகளாவிய பார்வை, பிற சமூகத்தின் அறிவை மதிப்போடு அந்த அறிவு தன்னுடைய சமூகத்துக்கும் கிடைக்கவேண்டும் என்ற உணர்வு ஆகியவைகளைப் புலப்படுத்துகிறது.

இன்னொரு நிலையில் இருபதாம் நூற்றாண்டில் பேசப்படும் மொழி மாற்று இலக்கணத்துக்கு (contrastive grammar) முன்னோடியாக கருத்து அளவில் தமிழ் முறைக்கும் வடமொழிக்கும் உள்ள ஒற்றுமையையும் (களவு திருமணம் கந்தருவர் மணம் போன்றது - களவியல் 1), வேற்றுமையையும்

அகத்தெழு வளியிசை அந்தணர் மறைத்தே/ அஃது இவண் நுவலாது' பிறப்பியல் 20) குறிப்பிட்டுள்ளது பழந் தமிழகத்தில் வட மொழிக் கல்வி இருந்தது என்பதை மறுக்கமுடியாது. சமூகவியல், அறிவியல் துறைக்குப் பயன் உள்ள கருத்துகள் ஆகும். எனவே இலக்கணம் உணர்த்தும் தமிழ்ச் சமூக தொல்லியல் ஆய்வுக்கு அதாவது சமூகவியல், அரசியல் வரலாறு போன்ற துறை துணையாக இருப்பதால் பழங்கால இலக்கணங்களும் தொல்லியல் ஆய்வுக்கு உரிய ஒரு ஆவணமாகக் கருதப்படவேண்டும்.

இவைகளுக்கு மேலாக இலக்கணம் என்பது மொழி அறிவியல் (மொழியியல்) ஆகும். மொழிகளை எல்லோரும் பயன்படுத்துகிறோம். நமக்கு நம்முடைய மொழியில் எத்தனை ஒலிகள் இருக்கின்றன. அல்லது நாம் எத்தனை ஒலிகளைப் பயன்படுத்துகிறோம் என்று தெரியாது. அவைகளை அடையாளம் கண்டு அவைகளைத் தொகுத்து வகுத்துப் பெயர்கள் கொடுப்பது அறிவியலின் முதல் கட்ட வேலை. ஒலிகளை உயிர், மெய் என வகுத்து அவைகளின் செயல்பாட்டு அடிப்படையில் முதல் எழுத்து, சார்பெழுத்து என்று பாகுபடுத்தி விளக்கியது அடுத்த நிலை ஆய்வாகும். இன்று அவைகளை மொழியியலார் தொல்காப்பியரின் எழுத்திலக்கணக் கோட்பாடு, சொல் இலக்கணக் கோட்பாடு என்ற தலைப்பில் ஆராய்ந்து வருகிறார்கள். (பார்க்க, சண்முகம், 1980, 1984) அவை தமிழரின் மொழிசார் தொல்லியல் அறிவாகப் பேசப்பட வேண்டும்.

தொல்காப்பியத்தின் இன்னொரு சிறப்பு மொழி அமைப்பு ஆய்வையும் (இலக்கண ஆய்வு என்று குறிப்பிடுவது) இலக்கிய அமைப்பு ஆய்வையும் ஒருங்கிணைத்தது தமிழரின் தொல்லியல் அறிவின் ஒரு சாதனை. மனிதனின் குடும்ப வாழ்க்கையை அகம் என்று கூறி; அரசு, பொருளாதாரம், சமூகம் ஆகிய கூறுகளைப் புறம் என்று பிரித்து விளக்கியது. அதாவது இலக்கியத் திறனாய்வு நோக்கில் அவருடைய பொருள் இலக்கணக் கோட்பாடும் ஆராயப்பட்டு வருகிறது.

## எழுத்தாக்கம்

மொழி என்றாலே பேச்சு மொழியையே குறிக்கும். எழுத்தாக்கம் என்பது மனித சமூகத்தின் மொழி அறிவுசார் முயற்சி. அது வாய்மொழி அறிவு மூலம் பரவிய அறிவை அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்லும் ஒரு கருவி. அது எழுத்தாக்கம் செய்தவரின்- குழுவின் மொ்ழியியல் நுண்ணுர்வின் புலப்பாடு.

எழுத்துகளில் சித்திர எழுத்து, அசை எழுத்து, ஒலியன் எழுத்து என்ற மூன்று பெருவகை காணப்படுகிறது. அவைகளில் அசை எழுத்து, ஒலியன் எழுத்து வகைகளில் இரண்டு கருத்தமைவுகள் புதைந்துள்ளன: 1. ஒலியன் கொள்கை அதாவது பொருள் மாறுபடுத்தும் ஒலிகள் (அடு, ஆடு, இடு, ஈடு போன்றவைகளில் முதல் உயிர் எழுத்து மாறுபாடுவதால் அந்த ஒலிகள் ஒலியன்கள் என்று மொழியியலில் குறிக்கப்படுகின்றன. வாழ், வாள், வால், வார், வாய் ஆகிய சொற்களில் மெய்யெழுத்துகள் மாறுபாடு வேறு வேறு பொருள் உடைய சொற்கள் என்று கருதப்படுவதால் அந்த மெய்யெழுத்துகள் ஒலியன்களாகச் செயல்படுகின்றன என்று பொருள். மேலும் வாழ/ வாழ், அள /அள் (செறிந்த அகநானூறு.378,20), பல/ பல் (உறுப்பு), சேய (அதிகதூரம் உடையது)/சேய் (அதிக தூரம்), சேர்/சேர என்று பொருள் மாறுபடுவதால்தான் புள்ளி இட்டு வேறுபடுத்தும் வழக்கம் தேவைப்பட்டது.

உண்மையில் சொல்லில் முதல், நடு, கடை ஆகிய இடத்திலும் அமைந்த மாறுபாடுகள் அடிப்படையிலும் ஒலி ஒற்றுமை அடிப்படையிலும் ஒலியன்கள் வரையறுக்கப்படும். மொழி பேசுவோரும் ஒலியன் கோட்பாட்டை உள் உணர்ந்து செயல்படுத்துகிறார்கள். அந்த ஒலியன் உள்ளுணர்வால்தான் பல மொழிகளில் எழுத்தாக்கம் செய்பவர்களும் செயல்பட்டுள்ளதாகக் கண்டறியப்பட்டுள்ளது. அதைப் போலவே பிற மொழி எழுத்துகளைத் தழுவிக்கொள்ளும்போதும் அந்த ஒலியன் நுண்ணுணர்வு புலப்படுவதும் கண்ட றியப்பட்டுள்ளது.

உலக அளவில் பொ.ஆ.மு. 2000 ஆண்டை ஒட்டிய எழுத்து மொழி உருவாக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் முதல் எழுத்துச்சான்று சிந்துவெளி குறியீடுகள்தான். அதன் மொழி திட்டவட்டமாக வரையறுக்கப்படவில்லை. அடுத்த நிலையில் மௌரியர் கால பிராமி கல்வெட்டுகள், வட பிராமி, தென் பிராமி, பட்டிப்பிரோலு, சிங்கள பிராமி, தமிழ் பிராமி (மகாதேவன் ப. 205) என்பவை பழங்கால கல்வெட்டுகள். கல்வெட்டு ஆய்வே எழுத்தாக்க ஆய்வுக்கு முன்னோடி.

## கல்வெட்டு ஆய்வு

பொது ஆண்டு ஆறாம் நூற்றாண்டிலிருந்து தமிழ் எழுத்து, வட்டெழுத்து என்று அழைக்கப்படும் எழுத்துகளால் எழுதப்பட்ட பல்லவர்,பாண்டியர் சோழர் காலக் கல்வெட்டுகள் கல்வெட்டுகள் 19ஆம் நூற்றாண்டு தொடக்கத்திலிருந்து

கண்டுபிடித்து பதிப்பிக்கும் பணி தொடங்கியது. கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்கும் முன்னரும் உள்ள கல்வெட்டுகள் வேறுவகைப்பட எழுதப்பட்டிருப்பது முதலில் 1882இல் அறியப்பட்டாலும் அதன் எழுத்துவகை, மொழி ஆகியவைகளை அடையாளம் காணுவதில் இருபதாம் நூற்றாண்டு தொடக்கம் வரை காத்திருக்க வேண்டியதாயிற்று. இன்று பெரும்பான்மையும் பாண்டிய நாட்டிலும் குகை கல்வெட்டுகள் என்று கூறப்படுபவை எழுத்து வடிவமும் தமிழ் பிராமி என்று மொழி பழந் தமிழ் (*old Tamil*) என்றும் அடையாளம் காணப்பட்டுள்ளது . அந்தக் கல்வெட்டுகளைத் தொகுத்து மகாதேவன் தன் நூலில் கொடுத்துள்ளார் .

## தமிழகத்தில் எழுத்துகள்

பழங்கால தமிழகத்தில் கீறல் குறிகள், (*graffiti*), பிராகிருதம் (பிராகிருத மொழி) பிராமி தழுவி எழுதப்பட்ட தமிழ் பிராமி (தமிழி) ஆகிய மூன்று வகை எழுத்துகள் கிடைத்துள்ளன.

வரலாற்று நோக்கில் இந்தியாவில் பிராமி, வட பிராமி, தென்பிராமி, பட்டிபுரோலு, சிங்கள பிராமி, தமிழ் பிராமி என்று 6 வகைப்படுத்தப்பட்டுள்ளது (ப. 205). தமிழகத்தில் மேலே குறிப்பிட்ட பிராமி, பட்டிபுரோலு, தமிழ் பிராமி ஆகிய மூன்றோடு கற்கால குறிகள் (*graffiti*) என்ற ஒன்றும் கிடைத்துள்ளன. தமிழில் உறையூர், கொடுமணல் ஆகிய இடங்களில் செய்த அகழாய்வுகளில் குறியீடுகளும் (*graffiti*) தமிழ் பிராமி எழுத்துகளும் தனித்தனியாகவும் ஒரே பானை ஓட்டில் இரண்டும் கலந்தும் கிடைக்கின்றன என்றும் கீறல் குறியீடுகள் மிகவும் காலத்தால் முற்பட்டது என்றும் மகாதேவன் குறிப்பிடுகிறார் (ப. 209). அந்தக் குறியீடுகளின் மொழி அடையாளம் காணமுடியாவிட்டாலும் தமிழ் வரி வடிவ ஆய்வில் அந்தச் செய்தி குறிப்பிடப்பட வேண்டும்.

தமிழகத்தில் பிராகிருத மொழியில் பிராகிருத எழுத்தில் எழுதப்பட்ட பானை ஓடுகள், நாணயங்கள், மோதிரம், பொ.ஆ.மு. சுமார் 2ஆம் நூற். இருந்து பொ.ஆ. பி. நாலாம் நூற். வரை கிடைத்துள்ளது ( ப. 74 தொ.). கரூரில் கிடைத்த மோதிரத்தில் உள்ள எழுத்துப் பட்டிபுரோலு வகையைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது.

சமண புத்த மதப் பரவலுக்காகப் பிராகிருதம் அறிந்த அந்த மதத்தைச் சார்ந்த துறவிகள் தமிழ் பிராமி எழுத்துகளைக் கையாண்டிருக்கலாம் (ப. 201) என்று கருதப்படுகிறது. தமிழின்

பழைய எழுத்துச் சான்றுகள் கல்வெட்டு, நாணயம், பானை ஓடுகள், மோதிரம், ஆகியவைகளில் கிடைக்கின்றன.

நாணயத்தில் தமிழ் பிராமி எழுத்துகள் அரிக்கமேடு, கொடுமணல், கரூர் ஆகிய இடங்களில் காணப்படும் பானை ஓடுகளில் உள்ள எழுத்துகள் (பொ.ஆ.மு. 2ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைத்தாலும் அவை கல்வெட்டு எழுத்துகளிலிருந்து மாறுபட்டுள்ளன (ப.207).

அந்த அடிப்படையில் தமிழைப் பொறுத்த வரையில் ஐராவதம் மகாதேவன் *Early Tamil Epigraphy (from the earliest Times to the sixth century C.E.)* என்ற நூலின் இரண்டாவது பாகமான தொல் தமிழ்க் கல்வெட்டியல் என்பதில் தொல் எழுத்து (*palaeography*) , எழுத்தியல் (*orthography*) என்ற இரண்டு இயல்கள் (5,6) தமிழில் எழுத்தாக்கம் பற்றி விளக்குகின்றன. அவை சமூக மொழியியல்,பொது மொழியியல் அடிப்படையில் இங்கு விவாதிக்கப்படுகின்றன.

**தமிழ் எழுத்தாக்கம்**

பண்டைய தமிழ் எழுத்துகள் மௌரியர்கால பிராமி எழுத்துகளின் தழுவல் என்றும் தமிழ் எழுத்தாக்கம் பரிணாம வளர்ச்சி அதுவும் மெல்ல மெல்ல (*slower phase of evolution* ப. 216) வளர்ச்சி பெற்றது என்றும் நூலில் குறிப்பிடப்பட்டு, முற்காலம் ( சுமார் பொ.ஆ.மு. 2 ஆம் நூ. முதல் பொ.ஆ. 1ஆம் நூ), பிற்காலம் (சுமார் பொ.ஆ. 2ஆம் நூ. முதல் 4ஆம் நூ) என்று பகுத்து (ப. 206) மொத்தம் ஆராயப்பட்டுள்ள 96 கல்வெட்டுகளில் 59 கல்வெட்டுகள் முற்காலத்தையும் ஏனையவை பிற்காலத்தவையும் சேர்ந்தவை என்று குறிப்பிடப்பட்டுள்ளது ( ப. 354, 475).

மகாதேவன் இரண்டு கால கட்டமாகப் பிரித்துப் பேசினாலும் வரிவடிவத் தொகை என்று பேசும்போது தழுவப்பட்டவை, கடனாட்சியைப் பிரித்துப் பேசுவதால் ( ப.211 தொ.) பரிணாம வளர்ச்சி சரியாக விளக்கப்படவில்லை என்று ஆகிறது. அப்படியானால் முழுவதும் விளக்க முறையில் இரண்டு கால கட்ட வரிவடிவங்கள் தனித் தனியே விளக்கப்படும்.

**முற்காலம்**

தமிழ் பிராமியில் 9 உயிர் வரிவடிவங்கள் (எழுத்துகள், அ, ஆ, இ,ஈ, உ, ஊ, எ/ஏ, 'ஐ, ஒ/ஓ) காணப்படுகின்றன. அவைகளில் ஐகாரம் உயிர் மெய் வடிவம் மட்டுமே கிடைத்துள்ளது.

மெய்யெழுத்துகள் 21 (தமிழ் 18, பிராகிருத dh.s ,h) வரிவடிவங்கள் காணப்படுகின்றன. வரிவடிவத்தைப் பொறுத்த வரையில் அவைகளில் 4 எழுத்து தவிர ஏனையவை பிராமி எழுத்துகளோடு நெருங்கிய தொடர்பு உடையவை. அதாவது எழுத்தாக்க முறையில் கடனாட்சி (borrowing) ஆக ஏற்றுக்கொள்ளப்பட்டதாகக் கொள்ளலாம். அவைகளிலும் dh.s ,h பிராகிருத மொழிச்சொற்கள் எழுத மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளன. நாலு எழுத்துகளும் <ழ, ள, ற,ன > (< > என்ற குறியீட்டுக்குள் இருப்பவை வரிவடிவத்தைக் குறிக்கும்) அவைகளுக்கு ஒலி ஒற்றுடை உடைய எழுத்துகளிலிருந்து தழுவிக் கொள்ளப்பட்டதாகவும் விளக்கப்பட்டுள்ளதைக் கடன்படைப்பு (loan creation) என்று கொள்ளலாம்.

## எழுத்தாக்கம்

பிராமி எழுத்துகள் நோக்கில் தமிழ் பிராமி எழுத்துகளைப் பார்க்கும்போது எழுத்தாக்கத்தில் நீக்கல், சேர்த்தல், தழுவல் ஆகிய மூன்று முறைகளும் காணப்படுவதையும் நூல் விளக்குகிறது (ப.211முதல்).

நீக்கல்: தமிழில் இல்லாத ஒலிப்புடைய (voiced)வல்லொலிகள், வெடிப்பொலி உடைய வல்லெழுத்துகள் (aspirate), ஸகர வர்க்கங்கள் <š, sh> அனுஸ்வாரம் <ம்> விசர்க்கம் <h> ஆகிய எழுத்துகள்.

கூட்டல்: தமிழுக்கே உரிய நாலு ஒலிகளுக்கு (ழ,ள, ற,ன) உரிய

வரிவடிவங்கள். தனி மெய்க்கு உரிய புள்ளி.

தழுவல்: கூட்டெழுத்து தவிர்த்தல்,

சிறுபான்மையான < dh, s, h > எழுத்துகளில் <h> ஸ்ரீலங்கா நாணயத்தில் வருவதால் குறிப்பிட்டுள்ளதால் அது இங்கு விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. < dh> என்பது dhammam (தம்மம் )என்ற சொல்லில் நூலில் குறிப்பிட்ட வரிசையில் முதல் இரண்டு கல்வெட்டுகளில் (1,2 )மட்டும் வர, <s> 12 தடவையும் முற்கால பகுதி முழுவதும் பல சொற்களில் வந்துள்ளதாக நூலில் குறிப்பிடப்பட்டுள்ளதால் முற்கால பகுதிக்குள்ளும் ஒரு பரிணாம வளர்ச்சி இருப்பதாகக் கருதலாம்.

மேலும் தம்மம் என்பதும் <தம்மம், தமம்> என்று இரண்டு முறையில் எழுதப்படுள்ளது. எனவே இங்கு இந்தச் சொல்லை மட்டும் எழுத <dh> என்ற வரிவடிவத்தைப் பயன்படுத்துவானேன் என்ற கேள்வி எழுகிறது. 1. அவருடைய பிராகிருத மொழி

அறிவைப் புலப்படுத்துகிறது. தமிழ் பிராமி பிராமியிலிருந்து கடனாளப்பட்டது என்பதற்கு கூடுதல் சான்றாக அமைகிறது. துறவியர் நோக்கில் தம்மம் ஒரு முக்கியமான கருத்தமைவு என்பதால் தமிழில் பேசும்போதும் பிராகிருத உச்சரிப்பின் படி / dh / என்றே உச்சரித்திருக்கவேண்டும். அதனால்தான் தமிழில் எழுதும்போதும் <dh> வரிவடிவத்தைப் பயன்படுத்தியிருக்க வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது. இருந்தாலும் இரண்டு விதமாக எழுதியிருப்பது எழுத்து மொழியில் முழுக் கவனம் செலுத்தவில்லை என்று எண்ண வேண்டியிருக்கிறது.

<s> 12 தடவை முற்கால பகுதியில் மட்டும் வந்துள்ளதாகவும் அதுவும் முதல் மூன்று கல்வெட்டுகளில் (1,2,3) இரண்டு இயற்பெயரிலும் (நந்தஸிரி குவன், அஸ௳தன்) ஒரு பொதுச்சொல்லிலும் (<ஸாலகன்> = மைத்துனச்சியின் கணவன்( ஷட்டகன்) (2)) வந்துள்ளது. அதில் ஒரு இயற்பெயர் (நந்தஸிரி குவன்) மூன்று கல்வெட்டிலும் மூன்று விதமாக (நாநதாஅஸிரியஈ குஅவன (1), நாநதாஸிரியகுஅன (2), நாதாஸிரியகுவா...(3) அமைந்துள்ளது எழுத்தாக்கம் செம்மையடையவில்லை என்பதைப் புலப்படுத்துவதாகத் தோன்றுகிறது.மேலும் ஐந்து இயற் பெயர்களிலும் (வெண்காஸிபன் (14), விஸ௳வன் (27), ஸபமிதா (41), கஸபன் (45), வெஸன் (50) ஒரு குடிப்பெயரிலும் (<ஸதியபுதோ(59)> ஆறாம் வேற்றுமை உருபாகவும் (ஸ/ <உதயனஸ ( 24) அமைந்துள்ளன. அவைகளில் இயற் பெயர்களில் 10 தடவை பயன்படுத்தப்பட்டுள்ளது உச்சரிப்பில் தமிழாக்கம் ஏற்படாததன் புலப்பாடாகவும் கொள்ளலாம். இது குடிப்பெயருக்கும் பொருந்தும். வேற்றுமை விகுதியாகவும் கையாண்டிருப்பது எழுதியோன் மனதில் உச்ச கட்டமாகப் பிராகிருத மொழி வழியாகச் சிந்தனை இருந்தது என்று கருதலாம். எப்படியானாலும் பிற்காலப் பகுதியில் அந்த எழுத்து இல்லாதது தமிழ் மொழியின் ஒலியன் கோட்பாடு உள்ளூற செயல்பட்டு வெற்றி பெற்றது என்பதன் வெளிப்பாடாகத் தோன்றுகிறது.

**பிற் காலம்**

தமிழ் பிராமியில் 9 உயிர் வரிவடிவங்கள் (எழுத்துகள், அ, ஆ, இ,ஈ, உ, ஊ, எ/ஏ, ஐ, ஒ/ஓ) காணப்படுகின்றன. அவைகளில் ஐகாரம் உயிர் மெய் வடிவம் மட்டுமே கிடைத்துள்ளது.

மெய்யெழுத்துகள் 18 (தமிழ் 18) வரிவடிவங்களும் ஒரு புள்ளியும் காணப்படுகின்றன. வரலாற்று நோக்கில் பிராகிருத 3 வடிவங்களை < dh, s, h > நீக்கி தனி மெய் வடிவங்களைக்

குறிக்கப் புள்ளி சேர்த்தது மொழி அமைப்பைச் சரியாக உள் வாங்கிக்கொண்டதன் விளைவு.

உலக மொழிகளில் எழுத்தாக்கம் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட கால கட்டங்களில் செம்மையாக்கம் நடைபெற்றுள்ளது என்பதையும் அறியும்போது (சண்முகம், 1985) பிற மொழித் தழுவலாக எழுத்தாக்கம் செய்யும்போது பரிணாம வளர்ச்சிபோல் மாற்றம் ஏற்படுத்திக்கொண்டது இயல்பானதே.

## மொழி

தமிழகத்தில் கண்டெடுக்கப்பட்ட குகை கல்வெட்டுகள் பிராமி எழுத்துகளைத் தழுவியது என்ற அடையாளம் கண்டவுடன் மொழி பற்றி ஐயம் ஏற்பட்டது. பிராகிருதமும் தமிழும் கலந்த மொழி என்றாலும் தமிழ் மொழிக்கு உரிய நாலு எழுத்துகள் (ழ,ள, ற,ன) காணப்படுவதாலும் அகராதி நிறைய தமிழ்ச் சொற்கள் காணப்படுவதாலும் மொழி வரலாற்று நோக்கில் பழந் தமிழ் (*Old Tamil*)என்று அடையாளம் காணப்பட்டுள்ளது. எனவே தமிழுக்கு உரிய மிகப் பழைய எழுத்துச் சான்றாகக் கருதலாம் என்ற கருத்து பரவலாகக் காணப்படுகிறது. மகாதேவன் ( ப. 139) விரிவாக ஆராய்ந்து 96 தமிழ் பிராமி கல்வெட்டுகளை மொத்தம் 330 சொற்கள் உள்ளதாகவும் அவைகளில் 237 திராவிட மொழிச்சொற்களும் 81 இந்தோ ஆரிய மொழிச்சொற்களும் 12 சொற்கள் ஐயப்பாட்டுக்கு உரியது என்று குறிப்பிட்டுள்ளார். 237 திராவிட மொழிச் சொற்கள் என்று அடையாளம் காணப்பட்டாலும் அது பழந்தமிழ் அதாவது தமிழ் மொழியின் சான்றாதார அடிப்படையில் முதல் கால கட்ட மொழி என்று தெளிவு ஏற்பட்டுள்ளது.

## பழந் தமிழ்

பழந் தமிழ் என்பதில் சங்க இலக்கியங்களும் அடங்குவதால் அதற்குக் கொஞ்சம் முந்தியதாக இருக்கலாமோ என்ற கருத்தும் உள்ளது. ஒரு சான்று பல விதமான அளபெடை (ப. 296) அதாவது உடம்படுமெய் இல்லாததால் அமைந்தவை. மற்றொரு சான்று நிகழ் கால விகுதி இல்லாதது.

பிராகிருத சமண கல்வெட்டில் அமணன் என்று பதிவுசெய்யப்பட்டுள்ளது (24.1, 61.2, 62,2). ஒப்பிலக்கண நோக்கில் சொல்லுக்கு முதலில் வரும் *ச் கெடுவது தென்திராவிட மொழிகளிலும் நடு திராவிட மொழிகளான தெலுங்கு கோயா ஆகிய மொழிகளிலும் விருப்ப விதியாக அமைந்துள்ளது. தமிழ்

*இப்பி/ சிப்பி, அமை/ சமை, ஆன்றோர்/ சான்றோர். வடமொழிச்சொற்கள் ஆவம் <சாப, அரணம் (சரணம், ஆலை<சாலா முதலியன (சுப்பிரமணியன்,1983: 318). இதுவும் கல்வெட்டு மொழி பழந்தமிழ் காலத்தைச் சார்ந்தது என்பதற்கு ஆதாரமாகக் கொள்ளலாம்.*

*காரணவினை (causative) விகுதியாக வகரத்துக்குப் பதிலாகப் பகரம் கல்வெட்டில் பதிவுசெய்யப்பட்டுள்ளது (கொட்டுபித்த ( 1.8, ), கொட்டுபிதோன், (8.3), செயிபித்த (65.5) மொழிப் பழமைக்கு மற்றொரு சான்று. வரலாற்று மொழியியலின் ஒரு கூறான உள்மீட்டுருவாக்கத்தின்படி (internal reconstruction) வி,பி என்ற இரண்டு மாற்றுருபுகளும் *பி என்ற ஒரு வடிவத்திலேயே வந்துள்ளதாகக் கருதப்படும். அந்த முறையில் கல்வெட்டில் பிகரம் பதிவு செய்யப்பட்டுள்ளது அதன் மொழிப் பழமைக்குக் கூடுதல் சான்று ஆகும்.*

*அடிப்படை தமிழ் என்பதால் அதன் சிறப்புகள் மொழி அமைப்பு என்ற பின் பகுதியில் விரிவாக விளக்கப்படும். திராவிட மொழி என்ற முறையில் பழங்கன்னடமும் (ப. 144) தொல் மலையாளமும் கலந்துள்ளதை நூல் விரிவாக விளக்குகிறது.*

**பழங்கன்னடம்**

*பழங்கன்னட மொழிச்சொற்கள் தமிழகத்தைச் சார்ந்த நிலப் பகுதியான சித்தன்ன வாசல் (49, புதுக்கோட்டை மாவட்டம்), திருப்பரங்குன்றம் (55) திருமலை (52 மதுரை மாவட்டம்), எடக்கல்( 79,வயநாடு-கேரளம்) நெகனூர் பட்டி( 83,விழுப்புரம் மாவட்டம்) ஆகிய இடங்களில் உள்ள கல்வெட்டுகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. ஆனாலும் கல்வெட்டு கிடைக்கும் 33 இடங்களில் 30 இடங்களும் மொத்த 96 கல்வெட்டுகளில் 87 கல்வெட்டுகள் மலைக் குகைகளில் தங்கியிருந்த கருநாடகத்திலிருந்து வந்த சமணத் துறவிகளோடு தொடர்பு உடையவை (ப.164) என்பதே காரணம் ஆகும்.*

*சமண ஆண், பெண் துறவிகளின் பொதுப் பட்டங்களும் பெயர்களும், இடங்கள் பற்றிய பெயர்களும் பதிவு செய்யப்பட்டவை பிராகிருத மொழிச் சொற்களாக அமைந்துள்ளன. அதனால் அந்த மொழியின் சிறப்பொலிகள் அமைந்துள்ளது என்று அமைதி காணலாம். அவைகளுக்கு மேலாகக் கன்னடச்சொற்கள் கலந்துள்ளது என்பது விளக்கத்துக்கு உரியது.*

*சிறப்பொருமை சொற்களில் ஒன்றான தாயியரு (தமி.*

தாயர்) பெயரோடு -அர் சேர்ந்தது. அந்த விகுதி தமிழ்,( காதலர், அவர்)மலையாளம் (பிராமணர்) , கன்னடம் (அரசர்), பதிவு செய்யப்பட்டுள்ளதால் (சண்முகம் 1971:131தொ.) - அர் விகுதி தென்திராவிட மொழிக்கு உரியது என்பது ஒன்று. மேலும் பிராமி கல்வெட்டுகளில் தாய் என்பது தாயி என்று சொல்லெழுத்து பரவலாகக் காணப்படுகிறது. தாயர் என்ற சொல் இலக்கியத் தமிழிலும் காணப்படுவதால் தாயியரு என்ற வடிவம் கன்னடச் சொல்லாகக் கொள்ளப்படுகிறது.

அந்த முறைகளில் அகராதி நிலையில் அண்ணி, ஐயன் ( தமிழில் இன்று ஐயா என்ற சொல்) ஆகிய சொற்கள் துறவிகளோடு தொடர்பு உடையதால் சமூகத் தேவையை ஒட்டிப் பயன்படுத்தப்பட்டவைகளாகக் கொள்ளலாம்.

அடுத்து நாட்டைக் குறிக்கும் சொல்லாக எருமிநாடு (49)<எருமைநாடு 'கர்நாடகாவின் ஒரு பகுதி <தமிழ் எருமை, கன்னடம் ,துளு எர்மெ . எருமை ஊரன் (அகநானூறு. 36.17) சமய உணர்வோடு வட்டார உணர்வும் பெற்றிருந்தார்கள் என்பதைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

பொசில்' (49 சித்தன்ன வாசல், புதுக்கோட்டை) என்பது 'தென்குசிறுபொசில் இளயர் செய்த அதிட்டானம்' என்ற தொடரில் வந்துள்ளதால் தென்குசிறுபொசில் என்ற ஊர்ப்பெயர் என்றும் அது பிற்காலக் கல்வெட்டுகளில் தென்குசிறுவாயில் என்று பதிவு செய்யப்பட்டுள்ளதாகவும், தமிழில் பதிவுசெய்யப்படவில்லை என்றும் அது கன்னடத்தில் ஹொசிலு<*பொசில்,தோடா போஸ் என்றும் விளக்கப்பட்டுள்ளது. ஒப்பிலக்கண நோக்கில் சுப்பிரமணியம் ( 1983: 419) கன்னடத்தில் வகர பகர மாற்றம் பழங்காலக் கல்வெட்டுகளில் தாய்மொழிச் சொற்களிலும் வடமொழி சொற்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். தமிழ் வாயில் (வாசல்) என்பது கன்னடம் பாகில் (ba:gil) (DED. 4386). மேலும் அடையாக உள்ள சிறு என்பது தமிழ் வடிவம். அதன் கன்னட வடிவம் கிறு (DED. 1236). மேலும் ஊர்ப்பெயர் என்பதாலும் பொசில் என்பதை கன்னடச் சொல்லோடு தொடர்புபடுத்தவது பொருத்தமாகத் தோன்றவில்லை.

கவி (குகை, 59) தமிழ் கெவி. கன்னடம், துளு, தெலுங்கு கவி (gavi) (DED. 1119 ). பிற திராவிட மொழி வழக்குகளும் நூலில் (ப. 395) கொடுக்கப்பட்டுள்ளன. எனவே அ > எ மாற்றமாகக் கொள்ளாமல் அது கன்னட மொழிச் செல்வாக்கு என்பதற்குக் கூடுதல் சான்றாகக் கொள்ளலாம்.

ஆறாம் வேற்றுமை உருபாக ஆகாரம் மூன்று தடவை வந்துள்ளதும் கன்னட மொழிச் செல்வாக்காகக் கருதப்படுகிறது.

*1. நல்லிய் ஊர்ஆ பிடந்தை மகள் கீரன் கொற்றி (66 புகளூர் சேலம்)*

*2. நலிய் ஊர்ஆ பிடன் குறும்மகள் கீரன் கொறி (65 புகளூர்)*

*3. கு(*வி)ரா தான( 23 விக்கிரமங்கலம்,மதுரை)*

முதல் இரண்டு உதாரணங்களும் இயற் பெயர்களே.- ஒரு வகையில் மரபுத் தொடர் போன்றவை. அது கன்னட மொழியின் பெயர் அமைப்பு. எப்படியானாலும் கருநாடகத்திலிருந்து வந்த சமணத் துறவிகள் தூண்டுதலால் அமைந்த கல்வெட்டுகள் என்பதால் அவைகளில் பிராமி, கன்னடம், தமிழ் ஆகிய மூன்று மொழிகளும் கலந்துள்ளன.

கருநாடக சமணச் சமயச்செல்வாக்கால் ஏற்பட்ட எழுத்துமொழியில் பதிந்துள்ள கன்னட மொழிக் கூறுகள் தமிழில் கன்னட மொழி தாக்கம் என்று கொள்ளாமல் தங்கள் எழுத்து மொழியில் பதிவு செய்யப்பட்டுள்ளதாகக் கருதலாம். மொழியின் செல்வாக்கு என்பது ஒன்று. அது வரலாற்று மொழியியல் நோக்கில் கடனாட்சி (*borrowing*) எனப்படும். மாறாகத் தமிழ் எழுத்தாக்கத்தில் பிராமி எழுத்துத் தாக்கத்துக் காரணகர்த்தர்களே கருநாடக சமணர் என்ற வரலாற்று உண்மையின் பதிவாகக் கருதலாம்

தொல் மலையாளம்

சொல் இறுதியில் ஐ> அ.

பாவை > பாவ (இளம்பெண்), பட்டனம் (கேரளா) (பொஆ.2ஆம் நூ)( அணை > அண , எழுத்துகல்லு (கேரளா ) பொஆ. 5ஆம் நூ). பழமை > பழம , எடக்கல் (கேரளா) (பொஆ.4/5ஆம் நூ).

பொதுவாகப் பழந் தமிழகத்தின் பகுதியாகச் சேர நாடாக கேரளா இருந்தது என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. சங்க இலக்கியத்திலேயே மலையாளம் ஒரு கிளை மொழி என்ற நிலையை அடையாவிட்டாலும் சில மொழிக் கூறுகளில் அதாவது மொழியின் பழமையைப் பாதுகாத்தலிலும், மொழி மாற்றத்திலும் மலையாள மொழியின் மொழிக் கூறுகள் என்று கூறும்படி சில மாற்றங்களைப் பெற்றிருந்தது (சண்முகம், 2015) கண்டறியப்பட்டுள்ளது.

தின்பர் > தின்மர் (பதிற்றுப்பத்து 24.18), உண்பர்> உண்மர் (பதிற்றுப்பத்து 24.18), காண்பர் > காண்மர் (மதுரைக் காஞ்சி. 513), ஈன்பர் >ஈன்மர் (புறநானூறு 74.4. அந்தப் பாடல் சேரமன்னன் ஒருவனால் பாடப்பட்டது என்பது முக்கியமான செய்தி).மலையாள மொழியின் சிறப்புப் பண்பாக கருதப்படும் மூக்கினமாதல் (nasalization. தெங்கு > தெங்ஙு) என்பதன் முன்னோடி மாற்றமாக இந்த மாற்றம் அக் கருதப்படுகிறது. ஆனாலும் ஒரு சில கூறுகளில் மலையாளம் தொல் மொழிக் கூறுகளைத் தக்கவைத்துக்கொண்டுள்ளது.

சா என்ற வினைவடிவம் செத்து என்று மாற மலையாளம் உள்ளிட்ட பிற மொழிகளில் சத்து என்ற வடிவமே (தா ~ தந்து, வா ~ வந்து என்பவை போல) அமைந்துள்ளது. இங்கு மலையாளம் பழைய மொழிக் கூறைத் தக்கவைத்துள்ளது.

முன்னிலைப் பன்மை வடிவமான பழந்தமிழில் நீயிர் என்ற வடிவம் பதிவு செய்யப்படாலும் நீம் என்ற வடிவம் பிற்காலத்தில் பதிவு செய்யப்பட்டதற்கு அதன் வேற்றுமை ஏற்கும் வடிவம் நும் என்பதே. நாம் >நம். தாம் > தம் என்பது போல் *நிம் என்பதற்குப் பதிலாக நும் வந்துள்ளது. ஆனால் மலையாளத்தில் நிங்ஙள்< நிங்கள் < நிம்+கள் என்று இருப்பதால் *நிம் என்பதே தொல் வடிவம். மேலும் பெரும், கரும் போன்ற வடிவங்கள் பெரிம்,கரிம் என்று பழங்காலத்தில் மலையாளத்தில் வழங்கப்பட்டுள்ளது. கேரளபாணியம் மலையாள மொழியின் பழைய நிலையைக் கடுந்தமிழ் என்றே குறிப்பிட்டுள்ளது, காரணம் தமிழ் செந்தமிழ் என்று குறிக்கப்படுவதுதான். அது இன்னொரு மலையாள மொழியின் பழமைக் கூறு.

இருந்தாலும் தமிழில் இடைக்காலத்தில் ஏற்பட்ட மொழி வரலாற்று மாற்றங்கள் மலையாளத்திலும் காணப்படுவதால் (யாறு> ஆறு, வைத்து> வைச்சு ஒருநிலையில் பரிணாம நிலையிலும்( evolution) இன்னொரு நிலையில் பரவுகை (diffusion) நிலையிலும் ஏற்பட்டு தனி மொழி நிலையைப் பொ.ஆ.9ஆம் நூற்றாண்டுக்குப்பின் என்று கருதப்படுகிறது (சண்முகம்,1992).

பழந்தமிழிலும் பனை என்ற சொல் பனம் (குறுந்தொகை 168,2) ஆல் ~ ஆலம்) என்றும் இரண்டாம் வேற்றுமை உருபு அகரமாக மாறியிருப்பதும் (காவலோனை> ‘காவலோனக் (களிறு அஞ்சும்மே)’ பழந்தமிழிலும் சில கிளைமொழிகளில் ஐகரம் அகரமாக மாறியுள்ளதற்குச் சான்று ஆகும். எப்படியானாலும் கேரளப் பகுதியில் அகர வடிவம் பதிவு செய்யப்பட்டுள்ளது அந்தக் காலத்திலேயே கிளைமொழிகளைக் கல்வெட்டில்

பதிவுசெய்துள்ளது மொழி வரலாற்றுக்கு ஒரு அடிப்படை ஆதாரமாகமொழியியலாளரால்கருதப்படுவது குறிப்பிடத்தகுந்தது ( மீனாட்சிசுந்தரம், 1965, சண்முகம்,1971a).

அ> எ படு(தமி) > பெடு தீயன் (இறந்த) (93 புலிமான்கோம்பை ( தேனி) கேரள எல்லையை ஒட்டிய தமிழகத்தைச் சார்ந்தது. ( காலம் பொஆமு.1ஆம் நூற்). மலையாளத்திலும் படு/பெடுவும் பதிவுசெய்யப்பட்டுள்ளது (DED 3190). பெடு பின்னர் மலையாளத் தகுமொழி வழக்காக அமையத் தமிழில் படு வழக்காக அமைந்துவிட்டது என்று பொருள். எனவே பழைய மலையாளம் என்று குறிப்பிடுவதற்குப் பதிலாக வரலாற்று நோக்கில் தொல் தமிழ் மலையாளம் என்று கொள்ளலாம்.

## இந்தோ ஆரியன்

எழுத்து, சொல் என்ற இரண்டு நிலையில் இந்தோ ஆரியன் மொழிக் கூறுகளை நூல் விளக்குகிறது.எழுத்தைப் பொறுத்தவரையில் <dh, s, h> என்ற மூன்று எழுத்துகள் நேரடிக் கடனாட்சி என்று கூறலாம். ஆனால் அவை தமிழ் எழுத்துமுறை ஒழுங்கில் அமையாததால் பிற்காலப் பகுதியிலேயே நீக்கப்பட்டிருக்க வேண்டும்.

சொற்களஞ்சியத் தாக்கத்தைச் சமயம் (அதிட்டானம்) நிரந்திரமான துறவுகளின் குடியிருப்பு), தானம் (சமயத் தொடர்பான கொடை) பண்பாடு, பல வகை என்று நூல் என்று விளக்கியுள்ளதைச் சமூக மொழியியல் நோக்கில் புதிய துறைவழக்குகள் ( registers) என்று கொள்ளலாம்.

முன்னர் உள்ள பொருளைக் குறிக்கும் சொற்களைக் கடனாளும்போது அவை சிறிய பொருள் வேறுபாட்டால் ஒரு பொருள் பல சொல்லாகக் (synonyms ) கருதாமல் பல் பொருள் ஒரு சொல்லாக (polysemy)மாறுவது. மனைவி/ மனையாள் என்ற சொற்கள் இருக்கும்போது இளங்கோ அடிகள் பத்தினி என்ற கற்புடை பெண்கள் என்ற கடனாண்டதால் மனைவி ஒரு உள் வகை என்று பொருண்மையியல் அமைந்துவிடுகிறது. அதுபோல தானம், தம்மம் என்பவை சமயம் சார்ந்த சொற்களாய் அதன் வீச்சு குறைந்தாலும் மொழியில் சமயம் என்ற புதிய துறை வழக்கு அமைந்துவிடுகிறது.

தமிழ் இலக்கணங்களுக்குள்ளேயே திணை, உரி என்ற சொற்கள் எழுத்து, சொல் அதிகாரங்களில் உணர்த்தும் பொருளும் பொருளதிகாரத்தில் உணர்த்தும் பொருள் வேறு என்பதுதான் துறைவழக்கு. இங்கு பிற மொழி சொற்கள் துறை வழக்குகளாக அமைந்துள்ளன.

வரலாற்று மொழியியல் நோக்கில் அவை கடனாட்சி (*borrowing*) என்று கொள்ளப்பட்டு புது கருத்தமைவுக்கு உரியவைகளைச் சொற்களைக் கடனாளுவது தேவை கருதியது (*need filling motive*) என்றும், தாய் மொழியில் இருக்கும் சொற்களுக்குப் பதிலாக பிற மொழி சொற்களைக் கடனாளுவது அதாவது நாகரிகம் கருதியவை (*prestige motive*) என்றும் விளக்கப்படும். அதே சமயத்தில் அதன் வழக்குக் கட்டுப்பாட்டால் புதிய துறை வழக்கு அல்லது வெறும் துறை வழக்குகளாகக் கருதும் நிலை ஏற்படும்.

அதிட்டானம் பழந்தமிழ் சமயச் சார்பற்ற இலக்கியம் என்றமுறையில் (பரிபாடல் , திருமுருகாற்றுப்படைநீங்கலாக) சமயத் துறை தனித்துறை முன்னோடியாகக் கருதத்தகுந்தது. பண்பாட்டுச் சொற்களாகப் பட்டியலிட்டுள்ளதும் தேவை கருதியதே.

உறவுச் சொற்களில் மருமகனைக் குறிக்கச் சங்கத் தமிழில் மருகன் என்ற சொல் வழித் தோன்றல் என்ற பொருளிலும் வழங்கிவந்துள்ளது. உறவைச் சிறப்பாகக் குறிக்க ஸாலகன் என்ற சொல்லை கடனாண்டது தேவை கருதியது ஆகும்.

சிறப்பொரு ஒருமையின் இன்னொரு நிலை முன்னொட்டு போலச் சொற்களைச் சேர்ப்பது மரபு இல்லை. ஆனால், சிரி ( ஶ்ரீ) என்ற உயர்திணை சிறப்பு ஒருமை பயன்படுத்தப்பட்டுள்ளது.

அரசு சார்ந்த சொற்களாகக் காவிதி, மாராய ஆகியச் சொற்களைக் கருதலாம். பொருளாதார நடவடிக்கை, வணிகம் சார்ந்த சொற்களாக நிகமம்,வணிகன்/ வாணிகன் , கணதிகன், கணக ஆகியவை அடங்கும்.

சமூகத்தில் உயர்ந்தோர் என்ற கருத்தமைவு தமிழில் இருந்தாலும் இடைக் காலத்திலேயே அது மொழி வழி வெளிப்படுத்தப்பட்டது. அதற்கு முன்னோடி போல பிராகிருத மொழி செல்வாக்கால் பழங்காலத்திலேயே கல்வெட்டு மொழி அறிமுகப்படுத்தியுள்ளது என்று கருதலாம்.

பொதுவாக எழுத்துமொழி, பிற மொழி என்னும்போது அந்த மொழிச் சொற்களையும் அந்த மொழியின் மரபுகளை எழுதுவோர் தெரிந்து பயன்படுத்தியதன் விளைவே இவை.

## தமிழ்மொழி அமைப்பு

இலக்கணம் என்ற 7வது இயலில் விளக்கப்பட்ட செய்திகள் கல்வெட்டு மொழியின் மொழி அமைப்பு விளக்கமாக

அமைந்துள்ளது. அந்த விளக்கம் பொதுவாக விளக்க முறையில் அமையாமல் இலக்கண முறையில் அதுவும் தொல்காப்பிய வருணனையை ஒட்டி அமைந்துள்ளது (பார்க்க. தொல்காப்பிய ஒப்புமை என்ற பிரிவு,ப. 299). அதனால் கல்வெட்டுத் தமிழைச் சரியாக உள் வாங்க முடியாத நிலை ஏற்படுகிறது. கல்வெட்டில் பதிவு செய்யப்படாத சார்பு எழுத்து விளக்கம் ( ப 294 ) பற்றிய விளக்கம் , மெய்மயக்கத்தை விளக்கும்போது ய்ய் வரும் குறிப்பிட்டுவிட்டு அ(ய்)யன் என்ற உதாரணத்தைக் கொடுத்து -ய- கல்வெட்டில் இரட்டித்துவரவில்லை என்றும், அதுபோலத்தான் -ய்ச்ச்- என்ற மெய்மயக்கத்தைக் குறிப்பிட்டுவிட்டு, சகரம் மூலத்தில் இரட்டிக்க வில்லை என்றும் ( ப. 298), சொல்லுக்கு முதலில் வரும் எழுத்துகளில் ஞகரத்தைச் சேர்த்துவிட்டு கல்வெட்டுத் தரவில் ஞகரம் சொல்லுக்கு முதலில் வரவில்லை என்றும் அமைந்துள்ள விளக்கம் (299) முதலியன உதாரணங்கள்.

சொல்லுக்கு முதலில் சகர மெய் அ, ஐ, ஔ ஆகிய உயிர்களோடு வராது என்று தொல்காப்பியத்தை எடுத்துக்காட்டி கல்வெட்டில் விலக்குவிதியாகச் சடிகன்,சழியன் முதலிய சொற்கள் வந்துள்ளதாகக் கூறியதும் (ப. 303) வரலாற்று நோக்கு இலக்கணமாக மாற்றிவிடுகிறது.

மொழியியல் ஆய்வு தொல்காப்பிய கருத்தை மறுவருணனைக்கு உட்படுத்தி சிலவரலாற்று உண்மைகளை வெளிக்கொணர்ந்துள்ளது (சண்முகம்,1971b). அந்த முறையில் சகர முதன்மொழி சங்க இலக்கியத்தில் சவட்டு, சடை, சண்பகம், சமை, சந்து, சமழ்ப்பு ஆகிய திராவிட மொழி சொற்கள் பயின்றுள்ளதும் ஒப்பிலக்கண நோக்கில் திராவிட வேர்ச்சொற்கள் அகராதியில் சுமார் 75 சகர முதல் சொற்கள் வந்துள்ளதும் குறிப்பிடத்தகுந்தது. ஆனாலும் சில சகர முதல் சொற்களுக்கு இணையான சொற்கள் சங்க இலக்கியத்திலேயே சகர முதல் சொற்களுக்கு ( சக்கை = கோது, சக்கை =பலா, சரக்கு = பண்டம், சட்டை= மெய்ப்பை ) மாற்றுச்சொற்கள் வழங்கி வந்துள்ளதும் சகர சொல்லுக்கு முதலில் வராது என்று கூறியதற்குக் காரணமாக இருக்கலாம் அது உண்மையில் தொல்காப்பியர் கருதும் தகு வழக்கு, சங்க இலக்கியத் தகு வழக்கு, சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள கிளைமொழி வழக்குகள் ஆகியவை பற்றிய கருத்தமைவுகள் அடங்கியுள்ளன.

அந்த நிலையில் கல்வெட்டில் காணப்படும் மொழி அமைப்பு நேரடியாக விளக்க முறையில் விளக்குவதே சிறப்பாக இருக்கும்.

மொழி அமைப்பு எழுத்தியல் , சொல்லியல், தொடரியல் என்ற மூன்று பிரிவில் விளக்கப்பட்டுள்ளது.

**எழுத்தியல்**

9 உயிர் வரிவடிவங்கள் (அ,ஆ, இ, ஈ, உ, ஊ, எ/ஏ, ஒ/ஓ, ஐ) இருந்தாலும் (ப. 211) அவைகளுள் ஐகாரம் உயிர்மெய்யாக சொல்லுக்கு நடுவில் வருவது மட்டும் வருவதும் (அந்தை, முழுவுகை , உறைய் , உறையுள், மொழி அமைப்பு நோக்கில் 10 உயிர்கள் இருப்பதாகக் கொள்ளலாம் . தொல்காப்பியர் மொழியியல் கோட்பாட்டு நோக்கில் ஐகாரத்தையும் ஔகாரத்தையும் தனி ஒலியன்களாகக் கொண்டார் ( சண்முகம், 1980: 93 தொ.). ஆனாலும் அதை அய் என்று கூட்டொலியாகக் கொள்ளலாம் என்றும் விளக்கப்பட்டுள்ளது (ப.294) ஏற்றுக்கொள்ளத் தகுந்ததே.

18 மெய் வடிவங்கள் இருப்பது தமிழின் மொழி அமைப்பைச் சரியாகப் பிரதிபலிக்கிறது. மேலும் ஙகரம் மகரத்தின் மாற்றொலியாகக் (allophone) கொள்ளலாம் என்று விளக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தில் -ங்ங்- என்ற உடனிலை மெய்மயக்கம் வரும் என்று கூறியதோடு, இலக்கண வருணனை நோக்கில் புணர்ச்சி மாற்றங்களை எளிய முறையில் விளக்கமுடியும் என்பதாலும் தனி ஒலியனாகக் கொள்ளப்பட்டுள்ளது. அதாவது தொல்காப்பிய வருணனையில் புதைந்துள்ள மொழியியல் கோட்பாடு ஆழமானது.

ஊபு (உப்பு) என்னும்போது அது குற்றியலுகரம் கொள்வது பொருந்தாது. ஏனெனில் உயிர் குறிலை நெடிலாக உச்சரிக்கும்போது மெய் நெடிலை (ஒரே மெய் உடனிலை மயக்கம்) குறிலாக அமைவது இயல்பு. தென்கு, குன்று, நூறு ஆகிய சொற்களிலும் இறுதி உகரம் உச்சரிப்பு குற்றியலுகரமே. அது எழுத்து மொழியில் குறிப்பிடும் மரபு இல்லை.

மெய்மயக்கம் என்பது தனிச் சொல்லுக்குள் வருவதே ஆராயப்படும். எனவே பொன் கள்வன், பொன் வணிகன் என்ற தொடர்களில் முறையே -ன்க்-, -ன்வ்- என்ற மெய்மயக்கமாகக் கருதத் தேவை இல்லை.

எழுத்துகளின் பகிர்வு(distribution) விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

இந்தக் கல்வெட்டுகளின் ஒரு சிறப்பு இரண்டு உயிர்கள் (அஅ, அஉ, ஆஅ, ஆஇ) சேர்ந்து வந்திருப்பதே. அவைகளில் பெரும்பான்மையும் முதல் உயிர் இரண்டாவது அசைஅமைந்துள்ளது நிறுத்தி உச்சரித்ததன் விளைவாக

இருக்கலாம். எயில் என்பது எஇய்ல் என்று உள்ளதற்குக் காரணம் இரண்டு உயிர் தொடர்ந்து உச்சரித்தபோது யகர மெய்யை அடுத்த இகரம் அசைகெடல் *(haplology)* என்ற முறையில் எழுதப்பட்டிருக்கலாம்.

## உறழ்ச்சி

உறழ்ச்சியை, எழுதியோர் தவறு, பிற என்று இரண்டு வகை இருப்பது சுட்டிக்காட்டப்பட்டதோடு (ப. 304தொ) சில ஒலி மாற்றமுறை *(phonetic process)* அமைந்துள்ளதும் குறிப்பிடப்பட்டுள்ளது (ப. 307). அவைகளைப் பேச்சு மொழித் தாக்கம் என்று கூறலாம் என்றாலும், அவைகளுக்குள் மொழியியல் வரலாற்று உண்மைகள் புதைந்துள்ளது எடுத்துக்காட்டத் தகுந்தது.

வாணிகன் என்ற சங்க இலக்கியத்திலும் வணிகன் என்ற பிற்கால இலக்கியத்திலும் வந்துள்ளன. தமிழ்ப் பேரகராதி வடமொழியிலே யே *va:Nijya. vaNija, pa:Nika* என்ற வடிவங்கள் இருப்பதாகக் குறிப்பிட்டுள்ளது.

சில உறழ்ச்சிகள் மொழி மாற்றத்தால் ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

அ) பின்னோக்கு ஓரினமாதல் *(regressive assimilation)*

அதிகன் > இதிகன், அத்தவாயி > அத்துவாயி (வகரமும் உகரமும் இதழ் ஒலிகள்) மதுரை > மதிரை, ,இளையர்> இளயர்

ஆ) முன்னோக்கு ஓரினமாதல் *(progressive assimilation)*

குமிழ் > குமுழ், ஆசு > ஆசி. காயபன் > காயிபன்

இ) இடை மெய் மாற்றமும் கெடலும்

மகன் >*மவன் > மான் , அதுபோல மகர் >மார் என்பதும் சங்கஇலக்கியத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ளது (சண்முகம், 1971 : 129).

ஈ) ட்~ ழ் மாற்றம் இலக்கியத் தமிழிலேயே ஒரு சொல்லில் காணப்படுவது ( எடு(ப்பு) ('துயில்எடுப்பு' குறுந்147.4 ~ ~எழு(ந்து) ( 'கனா மருட்ட ஏற்று எழுந்து' குறுந் 30.3) குறிப்பிடத்தகுந்தது. தொல்காப்பியமும் நாழி என்ற சொல் புணர்ச்சியில் நாடு என்று மாறுதம் நாழி + உரி> நாடுரி (உயிர்மயங்கியல் 38) என்று விளக்கியுள்ளது. ஒப்பிலக்கண நோக்கில் ழகரம் சொல்லுக்கு, இடையில் டகரமாக மாறுவது தெலுங்கில் காணப்படுகிறது ( சுப்பிரமணியன், 1983: 132). எழைய்ஊர் என்ற ஊர்ப்பெயர் மதுரைமாவட்டம் கருங்காலக் குடியில் உள்ள கல்வெட்டு.

அதில் உள்ள எழை என்பது இடை என்ற சொல்லின் மாற்றமாக இருக்கலாம் என்று ஊகிப்பதாகவே கல்வெட்டு விளக்கத்தில் (ப,423 அகு.4) குறிப்பிட்டுள்ளதால் அது இன்னும் ஆய்வு தேவை. அதனால் அதில் உள்ள இ>எ மாற்றமும் விவாதத்துக்கு உரியதே.

உ) கடு ~கழு என்ற மாற்றத்தைப் பொறுத்த வரையில் கடு என்பது கடுங்கோன் (62), கடும்மிபுதசேர (கடுமான் என்ற சொல்லோடு தொடர்புடையதாக விளக்கம் ப. 517) என்ற சொற்களில் வருவதைக் கழுமாற நாதன் என்ற சொல்லோடு தொடர்பு படுத்துவதும் விவாதத்துக்கு உரியதே.

பொதுவாக இ>எ மாற்றமும் உ> ஒ மாற்றமும் ஒப்பிலக்கண நோக்கிலும் வரலாற்று நோக்கிலும் வரலாற்று மொழியியலில் விளக்கப்பட்டுள்ளது( சுப்பிரமணியன்,1983: 201தொ.). இள என்ற சொல் (இளஞ்சடிகன் (2), இளநதன் (17)இளயர் (49) என்றும் எள என்பது எளசந்தன் (43) எளஅஅட்டன் (46), எளமகன் ( 56) எளம்பேர் (90) என்றும் வந்துள்ளன. அவை யாவும் இயற் பெயர்களே. இளம் என்ற சொல்லோடு தொடர்புடையதாகக் கருதினால் அது தமிழிலும் மலையாளத்திலும் இகரம் பெற்றிருக்க பிற தென் திராவிட மொழிகளில் எகரம் பெற்றிருக்கிறது (DED 436) என்பது குறிப்பிடத்தகுந்தது. பேச்சுத்தமிழில் இகரம் எகரமாக மாறும் (இலை > எல). சான்றதார நோக்கில் கல்வெட்டில் வந்துள்ளது பழமையின் பிரதிபலிப்பாகக் கருதினால் எகர வடிவம் தொல் வடிவமாகிக் கல்வெட்டு மொழி பழமையானது என்பதற்குக் கூடுதல் சான்றாக அமையும்

எ> அ கவி (குகை, 59) தமிழ் கெவி. கன்னடம், துளு, தெலுங்கு கவி (gavi ) (DED. 1119 ). நூலில் பிற திராவிட மொழி வழக்குகளும் கொடுக்கப்பட்டுள்ளன. அது கன்னடம் செல்வாக்கு என்பதற்குக் கூடுதல் சான்றாகக் கொள்ளலாம்

ஒ > உ கொடு > குடு என்ற சொல் மாற்றம் பிற்காலத் தமிழில் பதிவு செய்யப்பட்டடுள்ளது. கன்னடத்தில் கொடு/குடு என்ற இரண்டு வடிவமும் பதிவுசெய்யப்பட்டுள்ளது (DED.1708). குடு ( 14 )என்பது மறுகால் தலை ( திருநெல்வேலி மா.) 10 கீழவளவு 11 (மதுரை) ஆகிய இரண்டு இடங்களில் மட்டுமே பதிவு செய்யப்பட்டுள்ளது. கொடு என்பது மதுரை மாவட்டத்தில் கொங்கர்புளியம் குளம் (44அழகர் மலை (மதுரை.) கொடு என்பது 1 (மாங்குளம்- மதுரை) பதிவு செய்யப்பட்டுள்ளதால் வட்டார வழக்காகக் கொள்ளாமல் இதுவும் ஒரு கன்னட மொழியின் தாக்கமா என்று யோசிக்க வேண்டியிருக்கிறது.

உ> இ

நெடுஞ்செழியன் (1.5a) ~ நெடிஞ்செழியன் (2.5a)

இந்த மாற்றத்தில் தமிழ் மொழி அமைப்பு பற்றியும் தமிழின் தொல்வரலாறு பற்றியும் ஒரு உண்மை புதைந்துள்ளது.

தமிழில் மொழி அமைப்பில் எழுத்திலக்கணத்தில் -இம் என்ற எழுத்துத் தொடர் அமையாதது அமைப்பு குறை (structural gap) என்று வழங்கப்படும். எல்லா மொழியிலும் விதவிதமான அமைப்புக் குறை உண்டு. தமிழில் உடனிலை மெய்மயக்கத்தில் வல்லின மெய்மயக்கம் மட்டுமே குறில்/ நெடில் உயிர்களுக்குப் பின்னர் வரும் ( பக்கம்/ பாக்கம், பட்டு/ பாட்டு). இடையின, மெல்லின மெய்கள் குறில் உயிர்களுக்குப் பின்னர் மட்டுமே வரும் (அல்லன் அண்ணன்) எனவே இடையின, மெல்லின மெய்கள் நெடில் உயிர்களுக்குப் பின்னர் வராதது ஒரு அமைப்புக் குறை.

தமிழில் -இம் என்ற எழுத்துத் தொடர் அமையாமல் அது - உம் என்று மாறியுள்ளது ஒப்பிலக்கண அறிவால் பெறப்பட்டுள்ள ஒரு உண்மை. அதன் வெளிப்பாடு தான்/தன், தாம்/தம் நீ(ன்)/ நின் என்று மாற நீம்/ *நிம் --> நும் என்ற மாற்றத்துக்குக் காரணம் அந்த எழுத்து தொடர் அமைப்புக் குறையே. . அதுபோல பெரிது, பெரிய, ஆனால்* பெரிம் என்பதற்குப் பதிலாகப் பெரும் என்ற வடிவம். ஆனால் மலையாளத்தில் அந்த அமைப்புக் குறை இல்லாதால் கரும் என்பது கரிம் என்று உள்ளது. கரிந் தமிழ் என்ற வடிவத்தைக் கேரள பாணீணியம் பயன்படுத்தியுள்ளது. அதனால் வரலாற்று நோக்கில் நெடிம் என்பது வரலாற்று பழைய வடிவம். மலையாளத்தில் தக்க வைக்கப்பட்டுள்ளது. அது தமிழில் நெடும் என்று மாறியுள்ளது. எனவே *நெடிம் என்பதை ஒரு தொல் மலையாள வழக்காகக் கொள்ளலாம்.

## திணை- பால்விகுதிகள்

தமிழில் அமைந்துள்ள திணை-பால் ஒழுங்கு விரிவாக விளக்கப்பட்டு, பால் விகுதிகளும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. அவைகளில் ஆண்பாலுக்கு அன், ஆன், ஒன் என்ற மூன்று விகுதிகளே கண்டறியப்பட்டுள்ளன (ப.322). பொன்கொல்வன் என்ற சொல்லும் -அன் என்ற விகுதி விளக்கப்பட்டுள்ளது. அப்படியானால் வகரம் விடப்பட்டுவிடுகிறது.(ப. 323)

சங்கத் தமிழில் தலைவன், பகைவன், கேள்வன் என்ற ஆண்பாற் சொற்களும் இணையான மனைவி, துணைவி.

செல்வி கள்வி முதலிய பெண்பாற் சொற்களும், தலைவர், கள்வர்,வலைவர், செல்வர், ஐவர் முதலிய சொற்கள் பயின்று வந்துள்ளதோடு பிற திராவிட மொழிகளிலும் காணப்படுவதால் தொல்திராவிடத்தில் * கள்வன் என்ற சொல்லும் தொல் தென்திராவிடத்தில் *செல்வன் என்ற சொல்லும், பலர் பாலில் இருவர் என்ற சொல் தொல்திராவிடத்திலும் நால்வர் என்ற சொல் தொல்தென் திராவிடத்திலும் மீட்டுரு வாக்கம் செய்யப்பட்டுள்ளதாலும் (சண்முகம் 1971: 36, 107) -வன் என்பதை கூடுதல் ஆண்பால் விகுதியாகக் கொள்வதே சிறந்தது.

பெண்பால் விகுதியாக -அள், -இ என்ற விகுதிகளே குறிப்பிடப்படுள்ளன. பம்மித்தி என்ற சொல்லில் சமணப் பெண் துறவியைக் குறிக்கும் பம்மை என்ற வடிவத்தின் திரிந்த வடிவமாக பம்மி என்று கொண்டால் -த்தி என்பதையே பெண்பால் விகுதியாகக் கொள்ளவேண்டும். தமிழில் ஒருவன்/ ஒருத்தி என்ற வடிவங்களில் -த்தி என்பதே பெண்பால் விகுதியாக இலக்கணங்களிலும் மொழியியலிலும் கொள்ளப்படுகிறது. சங்கத் தமிழில் புலைத்தி, ஆய்த்தி,குறத்தி முதலிய சொற்கள் காணப்படுவதோடு தென் திராவிட மொழிகளிலும் காணப்படுவதால் (சண்முகம்,1971:37, 116) -த்தி என்பதை -இகரத்திலிருந்து மாறுபட்ட விகுதியாகக் கொள்வதே சிறந்தது.

பெயர்ச்சொல் அடையாக வருவது பற்றிக் கூறும்போது கல நெல் என்பது கலம் + நெல் என்று விளக்கியதோடு கலம் என்பதில் -அம் என்பது ஒன்றன்பால் விகுதி என்று கூறியது (ப. 324) விவாதத்துக்கு உரியது. வடமொழிச் சொற்களைத் தமிழாக்கும்போது -அம் விகுதி சேர்த்தல் மரபு காணப்பட்டாலும், திராவிட மொழிச்சொற்களில் காணப்படும் -அம் ஈற்றுச் சொற்களில் (நிலம், மரம், ஓடம், கடம்) ஒன்றன் பால் விகுதியாகக் கருத வேண்டியதில்லை என்று கால்டுவெல் (1913: 229) கூறியுள்ளது அறியத்தகுந்தது. எனவே -அம் என்பதை ஒன்றன்பால் விகுதி என்று கொள்ளவேண்டியதில்லை.

**வேற்றுமை விகுதிகள்**

நாலாம் வேற்றுமை உருபான -கு ஆறாம் வேற்றுமைப் பொருளில் வந்துள்ளது குறிப்பிட்டது (ப. 326) பொருத்தமானதே. தொல்காப்பியமே உயர்திணைத் தொகையில் -கு வரும் என்று குறிப்பிட்டுள்ளது (வேற்றுமைமயங்கியல் 11). நாஞ்சில் நாட்டு உறவுப் பெயர்களிலும் (எனக்கு மகன்), அஃறிணைச் சொற்களிலும் (எனக்கு பேனோ= என்னுடைய பேனா) வழங்குகிறது.

*ஆறாம் வேற்றுமை சூனிய விகுதிஏற்று வந்துள்ளது (ப. 327) என்று கொள்வதற்குப் பதிலாக அவை ஆறாம் வேற்றுமைத் தொகையாக அமைந்துள்ளது என்று கூறுவது சரியாக இருக்கும்.*

**காரண வினை**

*காரண வினை (causative) தமிழில் சங்க கால இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. தமிழ் பிராமி கல்வெட்டுகள் சமணத் துறவியின் செல்வாக்கால் வெட்டப்பட்டதால் காரண வினை அதிகம் காணப்படுகிறது. அதனால் காரண வினை பயிற்சி அதிகம் பிராகிருத மொழிசெல்வாக்கு என்று கூறுவது (ப. 329) பொருத்தமாகப் படவில்லை.மேலும் செய்என்ற வினையடியில் பி வந்துள்ளது பி வடிவமே பழமையானது என்ற கருத்து வரலாற்று நோக்கில் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததே.*

**தொடரியல்**

*வினைமுற்றும் வினையாலணையும் பெயரும்*

*வினைமுற்றுகள் பயன்பாட்டைப் பொறுத்த வரையில் தமிழ் பிராமி கல்வெட்டுகளின் ஒரு சிறப்புப் பண்பாக வினையால ணையும் பெயரும் பெயரெச்சமும் வினைமுற்றுகளாகப் பயன்படுத்தப்படுவது குறிப்பிடப்பட்டி ருப்பது (ப.330) விவாதத்துக்கு உரியது.*

*தமிழில் புறநிலையில் பெயர் + பெயர் (அவன் மாணவன்), பெயர்+ வினை (அவன் வந்தான்) என்ற இரண்டு வகை வாக்கியங்கள் உண்டு என்பதை எல்லாத் தமிழ் இலக்கணங்களும் குறிப்பிட்டுள்ளன. முதல் வேற்றுமையின் கொண்டுமுடியும் சொற்களாக 'வினைநிலை உரைத்தல், .... பெயர்கொள வருதல்' ( வேற்றுமையியல், 5) என்பது தொல்காப்பிய சூத்திரம். நூலில் ( ப.336) பயனிலைப் பொதுவாக வினைமுற்று என்றும் ஆனால் பெயரும் வரலாம் என்றும் (The predicate generally a verb may also be a noun) கூறப்பட்டுள்ளது. உணமையில் தமிழில் பெயரும் வினையும் பயனிலையாக வரலாம் என்றுதான் கூறவேண்டும். அந்தத் தயக்கம்தான் வினையாலணையும்பெயர்கள் வினைமுற்றுகளாக அமைவது கல்வெட்டுத் தமிழின் சிறப்பு பண்புகளாகக் குறிப்பிடப்பட்டிருப்பது (ப.330). மேலும் ஒரு சொல் இயற்பெயராக வந்துள்ளதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. அதில் ஒரு வரலாற்று உண்மை புதைந்துள்ளது பின்பகுதியில் விளக்கப்படும். பெற்றோர் என்ற வினையாலணையும் பெயர் (நன்கு பெற்றோர்) பிற்காலத்தில் தொழில் பெயராகி (நல்ல பெற்றோர்) மாறியுள்ளது. அத்தகைய மாற்றத்தின் பிரதிபலிப்பு தான் இயற் பெயராக மாறியது.*

மொழி அமைப்பு நிலையில் வினைமுற்று மூன்று மொழிக் கூறுகளையும் (வினையடி + காலம்+ திணைபால் விகுதி) வினையாலணையும்பெயர் நான்கு கூறுகளையும் (வினையடி + காலம்+ பெயரெச்ச விகுதி + திணைபால் விகுதி)பெற்றிருக்கும் . அந்த முறையில் கல்வெட்டிலும் ஈத்தவன்,(12.3) கொடுபிதவன் (44.3) வடிவங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது சான்று ஆகும். எனவே ஈத்தவன் என்பதை ஈ +த்த் + அ+ அன் என்று சொல்லியல் நோக்கில் விளக்கவேண்டும். உண்மையில் பெயரெச்சம் + அவன் என்ற தொடரே ஒலிமாற்றத்தால் சொல்லாக மாறியுள்ளது என்பது ஒரு மொழி வரலாற்று மாற்றம்ஆகும். சில கிளைமொழிகளில் -அவன் என்ற வடிவத்தில் உள்ள வகரத்தின் தாக்கத்தால் -ஓன் என்று ஒலி மாற்றம் நடைபெற்றுள்ளது. கொட்டுபித்தோன் ( 8.3), வெப்போன் ( 13.4) ஆகியவைகளும் கல்வெட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளன. எனவே வினையாலணையும்பெயர்களில் திணைபால் விகுதியாக -அவன் என்று கொள்வது பொருந்தாது. மேலே குறிப்பிட்டபடி அ (பெயரெச்ச விகுதி) + திணைபால் விகுதி என்றே விளக்கவேண்டும். அதுபோலவே சில கிளைமொழிகளில் -அவன் வகரம் கெட்டு *அ+ அன்> ஆன் என்று மாறியதாகக் கொள்ளவேண்டும். ஆனால் வினைமுற்றில் வரும் -ஆன் என்பது -அனன் என்ற பழைய வடிவத்தின் திரிந்த வடிவம் ஆகும். கண்டனர் (குறுந்.255,5)~ கண்டார் (குறுந்.75.1). சங்க இலக்கியத்தில் வினைமுற்று வடிவத்தில் இடம் ( தன்மை, முன்னிலை), பால் விகுதிக்கு முன் -அன் சாரியை வருவது பெரும்பான்மை ( அகத்தியலிங்கம், 1984: 22). .வந்தனென் ( தன்மை), வந்தனை( முன்னிலை), வந்தனன்( ஆண்பால்). அவை முறையே வந்தேன், வந்தாய், வந்தான் என்று மாறிய வடிவங்களும் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. எனவே வந்தான் என்பதிலுள்ள -ஆன், -அனன் என்பதன் திரிந்த வடிவம்.

– ஆன் வடிவத்தையும் (செயிதான் (73.7), செய்வித்தான் (88.2) வினையாலணையும் பெயர்களாகக் கொண்டது விவாதத்துக்கு உரியது. உச்சிரிப்பு நோக்கில் வினைமுற்றில் வினையடியும், வினையாலணையும் பெயரில் திணைபால் விகுதியும் ஒலி அழுத்தம் பெறும்.

ஈத்தவன் – குறுகொடவல்கு ஈத்தவன் செற்அதன்ஓன் (12.3) என்பது ஆங்கிலத்தில் *Ce(r)rtan gave for carving (this)*,கூறியதை *Ce(r)rtan is one who gave for carving* என்றுதான் மொழிபெயர்ப்பது பொருத்தமாதனது. அதாவது பொருள் அழுத்த மாறுபாடுதான்.

வினையாலணையும் பெயர்களின் தொடரியல் அமைப்பு நூலில் (ப. 337) பட்டியிலிட்டு விளக்கப்பட்டுள்ளது.

'நெல்வெளிஇய் சிழிவன் அதினன் வெளியன் முழாகை கொடுபிதோன்' (7.4) என்னும்போது நெல்வெளி(யில் வாழும்) சிழிவன் அதினன் வெளியன் என்ற பெயர் அடுக்கையே முழாகை (குகை)யாகிய செயப்படுபொருளை கொடுக்கச் செய்தவன் என்று விளக்கலாம்.

'ஆசி செயிதான் தசன்' என்பதில் செயிதான் என்பதை நேரடியாகவே வினை முற்று பயனிலையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்று கொள்வதுதான் சரி, அதாவது வினையாலணையும் பெயர் வினைமுற்றாக திரிபு பெற்றதாகக் கொள்ள வேண்டியதில்லை. அதுபோலப் புணருத்தான்(அ85), செய்வித்தான்(88), செய்தான்( 55) என்பவைகளும் அடிப்படையில் வினைமுற்றுச் சொற்கள் பயனிலைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதுதான் சரி.

**தொடர்**

பெயரெச்சங்கள் வினையாகச் செயல்படுவதாகக் குறிப்பிட்டுள்ளதும் விவாதத்துக்கு உரியதே (ப.338).

ஸமிதா இன பமித்தி என்பதும் ஆங்கிலத்தில் *The Jain nun who is Sappamitta* என்பதும் பெயர்த் தொடரே.உண்மையில் -இன என்பது பொருத்தப்பாடு விவாதத்துக்கு உரியது. தமிழில் 'ஸமிதா ஆன சமணத் துறவி' என்ற பொருள்தான் பொருத்தமாக அமையும். ஆனால் கல்வெட்டில் இகரம் தெளிவாக உள்ளது.

'இருவர் அமை கல்' (48) என்பது பெயர் + வினைஅடி + பெயர். உண்மையில் அமைகல் என்பது வினைத் தொகையாக அமைந்த பெயரெச்சத் தொடர். அங்கு வினை, மூன்று காலத்துக்கும் பொருந்தும். எனவேஅது பெயர் + பெயர் வாக்கியமே. பெயரெச்சத் தொடர் என்னும் போதே அடையாகச்( *attribute*) செயல்படுகிறது என்று பொருள்.

அமை '*abide*' (தங்குதல்)என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. தமிழ்ப் பேரகராதியிலும் அந்தப் பொருள் தந்து (அகநானூறு (37.9) மேற்கோள் தரப்பட்டுள்ளது.' ( துணர் வடித்து) புளிப்பதன் அமைத்த புதுக் குட(ம்) ' என்பதே அந்தத் தொடர். அமை என்பது செய் என்ற பொருள் பொருத்தமாக இருக்கும். இருவர் செய்(து) கல் என்று பொருள் கொள்ளவும் இடம் உள்ளது.

அதுபோல 'ஆகோள் பெடு தீயன்' (93) என்பதும் வினையடி பெயரெச்சமாகவே கையாளப்பட்டுள்ளது. 'குமுழூர் பிறந்த கவுடி' (49). இறந்த கால பெயரெச்சம் கவுடி என்ற பெயரைத் தழுவியுள்ளதால் பெயர்த் தொடரே.

அவரே அடுத்த பிரிவில் (ப.338)செயப்படு பொருள் தழுவியதாகக் கொடுத்த உதாரணங்கள் பெயரெச்சத் தொடர்களே. வழுதி கொடுப்பித்த பளிஇய் என்பதை *The Hermitage was caused to be carved by Valuti* என்பதற்குப் பதிலாக *The Hermitage which was caused to be carved by Valuti* என்ற தொடராகக் கொள்வதே மொழியியல் நோக்கில் சரியானது.

இந்தப் பிரிவில் (ப.339) 'கொடு பளி'(10) என்ற வினையடி பெயரெச்சமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதுபோல ஈத்த பளி (59), செயிபித்த பளி (89) இறந்த கால பெயரெச்சம் வடிவங்கள் பெயரைத் தழுவிய பெயர்த் தெடர்களே. அந்தப் பெயர்கள் புதைநிலையில் அதாவது வாக்கிய நிலையில் செயப்படுபொருளாக அமையும். அதுபோலப் பிற வேற்றுமைகளையும் பெயரெச்சம் தழுவி வரும்.

'கணதேவன் தொட சுனை' (84) என்ற தொடரில் தொட செயவென் வினையெச்சம். தொட சுனை என்று இருப்பதால் தொட்ட சுனை தொட என்று அமைந்தது எழுத்து பிழை ஆகும். தொ(ட்)ட என்று குறிப்பிடலாம்.

வினையெச்சத் தொடர் என்ற பிரிவில் (ப.340) ..... (இ(ளங்கோ ஆக அறுத்த கல் என்ற தொடரில் ஆக என்பது செயவென் எச்சம் ஆனதால் *to become* என்று பொருள் கொள்ள வேண்டும். ஆகி என்றால் தான் *having become* மொழிபெயர்க்க வேண்டும். எனவே இ(ளங்கோ ஆவதற்கு அறுத்த கல் என்பது மொழி அமைப்பை ஒட்டிய சரியான விளக்கம். அது அடிப்படிடையில் பெயர்த் தொடரே.அல்லது ஆகி என்பது ஆக தவறாக எழுதப்பட்டதாகக் குறிக்க வேண்டும். அதுபோல ஏவ என்ற செயவென் வினை காரணப்பொருள் வந்ததாகக் கொள்ளவேண்டும் (மழைபெய்யக் குளம் நிறைந்தது). இளங்காயிபன் ஏவ அகழ்ஊரறம் என்பது இளங்காயிபன் ஏவியதால் (செய்த) அறம் என்று பொருள் கொள்வது பொருத்தமாக இருக்கும். மோசி செய்த அதிட்டானம் 3 என்பது பெயரெச்சத் தொடராய் மோசி செய்த 3 இருக்கைகள் என்று செய்வினை பொருள் கொள்ளவேண்டும். செயப்பட்ட என்று செயப்பாட்டு வினையாகக் கொண்டது பொருந்தாது.

## முடிவுரை

தொல்லியல் என்பதைப் பரந்த பொருளில் அறிவுத் தொல்லியல் என்று கொண்டால் தொல்லியலின் களம் விரிவிடையும். இலக்கிய இலக்கணங்களை அறிவுத் தொல்லியல் நோக்கில் ஆராயும்போது அந்த மொழிச் சமூகத்தின் ஒட்டுமொத்த அறிவு சார் சாதனை புலனாகும்.

தமிழ் பிராமி கல்வெட்டுத் தமிழை மொழியியல் நோக்கில் ஆராயும்போது தமிழ் மொழி அமைப்பு பற்றி கூடுதல் உண்மைகள் புலனாகி உள்ளன. மொழி அமைப்பு, மாற்று விளக்கத்துக்கும் இடம் கொடுத்துள்ளது.

## துணையன்கள்


அகத்தியலிங்கம், ச.1984 சங்கத் தமிழ்-III (வினையியல், படர்க்கை விகுதிகள்), அனைத்திந்திய மொழியியற் கழகம், அண்ணாமலைநகர்

கைலாசபதி, க. 1973 'கல்வெட்டாராய்ச்சி, அறிஞர் தி.நா சுப்பிரமணியம்' யாழ்ப்பாணத் தொல்பொருளியல் கழக இதழ், (மறுபதிப்பு) ஆவணம் அக்டோபர் 1991: 77-81.

சண்முகம், செ.வை. 1971, *Dravidian Nouns - A Comparative study,* Annamalai University, Annamalainagar

............... 1971a. 'Dialects in inscriprtioal Tamil' *ORBIS.20.Pp.90-98*

..............................1971b 'Some problems in Old Tamil Phonology' *Indo-Iranian Journal. 12.Pp. 32-43.*

.............................. 1980. எழுத்திலக்கணக்கோட்பாடு, (மறுபதிப்பு) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

..................................1984, சொல்லிலக்கணக்கோட்பாடு (மறுபதிப்பு) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

..................................1985,மொழியும்எழுத்தும்,மறுபதிப்பு,நியூசெஞ்சுரிபுக் ஹவுஸ் (பி) லிட், சென்னை

..................................1989 மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும் (சங்க காலம்), மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

.....................................1992,மலையாளமொழியின்முதல்இலக்கணம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

.................................. *1994 இலக்கண உருவாக்கம் (பல்லவர் பாண்டியர் காலம்),* மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

.....................................2015'The relation between Tamil and Malayalam' Studies on Dravidian *(V.I. Subramoniyam Commemoration Volume -1).Pp.* 139-168. International School of Dravidian Linguistics, Thiruvananthapuram

நாகராஜன், ப.வே. & விஷ்ணுகுமாரன், 2000. *தொல்காப்பிய சிறப்பகராதி,* பன்னாட்டுத் திராவிட மொழியியல் நிறுவனம், திருவனந்தபுரம்.

மாதையன், பெ. 2007. *சங்க இலக்கியச் சொல்லடைவு,* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

விசயவேணுகோபால், கோ. 2016,' *தமிழ்க் கல்வெட்டுகளின் பதிப்பும் வரலாற்று மீட்டுருவாக்கமும்',* மணற்கேணி, 33. 5-15.

Mahadevan, Iravatham, 2014. *Early Tamil Epigraphy ( From the Earliest to the sixth century C.E.),* Revised & Enlarged Edition.Volume I. Tamil Brahmi Inscriptions,Central Institute of Classical Tamil, Chennai.

Meenakshusundaran, T.P. *1965 A History of Tamil language,* Deccan college, Poona

Subrahmanyam, P.S. 1983. *Dravidian Comparative phonology,* Annamalai University, Annamalainagar

# 65. அரியலூர் மாவட்டத்தில் கோயிற் கலை வளர்ச்சி சோழர் காலம் (850-1279)

**இல.தியாகராஜன்,** அரியலூர்

அரியலூர் மாவட்டத்தில் கோயிற்கலைகள் வளர்வதற்கு அடிப்படையாக அமைந்தது இப்பகுதியில் நிலவிய பல்வேறு அரச மரபினர்களின் ஆட்சியாகும். பல்லவர், சோழர், பாண்டியர், விஜயநகர நாயக்க மன்னர்கள் மற்றும் பாளையக்காரர்கள் ஆகியோர் இப்பகுதியில் ஆட்சிப்புரிந்துள்ளனர். குறிப்பாக சோழர்களின் இரண்டாம் தலைநகரமான கங்கைகொண்டசோழபுரம் இம்மாவட்டத்தில் உடையார் பாளையம் வட்டத்தில் அமைந்துள்ளது. அதேபோல சோழர்களின் சிற்றரசர்களாக விளங்கிய பழுவேட்டரையர்கள் என்னும் மரபினரின் தலைநகரமாக அரியலூர் வட்டத்தில் உள்ள மேலப்பழுவூர் விளங்கியது. இவ்வூரைச் சார்ந்துள்ள கீழையூர், கீழப்பழுவூர் ஆகியவற்றை உள்ளடக்கியதாக அத்தலைநகரம் விளங்கியது. மேலும் சோழர்களின் கீழ் சிற்றரசர்களாக விளங்கிய வாணகோவரையர்கள் என்னும் அரச மரபினரும் இப்பகுதியில் கோயில்களைக் கட்டியுள்ளனர். சோழர் காலத்தின் இறுதியில் இப்பகுதியில் போசளர்கள் என்ற கர்நாடக அரச மரபினரின் ஆதிக்கமும் பரவியது. அவர்கள் தங்கள் ஆட்சியின் போது கோயில்களைக் கட்டியுள்ளனர். இவர்களைத் தொடர்ந்து இப்பகுதியில் ஆட்சிப்புரிந்த பாண்டியர்களும் அவர்களுக்குப் பின் வந்த விஜயநகர அரசர்களும் அவர்களின் கீழ் உடையார் பாளையம், அரியலூர் பாளையக்காரர்கள் ஆகியோரும் இப்பகுதியில் ஆட்சி செய்துள்ளனர். இதனால் இப்பகுதியில் ஏராளமான கோயில்கள் கட்டப்பெற்றதைக் கல்வெட்டுக்கள் மூலமாக அறியமுடிகிறது. இருப்பினும் நேரமின்மை கருதி இச்சொற்பொழிவின் கால எல்லையை சோழர் காலம் முடிய என வரையறுக்கப்பட்டுள்ளது.

## முதன்மைச் சான்றுகள்

அரியலூர் மாவட்டத்தில் ஏற்பட்ட கோயிற் கலை வளர்ச்சியை அறிவதற்கு ஐயடிகள் காடவர் கோனின் க்ஷேத்திர வெண்பா, சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோரின் தேவாரப்பதிகங்களும் சேக்கிழாரின் பெரியபுராணமும் இலக்கியச் சான்றுகளாக

அமைந்துள்ளன. மேலும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ள 688 கல்வெட்டுக்களும் 10 செப்பேடுகளும் 2 ஓலை ஆவணங்களும் முதன்மைச் சான்றுகளாக அமைந்துள்ளன.[1] இவை தவிர ஆங்காங்கு கிடைக்கும் பல்லவர், பிற்காலச் சோழர், விஜயநகர, நாயக்கர் மற்றும் பாளையக்காரர் கால உதிரிச் சிற்பங்கள் மற்றும் ஆங்காங்கு கிடைத்துள்ள சமண தீர்த்தங்கரர், புத்தர் உதிரிசிற்பங்களும்[2] இம்மாவட்டத்தில் கோயில்களின் கலை வளர்ச்சிப் பற்றி அறிய உதவுகின்றன. இக்கல்வெட்டுக்களில் பெரும்பாலானவை பிற்காலச் சோழர் கல்வெட்டுகளாகும். முதலாம் ஆதித்தன் காலம் முதல் மூன்றாம் இராஜேந்திரன் காலம் வரை இவர்களின் ஆட்சி அரியலூர் மாவட்டத்தில் நிலவியது அக்கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. சோழரின் இறுதிக்காலத்தில் போசள மன்னர்கள் வீரநரசிங்கன், வீரசோமேஸ்வரன், வீரராமநாதன் ஆகியோர் ஆட்சி புரிந்ததை 28 கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இதேபோன்று பாண்டியர் காலத்தவையாக 32 கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. விஜயநகர மன்னர் காலத்தில் எழுதப்பட்ட 14 கல்வெட்டுக்களும் அரியலூர் பாளையக்காரர் காலத்தைச் சேர்ந்த 25 கல்வெட்டுக்களும் உடையார் பாளையம் பாளையக்காரர் காலத்தைச் சேர்ந்த 22 கல்வெட்டுக்களும் கிடைத்துள்ளன. இவற்றிலிருந்து இவர்கள் காலத்தில் கட்டப்பெற்ற பல்வேறு கோயில்கள் கோபுரங்கள், திருச்சுற்று மாளிகைகள், திருமதில்கள், சிற்பங்கள், செப்புத்திருமேனிகள் பற்றிய தகவல்கள் கிடைக்கின்றன.

## கோயில் கலை வளர்ச்சியின் காலப் பகுப்பு முறை

தமிழகக் கோயில்கள் பற்றி ஆய்வு செய்த அறிஞர்களான டக்ளஸ் பேரட்[3], எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்[4] மைக்கேல் டபிள்யூ, மெய்ஸ்டர்[5] ஆகியோர் பின்பற்றிய காலப் பகுப்பு முறைகளான பல்லவர் காலம், முற்காலச் சோழர் காலம் (விஜயாலயன் முதல் உத்தமசோழன் காலம் வரை); இடைக்காலச் சோழர் காலம் (முதலாம் இராஜராஜன் முதல் அதிராஜேந்திரன் காலம் வரை); பிற்காலச் சோழர் காலம் (முதலாம் குலோத்துங்கன் காலம் முதல் மூன்றாம் இராஜேந்திரன் காலம் வரை) பாண்டியர் காலம் என்னும் காலப் பகுப்பு முறைகள் இங்கு பின்பற்றப்படுகிறது.

## அரியலூர் மாவ்வட்டத்தில் பல்லவர் காலக் கோயில்கள்

இம்மாவட்டத்தில் பல்லவர் காலத்துக் கோயில்கள் எனத் தனியாகத் தற்போது காணும்படி கோயில்கள் எதுவுமில்லை. பொ.ஆ.6-9ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில்

நிலவிய பல்லவர் ஆட்சிக்காலத்தில் நான்கு கோயில்கள் இம்மாவட்டத்தில் இருந்தன என்பது தேவார இலக்கியம் மற்றும் சிற்பச்சான்றுகள் மூலம் அறிகிறோம்.

## சோழர்காலக் கோயில்கள்

### கீழையூர்

1. **பழுவூர் அவனிகந்தர்வ ஈஸ்வரகிருகம் - பொ.ஆ.884**

2. **பழுவூர் பகைவி ஈஸ்வரம் - பொ.ஆ.884**

இவ்விரண்டு கோயில்களும் முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் பழுவூரைத் தலைநகராகக் கொண்டு பழுவேட்டரையர் மரபினரின் ஆட்சியை நிறுவிய குமரன் கண்டன் என்பவரின் காலத்தில் கட்டப்பெற்றுள்ளன. அவனி கந்தர்வன் மற்றும் பகைவிடை என்பன குமரன் கண்டனின் பட்டப்பெயர்கள் எனக் கருதலாம்.

இவ்விரு கோயில்களில் அவனிகந்தர்வ ஈஸ்வர கிருகம் என்ற கோயில் மேலப்பழுவூரின் ஒரு பகுதியாக உள்ள கீழையூரில் தற்போது அகத்தீஸ்வரர், சோழீஸ்வரர் என்ற பெயருடைய' கோயில்களாக அமைந்துள்ளன. இவ்விரு கோயில்களும் கட்டிய காலம் முதல் மாற்றம் ஏதுமின்றி உள்ளன. இவை மிக அழகுடன் அடி முதல் முடி வரை கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. ஒரு கோயில் நாகரவிமானத்துடனும் மற்றொரு கோயில் வேசர விமானத்துடனும் உள்ளன. வேசர விமானத்துடன் உள்ள கோயில் கல்வெட்டுக்களில் அவனி கந்தர்வ ஈஸ்வர கிருகத்து வடவாயில் ஸ்ரீகோயில் என அழைக்கப்படுகிறது. தற்போது சோழீஸ்வரர் என்ற பெயருடன் திகழுகிறது. நாகர விமானத்துடன் உள்ள கோயில் கல்வெட்டுக்களில் அவனிகந்தர்வ ஈஸ்வர கிருகத்து தென் வாயில் ஸ்ரீகோயில் எனக் குறிப்பிடப்படுகிறது. இது தற்போது அகத்தீஸ்வர கோயில் என அழைக்கப்படுகிறது.

இக்கோயில் வளாகத்தில் உள்ள நுழைவு வாயில் கோபுரம், கோபுரவாயில் துவாரப்பாலகர்கள், விநாயகர் சன்னதி, முருகன் சன்னதி சப்தமாதர் சன்னதி மற்றும் இங்குள்ள சப்தமாதர் சிற்பங்கள், பரிவார சன்னதி சிற்பங்கள் விமானத்தில் உள்ள சிற்பங்கள் முன் மண்டபத்தில் உள்ள சிங்கமுக தூண்கள், கருவறை தேவகோஷ்டங்களில் உள்ள சிற்பங்கள் என அனைத்தும் முதலாம் ஆதித்தன் காலத்தில் கலைப் படைப்புகளாகும். இங்குள்ள துவஜபீடத்தை அடிகள் பழுவேட்டரையர் கைக்கோளன் மாதேவன் இரணமுகராமன் எடுப்பித்த

த்வஜபீடம் என்று அதில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டு வரிகள் மூலம் அறியமுடிகிறது.

பகைவிடை ஈஸ்வரம் என்ற கோயில் மேலப்பழுவூரில் தற்போது சுந்தரேஸ்வரர் கோயில் என்ற பெயரில் அமைந்துள்ளது. இக்கோயில் பிற்காலத் திருப்பணிகளால் தனது முற்காலச் சோழர் கலைக் கூறுகளை இழந்துவிட்டது.

## திருமழபாடி சிவன் கோயில்

அரியலூர் வட்டத்தில் உள்ள திருமழபாடியில் வைத்திய நாதசுவாமி கோயில் என்னும் சிவாலயம் உள்ளது. பல்லவ மன்னர் சிம்ம விஷ்ணு என்பவர் வாழ்க்கையின் இறுதி காலத்தில் ஐயடிகள் காடவர் கோன் என்ற பெயரில் சைவத் துறவியாக மாறி சைவத் தலங்களை வழிபட்டுப் பாடிய கேஷத்திர வெண்பாவில் இக்கோயிலை வணங்கி அவர் பாடிய பாடல் உள்ளது. பிறகு வந்த அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் இக்கோயிலைப் பாடியுள்ளனர். இவை பல்லவர் காலத்தில் இங்கு கோயில் இருந்ததை உணர்த்துகின்றன. ஆனால் அக்கோயில் தற்போது மறைந்துவிட்டது.

இங்கு முதலாம் ஆதித்தசோழன் காலத்தில் கருங்கல்லால் ஆன கற்றளி கட்டப்பட்டது. இக்கோயிலில் இம்மன்னரின் ஆட்சியாண்டுகளில் எழுதப்பட்ட 3 கல்வெட்டுக்கள் உள்ளன. இதனால் இக்கோயில் பொ.ஆ.894 இம்மன்னன் காலத்தில் கட்டப்பெற்ற பழமையுடையது என அறியலாம்.

இக்கோயிலுக்கு ஆதித்தசோழனின் மூத்த மனைவி வல்லவரையர் மகளார் இளங்கோன் பிச்சி என்பவர் விளக்கு வைக்க 10 கழஞ்சுப் பொன் வழங்கியுள்ளார்.

இவர் இராஷ்டிரகூட மன்னர் இரண்டாம் கிருஷ்ணன் என்பவரின் மகள் ஆவார். (தெ.இ.க.:13, எண்.323) இக்கோயில் அர்த்தமண்டப நுழைவு வாயிலில் உள்ள துவார பாலகர் சிற்பங்கள் மற்றும் அலுவலக மண்டப தெற்குச் சுவரில் ரிஷபாந்தகர் மகரதோரணசிற்பம், அம்மன் சன்னதி கோயில் வடகீழ் மூலையில் சிதறிக்கிடக்கும் சிங்கமுகத் தூண்கள் மற்றும் அம்மன் சன்னதியின் மேற்குச் சுவரில் வைத்துக் கட்டப்பட்டுள்ள சூரியன் சிற்பம் போன்றவை ஆதித்தன் காலப் படைப்புகளாகும்.

## முதலாம் பராந்தகன் காலம் (907-955)

இம்மன்னர் ஆட்சிக்காலத்தில் கீழப்பழுவூரில் மறவனீஸ்வரம், ஆலந்துறையார் கோயில், வீரசோழவிண்ணகர் ஆகிய

கோயில்களும் கோவிந்தப்புத்தூரில் விஜயமங்கலத்து மகாதேவர் கோயிலும் என 4 கோயில்கள் கட்டப்பெற்றுள்ளன.

**1.மறவனீஸ்வரம் - பொ.ஆ.911**

கீழப்பழுவூர் ஆலந்துறையார் கோயிலின் மதில் சுவருக்குத் தென்புறம் தற்போது பசுபதீஸ்வரர் கோயில் என அழைக்கப்படும் சிவன் கோயில் உள்ளது. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானது முதலாம் பராந்தகனின் 4ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பட்ட கல்வெட்டாகும். இது இக்கோயில் பெயரை மறவனீஸ்வரம் ; இக்கோயிலுக்கு பழுவேட்டரைய மன்னர் குமரன் மறவனின் தேவியாரும் கொங்கதி மழவரையரின் மகளுமான ஒரு பெண்ணரசி நந்தா விளக்கு வைத்துள்ளார். (தெ.இ.க..19, எண்.109) பழுவேட்டரையர் குமரன் மறவன் என்பவர் கீழையூரில் உள்ள முதலாம் ஆதித்தனின் 22ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகிறார்.(தெ.இ.க..13, எண்.298 மற்றும் 355/1924) இதனால் இச்சான்றுகள் மூலம் இம்மன்னர் முதலாம் பராந்தகன் காலத்திலும் வாழ்ந்தார் என்பதும் இவர் தன்பெயரில் கீழப்பழுவூரில் மறவனீஸ்வரம் என்னும் சிவன் கோயிலைக் கட்டியுள்ளார் என்பதும் புலனாகிறது.

இக்கோயில் கருவறைத் தெற்குத் தேவகோஷ்டத்தில் உள்ள தட்சிணாமூர்த்திச் சிற்பம் பராந்தகன் காலப் படைப்பாகும்.

**2.ஆலந்துறையார் கோயில்**

இக்கோயில் பொ.ஆ.7 ஆம் நூற்றாண்டில் பல்லவர் காலத்தில் வாழ்ந்த திருஞானசம்பந்தரால்பாடப்பெற்றபழமையுடையதாகும். ஆனால் பல்லவர் காலக் கலைக் கூறுகள் எதுவும் தற்போது இல்லை. பல்லவர் காலத்தில் இருந்த கோயில் பின்வந்த முதலாம் பராந்தகன் காலத்தில் கற்கோயிலாக கட்டப்பட்டது. இக்கோயிலில் உள்ள தொன்மையான கல்வெட்டுக்கள் பரகேசரிவர்மன் என்பவரின் 4 ஆம் ஆட்சியாண்டு (தெ.இ.க..19, எண்.110 மற்றும் 228/1926) மற்றும் மதுரைகொண்ட பரகேசரிவர்மனின்(முதலாம் பராந்தகன்) 10ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு(தெ.இ.க..5, எண்.680 மற்றும் 233/1926) ஆகும். 4ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டை முதலாம் பராந்தகனுடையது என்று கொள்ளலாம். இதன்படி இக்கோயில் பொ.ஆ.911-917 ஆம் ஆண்டுகளுக்கிடையில் முதலாம் பராந்தகன் காலத்தில் கட்டப்பெற்றது என்பது புலனாகிறது. இக்கோயில் கருவறைச் சுவர்களில் உள்ள தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரம்மா,

விநாயகர், துர்க்கை ஆகிய சிற்பங்கள் இம்மன்னர் காலத்துப் படைப்புக்கள் ஆகும்.

**3.வீரசோழவிண்ணகர்**

வீரசோழன் என்பது முதலாம் பராந்தகசோழரின் பட்டப்பெயர்களில் ஒன்றாகும். இதனை இம்மன்னரின் 36ஆம் ஆண்டில் எழுதப்பட்ட கிராமம் கல்வெட்டுப் பின்வருமாறு கூறுகிறது. 'ஸ்ரீபிராந்தகதேவரான ஸ்ரீவீரசோழப் பெருமானடிகள் மகனார் இராஜாதித்ததேவர்' (எபிகிராபியா இன்டிகா, .8, பக்கம்.261, 735/1905)இப்பெயரில் இக்கோயில் அமைந்துள்ளது என்பதால் இது இம்மன்னர் காலத்தில் கட்டப்பெற்றக் கோயில் என்று கருதலாம். கீழப்பழூரில் தற்போதுள்ள சீனிவாசப்பெருமாள் கோயிலில் சோழர்காலக் கல்வெட்டுக்கள் எதுவுமில்லை. பிற்காலத் திருப்பணியால் அவை மறைந்துவிட்டன எனலாம். இருப்பினும் இக்கோயில் பற்றிய குறிப்பு கீழப்பழூர் ஆலந்துறையார் கோயிலில் உள்ள முதலாம் குலோத்துங்கன் சோழரின் 20ஆம் ஆண்டுக் கல்வெட்டில்(தெ.இ.க..3, எண்.71) குறிப்பிடப்படுகிறது. மேலும் இப்பெருமாள் கோயிலில் உள்ள மூலவர் சிற்பங்கள் மற்றும் அமர்ந்த பிளை சோழிஸ்வரர்ல் உள்ள பெருமாள் ஆகியவை முற்காலச் சோழர் முக அமைதியுடன் இருப்பதால் இக்கோயில் முதலாம் பராந்தகன் காலத்தில் கட்டப்பட்டது என்று கருதலாம். இவ்வாறு கீழப்பழூரில் முதலாம் பராந்தகன் காலத்தில் மறவனீஸ்வரம், ஆலந்துறையார் கோயில், வீரசோழ விண்ணகர் ஆகிய மூன்று கோயில்கள் கட்டப்பட்டுள்ளன.

**4.கோவிந்தப்புத்தூர் விஜயமங்கலத்து மகாதேவர் கோயில்**

உடையார் பாளையம் வட்டத்தில் கொள்ளிட ஆற்றின் வடக்குக் கரையில் கோவிந்தப்புத்தூர் என்ற சிற்றூர் அமைந்துள்ளது. இவ்வூரின் மிக அருகில் அமைந்துள்ள மற்றொரு கிராமம் ஸ்ரீபுரந்தான் ஆகும். 6-7ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த அப்பர், சம்பந்தர் ஆகிய இருவரும் கோவிந்தப்புத்தூரில் உள்ள இறைவனை வணங்கி தேவாரப்பதிகங்கள் பாடியுள்ளனர். மகாபாரத காலத்தில் வாழ்ந்த பாண்டுவின் மகன் பார்த்தன்(விஜயன், அர்ச்சுனன்) இக்கோயில் இறைவனை வழிபட்டு வரங்கள் பெற்றதாகவும் கோதனம் என்னும் வானுலகப் பசு இங்கு வந்து இறைவனை வழிபட்டதாகவும் மறை ஓதுகின்ற பிராமணர்கள் இவ்வூரில் வாழ்ந்திருந்ததாகவும் இவர்களின் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

**'கோதனம் வழிபடக் குலவு நான்மறை வேதியர் தொழுதெழு விசைய மங்கையே'**

**'கொள்ளிடக்கரை கோவந்தப்புத்தூரில் வெள்விடைக்கருள் விசைய மங்கையே'**

**'பாண்டுவின் மகன் பார்த்தன் பதி செய்து வேண்டும் நல்வரங்கொள் விசைய மங்கையே'**

இவ்வாறு 6-7 ஆம் நூற்றாண்டிலேயே இவ்வூரில் சிவாலயம் இருந்தது என்பதைத் தேவாரப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது. இத்தகு சைவச் சிறப்புடைய இவ்வூரில் முதலாம் பராந்தகன் காலத்தில் பிராமணர்கள் குடியேற்றப்பட்டு அவ்வூருக்குப் பெரிய ஸ்ரீவானவன் மாதேவிச்சதுர்வேதிமங்கலம் என்று பெயரிடப்பட்டுச் சிவன் கோயிலும் கட்டப்பட்டுள்ளது. அக்கோயில் ஸ்ரீவிஜயமங்கலத்து மகாதேவர் கோயில் என அழைக்கப்பட்டது.

இக்கோயிலில் உள்ள பழமையான கல்வெட்டு முதலாம் பராந்தகசோழரின் 22ஆம் ஆண்டில் எழுதப்பட்ட கல்வெட்டாகும். (பொ.ஆ.929- ARE.177 of 1928-29) இக்கல்வெட்டு, 'வடகரை ப்ரஹமதேயம் பெரிய ஸ்ரீவானவன் மாதேவிச் சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீவிஜயமங்கலத்து மகாதேவர்க்கு' என்று குறிப்பிடுகிறது.

இதனால் இக்கோயில் இம்மன்னர் காலத்தில் கட்டப்பெற்றது என்பது புலனாகிறது. பெரிய ஸ்ரீவானவன் மாதேவி என்ற பெயரில் உள்ள பெரிய என்ற சொல் சோழர் காலக் கல்வெட்டுக்களில் இறந்தவர்களைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படும் சொல் ஆகும். இதனால் வானவன் மாதேவியார் இறந்தப்பிறகு அவர் பெயரில் இந்த பிரம்மதேய ஊர் உருவாக்கப்பட்டுள்ளது எனலாம். இப்பெண்ணரசி வானவன் மாதேவியின் மனைவியாகவோ அல்லது தாயாகவோ இருக்கலாம். இப்பெயர் முதலாம் இராஜராஜன் காலத்தில் ஸ்ரீபராந்தகச்சதுர்வேதிமங்கலம் என்று மாற்றப்பட்டது. இப்பெயரின் மருவிய வடிவமாக தற்போது ஸ்ரீபுரந்தான் என அழைக்கப்படுகிறது. கோவிந்தப்புத்தூரின் கிழக்கில் ஸ்ரீபுரந்தான் கிராமம் அமைந்துள்ளது. இந்த இரண்டு ஊர்களும் சேர்ந்து அக்காலத்தில் பெரிய ஸ்ரீவானவன்மாதேவிச்சதுர்வேதிமங்கலம் எனவும் பிறகு ஸ்ரீபராந்தகச்சதுர்வேதிமங்கலம் எனவும் அழைக்கப்பட்டது. கோவிந்தப்புத்தூர் பாடல் பெற்ற தலமான சிவன் கோயில் அமைந்துள்ள ஊராகும். பராந்தகன் காலத்தில்

செய்யப்பெற்ற தட்சிணாமூர்த்தி, பிரம்மா, விஷ்ணு ஆகிய சிற்பங்களும் விநாயகர் துர்க்கை ஆகிய சிற்பங்களும் இங்குள்ளன. பின்னர் இக்கோயில் உத்தமசோழன் காலத்தில் புதுப்பித்துக் கட்டப்பட்டுள்ளது. இதுபற்றி உத்தமசோழன் காலத்து கோயில்கள் என்னும் பகுதியில் காணலாம்.

**பராந்தகனுக்குப் பின்**

முதலாம் பராந்தகன் காலத்திற்குப் பிறகு ஆட்சி செய்த கண்டராதித்தச்சோழர், அறிஞ்யசோழர் ஆகியோர் காலத்தில் கோயில்கள் எதுவும் கட்டப்படவில்லை. இருப்பினும் கண்டராதித்தச் சோழர் திருமழபாடி அருகே தன் பெயரில் கண்டராதித்தச்சதுர்வேதிமங்கலம் என்னும் பிரம்மதேய ஊரை அமைத்துள்ளார். இந்த ஊர் தற்போது கண்டராதித்தம் என்ற பெயரில் உள்ளது. இந்த ஊரை இவர் அமைத்தார் என்ற தகவலை முதலாம் இராஜராஜசோழர் வெளியிட்டுள்ள ஆனைமங்கலச் செப்பேடு கூறுகிறது.(எபிகிராபியா இண்டிகா .22, பக்கம்.240, செப்பேடு வரிகள்.47-51) இவ்வூரில் கண்டராதித்த விண்ணகர் என்னும் பெருமாள் கோயில் இருந்துள்ளது. அதேபோல சிவலோகத்து மகாதேவர் என்ற சிவன் கோயில் உத்தமசோழன் காலத்தில் கட்டப்பட்டுள்ளது. எனவே இப்பெருமாள் கோயிலும் உத்தமசோழன் காலத்தில் கட்டப்பட்டது எனலாம். இக்கோயில்கள் பற்றி உத்தமசோழன் காலக் கோயில்கள் என்ற தலைப்பில் காணலாம்.

**5.சுந்தரசோழர் காலத்துக் கோயில்-காமரசவல்லிச் சிவன் கோயில்**

அரியலூர் வட்டம் திருமானூர் ஒன்றியத்தில் காமரசவல்லி என்ற கிராமம் உள்ளது. திருமானூர்- ஏலாக்குறிச்சி வழியாகவும் அரியலூர் - ஏலாக்குறிச்சி வழியாகவும் இவ்வூரை அடையலாம். இவ்வூரில் பாலாம்பிகை உடனுறை சௌந்தரேஸ்வரர் கோயில் என்ற சிவன் கோயில் உள்ளது. கல்வெட்டுக்களில் இவ்வூர்ப்பெயர் காமரவல்லி, காமதவல்லிச் சதுர்வேதிமங்கலம் எனவும் கோயில் பெயர் திருநல்லூர் மகாதேவர் எனவும் திருக்கார்கோடக ஈஸ்வரர் எனவும் அழைக்கப்படுகிறார். கார்கோடகன் என்ற பாம்புகளின் அரசன் இங்குள்ள இறைவனை வணங்கி சாபவிமோசனம் பெற்றார் என்று தலபுராணம் கூறுகிறது. ரதி தான் இழந்த காமன்(மன்மதன்) என்ற கணவனை இங்குள்ள சிவனை வணங்கி மீண்டும் பெற்றாள் என்றும் கூறப்படுகிறது. இதனால் இவ்வூருக்கு காமரசவல்லி என்ற பெயர் ஏற்பட்டது என்று கூறுகிறது. ஆனால் கல்வெட்டுக்களில் இப்பெயர் இல்லை. கொடி வகைகளில் ஒன்றான காமதவல்லி என்ற

கொடி அதிகம் வளர்கின்ற பகுதி என்பதால் காமதவல்லி என்ற பெயர் உண்டாயிற்று என்பது சரியான கருத்தாகத் தெரிகிறது. சோழர் காலத்தில் இவ்வூர் பிராமணர்கள் வாழ்கின்ற பிரம்மதேயக் கிராமமாக உருவாக்கப்பட்டு சிவன் கோயிலும் கட்டப்பட்டுள்ளது.

இங்குள்ள சிவன் கோயிலில் 39 கல்வெட்டுக்கள் உள்ளன. அவை சோழர், பாண்டியர், போசள மன்னர்கள் ஆகியோர் காலங்களில் எழுதப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானது இராஜகேசரிவர்மனின் 5ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பட்ட கல்வெட்டாகும். இக்கல்வெட்டில் உள்ள பஞ்சாங்க குறிப்புகளின்படி இதன் காலம் பொ.ஆ.962 ஆகும். எனவே இக்கல்வெட்டு சுந்தரசோழனுடையது என்பது அறிஞர்களின் கருத்தாகும். இதனால் இக்கோயில் இம்மன்னரின் ஆட்சிக்காலத்தில் கட்டப்பெற்றது எனலாம். இக்கல்வெட்டு வடகரைப் பிரம்மதேயம் ஸ்ரீகாமரவல்லிச்சதுர்வேதிமங்கலத்தில் பெருங்குறி சபையார் இக்கோயிலில் கூட்டம் கூடி திருநல்லூர் மகாதேவர்க்கு சிதாரி, அகில், சந்தனம், கற்பூரம், நெறியாசம், தேன் ஆகியவை கலந்த சிதாரி வழங்குவதற்கு நிலம் கொடுத்த தகவலைக் கூறுகிறது. இந்பிலத்தை ஆதனூர் பாலாசிரிய பட்டன் சிவன் கூத்தன் இவ்வூர்ச் சபையிடம் இருந்து 12 காசுகளைக் கொண்டு விலைக்கு வாங்கி இறைஇழிச்சிக் கொடுத்துள்ளார். (தெ.இ.க..13,எண்.114) இக்கோயில் கருவறை உள்ள தட்சணாமூர்த்தி, லிங்கோத்பவர், பிரம்மா ஆகியவையும் விநாயகர், துர்க்கை ஆகியனவும் இம்மன்னர் காலச் சிற்பங்களாகும். கருவறை கண்டப் பகுதிகளில் உள்ள சிறுசிற்பங்களும் இக்காலத்தவையாகும். இங்குள்ள அழகிய செப்புத் திருமேனிகள் சோழர் கால வார்ப்புக்களாகும்.

இதன் பின்னர் உத்தமசோழன் காலத்தில் செம்பியன் மாதேவிக் கலைப்பாணியில் இக்கோயில் கருவறை மற்றும் அர்த்தமண்டபச் சுவர்கள் குடையப் பெற்று அவற்றில் தேவகோஷ்டச் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. அவ்வாறு சொருகப்பட்ட சிற்பங்களாக அகத்தியர், விநாயகர், ரிஷபாந்தக அர்ததநாரி, கங்காளர், காலாரி மூர்த்தி, பிச்சாடனர் ஆகிய சிற்பங்கள் உள்ளன. இதன்பின் இக்கோயிலில் போசளர் காலத்தில் மண்டபங்கள் பிராகரங்கள் போன்ற கட்டட அமைப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன.

## 6. உத்தமசோழன் காலக் கோயில்கள்

உத்தமசோழன் காலத்தில் இரண்டு வகையான பாணியில் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. ஒன்று ஏற்கனவே கட்டப்பட்டுள்ள கோயில்களை புதுப்பித்துக் கற்றளியாகக் கட்டுதல். இரண்டாவது புதிதாக கோயில்கள் கட்டுதல். முதல் வகையைப் பின்பற்றி கீழப்பழுவூர் ஆலந்துறையார் கோயில், கோவிந்தப்புத்தூர் சிவன் கோயில் ஆகியவை கட்டப்பட்டுள்ளன. இரண்டாவது வகையாக புதிதாக ஸ்ரீபுரந்தான், கண்டராதித்தம், மேலப்பழுவூர் ஆகிய ஊர்களில் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. மூன்றாவதாக ஏற்கனவே உள்ள கோயில்களில் உள்ள கருவறை, அர்த்தமண்டபம் ஆகிய கட்டடப்பகுதிகளுக்கு முன்பாக முன் மண்டபம் அமைத்து அதில் பல தேவகோஷ்டங்களை அமைத்து கோயில் கட்டும் பாணியை இந்த அம்மையார் பின்பற்றியுள்ளார்.

அந்த வகையில் திருமழபாடி சிவன் கோயில் முன்பாக முன் மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. பொதுவாக உத்தமசோழன் காலத்தில் வாழ்ந்த இவருடைய தாயார் செம்பியன் மாதேவியார் தேவகோஷ்டங்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தி அவற்றில் சிவனுடைய பல வடிவங்களைக் காட்டும் சிற்பங்களை வடித்து அவற்றை அமைத்துள்ளார். இத்தகைய கலைப்பாணி செம்பியன் மாதேவிக் கலைப்பாணி என அழைக்கப்படுகிறது. இவ்வாறு சிற்பங்கள் பிறைந்த சன்னதிகளை திருமழபாடி காமரசவல்லி கோவிந்தப்புத்தூர் ஆகிய இடங்களில் காணமுடிகிறது.

### 1.கீழப்பழுவூர் ஆலந்துறையார் கோயில் (பொ.ஆ.979)

இக்கோயில் ஏற்கனவே முதலாம் பராந்தகன் காலத்தில் கட்டப்பட்டது என்பதை மேலே பார்த்தோம். தற்போது இம்மன்னரின் ஆட்சிக்குப் பின் உத்தமசோழன் காலத்தில் எழுதப்பட்ட 9 மற்றும் 15ஆம் ஆண்டுடைய 2 கல்வெட்டுக்கள் இக்கோயிலைப் பழுவேட்டரைய மன்னர் மறவன் கண்டன் என்பவரின் ஆணைப்படி அவருடைய அதிகாரியாகப் பதியாற்றிய கௌசிகன் நக்கன் மாறபிரான் ஆன நம்பி ஆரூரன் என்பவர் மேனாயகமாக பின்று இக்கோயிலைக் கற்றளியாக கட்டுவித்தார் என்பதைக் கூறுகின்றன. (செய்திக் கட்டுரை 24.1.1988 மாலை முரசு-திருச்சி, A.R.E 122 of 1987-88.- கல்வெட்டு (245/1926. தென்னிந்திய கல்வெட்டுக்கள் 19, எண் : 384)

பராந்தக காலத்திய கோயில் உத்தமசோழன் காலத்தில் பழுவேட்டரைய மன்னர் இவ்வூரை ஆட்சி செய்த மறவன் கண்டன் என்பவரால் கற்றளியாகக் கட்டப்பட்டுள்ளதை கல்வெட்டுகளால் அறிகிறோம். ஒரு வேளை பழைய கோயில் விரதித்துப் போனதாலோ அல்லது முழுவதுமாக கற்றளியாக கட்டப்பட்டு இல்லாமல் இருந்ததாலோ தற்போது முழுவதும் கற்கோயிலாகக் கட்டப்பட்டது என்று கருதலாம். இதனால் பழைய சுவரில் இருந்த கல்வெட்டுக்கள் இம்மன்னர் காலத்தில் மீண்டும் புதிதாக எழுதப்பட்டன என்றும் கருதலாம். இக்கோயில் அர்த்தமண்டபத்துக்கு முன் அமைக்கப்பட்டுள்ள முன் மண்டபத்தில் வடக்கிலும் தெற்கிலும் இரண்டு தேவகோஷ்டங்கள் னிதம் நான்கு தேவகோஷ்டங்களும் கிழக்கில் பக்கத்திற்கு ஒன்று என இரண்டு தேவகோஷ்டங்களும் என ஆறு தேவகோஷ்டங்களில் அமைக்கப்பட்டு அவற்றில் கஜசம்காரமூர்த்தி, நடராஜர், அர்த்தநாரி(ரிஷபத்தின் மேல் சாய்ந்து பின்ற கோலத்தில்), காலாரி மூர்த்தி, கங்காளர், கல்யாண சுந்தரர் என்னும் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவை செம்பியன் மாதேவி கலைப்பாணியில் அமைந்த முன் மண்டபத்து சிற்பங்களாகும்.

**2. கோவிந்தப்புத்தூர் விஜயமங்கலத்து மகாதேவர் கோயில்(பொ.ஆ.980)**

இக்கோயிலில் உள்ள பழமையான கல்வெட்டு முதலாம் பராந்தகனின் 22ஆம் ஆண்டில் எழுதப்பட்டது என்பதை மேலே கண்டோம். இதன்பின் உத்தமசோழனின் - 14ஆம் ஆண்டுகளில் எழுதப்பட்ட 10 கல்வெட்டுக்கள் உள்ளன. இவை அனைத்தும் இக்கோயிலைக் கற்றளியாகக் கட்டியவர் குவளாலமுடையான் அம்பலவன் பழுவூர் நக்கனான விக்கிரமசோழ மகாராஜன் என்று கூறுகின்றன.

'ஸ்ரீவிஜயமங்கலத்து மகாதேவர்க்கு இத்திருக்கற்றளி செய்வித்த அம்பலவன் பழுவூரனான ஸ்ரீவிக்கிரமசோழமாராயர்'(தெ.இ.க..19, எண். 272)

**'பெரியஸ்ரீவானவன் மாதேவிச்சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீவிஜயமங்கல தேவர் கோயில்**

**ஸ்ரீவிமானம் கல்லால் எழுந்தருளிவிச்சேன் ஸ்ரீஉத்தமசோழதேவர் பெருந்திறத்து**

**குவளாலமுடையான் அம்பலவன் பழுவூர் நக்கனான விக்கிரமசோழ மாராயனேன்' (தெ.இ.க..19, எண்.332)**

இக்கல்வெட்டுக்களின் வாசகத்திலிருந்து உத்தமசோழனின் கீழ் அதிகாரியாக இருந்த அம்பலவன் பழுவூர் நக்கன் என்பவர் இக்கோயிலைக் கருங்கல்லால் கட்டியுள்ளார் என்பது புலனாகிறது. இதிலிருந்து முதலாம் பராந்தகசோழன் காலத்திலிருந்த கோயில் பாதி கருங்கல்லாகவோ பாதி செங்கல்லாகவோ கட்டப்பெற்றிருந்தது என்பதால் இவர் இக்கோயில் முழுவதையும் கருங்கல்லால் கட்டியுள்ளார் என்று கருதலாம். இக்கோயிலின் கருவறை, அர்த்தமண்டப சுவர்களில் உள்ள சிற்பங்களைத் தவிர அர்த்தமண்டபச் சுவரில் பழைய சிற்பங்களின் பக்கத்தில் புதிதாக பக்கத்திற்கு இரண்டு விதம் புதிய மாடங்களைக் குடைந்து அமைத்து அவற்றின் சிற்பங்களை வைத்துள்ளனர். அதன்படி வடக்கில் பிச்சாடனர், காலாரி மூர்த்தி சிற்பங்கள் துர்க்கையின் இரண்டு பக்கங்களிலும் வைக்கப்பட்டுள்ளன. தென்பக்கம் நடராஜர் சிற்பம் உள்ளது. மற்றொரு தேவகோஷ்டம் காலியாக உள்ளது. இவ்வாறு கோவிந்தப்புத்தூர் கோயில் புதுப்பித்துக் கற்றளியாக இம்மன்னர் காலத்தில் கட்டப்பட்டுள்ளது.

இக்கோயிலுக்கு இவர் பொ.ஆ.980இல் விளக்கெரிக்க 90 ஆடுகளைக் கொடுத்துள்ளார்.(170/1928-29) இவருடைய மனைவியர் சிங்கபன்மன் காஞ்சி அக்கன், அபராயுதன் செய்ய வாய்மதி ஆகிய இருவரும் பொ.ஆ.983இல் ஆளுக்கு ஒரு விளக்கு வைத்து ஏற்ற 96 ஆடுகள் னிதம் கொடுத்துள்ளனர். (166,167/1928-29)மேலும் பொ.ஆ.984 இல் அம்பலவன் பழுவூர் நக்கன் இக்கோயில் இறைவனுக்கு திருவமுது படைக்கவும் திருவிளக்கு ஏற்றவும், திருமெய்ப்பூச்சு பூசவும் திருப்புகைக்காட்டவும் நந்தவனம் வைக்கவும், திருவிழா நடத்தவும் பிராமணர்களுக்கு சிவயோகி சிவபிராமணர்களுக்கு 50 பேர்கள் உண்பதற்கும் இச்சதுர்வேதிமங்கலத்துக்கு வடபிடாகையாக இருந்த நெடுவாயில், பெரியஆதன்னூர், தாமரை நல்லூர், திருச்சென்னிவலம், மாக்குலக்குறிச்சி ஆகிய ஊர்களைக் கொடுத்துள்ளார். இவ்வூர்கள் இவருக்கு உரிமையுடைய ஊர்களாக இருந்தன என்பது குறிப்பிடத்தக்கது. (164/1928-29) மேலும் இவர் இக்கோயிலில் கூத்தப்பெருமாள் (நடராஜர்), உமாபட்டாலகி(சிவகாமி அம்மன்), கணபதி ஆகிய செப்புத் திருமேனிகளையும் எழுந்தருளிவித்து அவர்களுக்கு அமுது செய்தருள 17 கழஞ்சுப் பொன்னும் நிலமும் வழங்கியுள்ளார் என்பதை முதலாம் இராஜராஜனின் 7 ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது.(163/28-29)மற்றொரு துண்டுக் கல்வெட்டு ஸ்ரீவிமானம், அட்டப்பரிவாரம், திருமடைப்பள்ளி,

திருப்பள்ளிக்கட்டில் மண்டபம், திருச்சுற்றாலை, திருக்கோபுரம், சாலை ஆகியவற்றை ஆண்டாண்டு தோறும் புதுப்பித்துக் கட்டுவதற்குப் புதுக்குப்புறமாக நிலம் வழங்கியதைக் கூறுகிறது. (புதிய கல்வெட்டு)

**3. ஸ்ரீபுரந்தான் கைலாசநாதர் கோயில் (பொ.ஆ.982,983)**

கோவிந்தப்புத்தூர் சிவன் கோயிலில் உத்தமசோழரின் 2 கல்வெட்டுக்கள் உள்ளன. (158,159/1928-29,தெ.இ.க..19, எண்.331) இக்கல்வெட்டுக்கள் பெரிய ஸ்ரீவானவன்மாதேவிச்சதுர்வேதிமங் கலத்தில் தொண்டை நாட்டுப் படுவூர் கோட்டத்துக் காவனூரைச் சேர்ந்த சேக்கிழான் அரையனான சங்கரநாராயணனான சோழமுத்தரையன் என்பவர் ஸ்ரீகயிலாயத்து ஆள்வார், ஸ்ரீகயிலாயத்துப் பரமசுவாமிகள் என அழைக்கப்பட்ட ஒரு சிவன் கோயிலைக் கட்டியுள்ளார் என்று கூறுகின்றன.

'அரையன் சங்கரநாராயணனான சோழமுத்தரையர்-இவ்வூர் இவர் எடுப்பித்த

ஸ்ரீகயிலாயத்து ஆள்வார்க்கு வடகுடி ஏரிக்கு நிலத்தில் பிவந்தம் செய்தபடி'

'சீகயிலாயத்து பரமஸ்வாமிகளுக்கு தொண்டை நாட்டு படூவூர் கோட்டத்துக் காவனூர் சேக்கிழான் அரையனான சங்கர நாராயணனான சோழ முத்தரையனேன்-நான் இறையிலி கொண்டுடைய நிலமாவது'

இவ்விரு கல்வெட்டுக்களும் இக்கோயிலைக் கட்டிய சோழமுத்தரையன் இக்கோயிலில் பூஜை வழிபாடுகளுக்கும் திருவமுதுப் படைக்கவும், அயன சங்கராந்திகளில் சிறப்பு அபிஷேகம், ஆராதனைகள் செய்யவும் திருப்பள்ளித்தாமம் தொடுப்பார்,திருமெழுக்கு இடுவார் உவச்சர்கள் உள்ளிட்ட பதியாளர்களுக்கும் புதுக்குப்புறம் மற்றும் விளக்குகள் வைக்கவும் என பல தேவைகளுக்கு நிலங்களை ஊர்ச்சபையிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொடுத்ததைக் கூறுகின்றன. தற்போது இக்கோயில் ஸ்ரீபுரந்தான் கிராமத்தில் உள்ள கைலாசநாதர் கோயில் என்ற பெயருடன் அமைந்துள்ளது. இக்கோயிலிலும் உத்தமசோழன் காலச் சிற்பங்கள் இல்லை. மாறாக மூன்றாம் குலோத்துங்க காலச் சிற்பங்கள் உள்ளன. மற்றும் பிற்காலச் சோழர் கல்வெட்டுக்கள் இங்கு உள்ளவற்றில் மிகவும் பழமையானது மூன்றாம் குலோத்துங்கனின் 6 ம் ஆண்டிலும் குலசேகர பாண்டியன்

காலத்திலும் எழுதப்பட்ட கல்வெட்டுக்கள் ஆகும். (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டத்துக் கல்வெட்டுக்கள், தொகுதி-1, 2015, பக்கம்.140-155) இதனால் இவ்வூரில் உத்தமசோழர் காலத்தில் கட்டப்பெற்ற கோயில் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் புதுப்பித்துக்கட்டப்பட்டுவிட்டது என்பதால் முற்காலச் சோழர் கலைக் கூறுகளை இன்று காணமுடியவில்லை.

**4. மேலப்பழுவூர் திருத்தோற்றமுடையார் கோயில் (பொ.ஆ.986)**

மேலப்பழுவூர் சுந்தரேஸ்வரர் கோயிலில் உள்ள மீனாட்சியம்மன் சன்னதியில் எழுதப்பட்டுள்ள உத்தமசோழனின் 16ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயில் பெயரைத் திருத்தோற்றமுடைய மகாதேவர் கோயில் என்று குறிப்பிடுவதுடன் இக்கோயிலுக்குப் பழுவேட்டரையர் கண்டன் மறவன் 2 நந்தாவிளக்குகள் வைக்க 30 கழஞ்சுப் பொன் கொடுத்ததைக் கூறுகிறது. (புதிய கல்வெட்டு) இது அம்மன் சன்னதி முதலாம் இராஜராஜனின் 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு பழுவேட்டரையன் கண்டன் மறவனேன் எடுப்பித்த ஸ்ரீகோயில் திருத்தோட்டமுடையார் கோயில் என்று இக்கோயிலை இம்மன்னர் கட்டியதைப் பற்றிக் கூறுகிறது.(தெ.இ.க..13, எண்.98) இதிலிருந்து உத்தமசோழன் காலத்தில் திருத்தோற்றமுடையார் கோயில் கட்டப்பட்டது என்பது புலனாகிறது.

இக்கோயிலும் அர்த்தமண்டபச் சுவர்களில் கூடுதலான தேவகோஷ்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் அச்சிற்பங்கள் தற்போது உதிரியாக கோயிலின் பல இடங்களில் உள்ளன. அவை பிச்சாடனர், ஊர்த்துவத்தாண்டவமூர்த்தி, உமாசகிதர் போன்றவனவாகும். கீழையூர் சிவன் கோயிலில் உள்ள கங்காவிஜர்சனமூர்த்தி, பிரம்மா ஆகிய சிற்பங்களும் இக்கோயிலைச் சேர்ந்தவை ஆகும்.

ஆனால் பிற்காலத்தில் இச்சிவன் கோயில் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் குலோத்துங்கசோழஈஸ்வரம் என்ற பெயரில் புதுப்பித்துக்கட்டப்பட்டுள்ளது. இதனை முதலாம் குலோத்துங்கன் காலக் கோயில் பகுதிகளில் காணலாம். சோழர் காலத்துக்குப் பின் இக்கோயில் மீண்டும் மாற்றிக்கட்டப்பட்டு அம்மன் கோயிலாக ஆக்கப்பட்டுள்ளது. இது இக்கோயிலில் திருப்பணிகள் செய்து கோயில் பெயரை சொக்கநாதர் கோயில் என்று மாற்றி உள்ள அரியலூர் பாளையக்காரர் அரசுபிலையிட்ட கிருஷ்ணப்பமழவராயர் காலத்தில்(பொ.ஆ.1620) நடைபெற்றது என்பது ஆய்வுகள் தெரிவிக்கின்றன.(இல.தியாகராஜன், மேலப்பழுவூர் அருள்மிகு மீனாட்சியம்மன் உடனுறை சுந்தரேஸ்வரர் திருக்கோயில் வரலாறு, 2014, பக்கம்.83-84)

### 5. பள்ளிப்படை ஸ்ரீ கண்டஈஸ்வரம்

*உத்தமசோழரின் காலத்தில் ஆட்சிப்புரிந்த பழுவேட்டரைய மன்னர் மறவன் கண்டன் என்பவருக்கு அவர் இறந்தபின் அவர் பெயரில் ஸ்ரீகண்டஈஸ்வரம் என்ற பள்ளிப்படைக் கோயிலை அவர் மகன் கண்டன் மறவன் என்பவர் கட்டியுள்ளார் என்பதை கீழப்பழுவூர் ஆலந்துறையார் கோயில் அலுவலக மண்டபத்தின் கிழக்குச் சுவர், மேலப்பழுவூர் சுந்தரேஸ்வரர் கோயில் சண்டிகேஸ்வரர் சன்னதி வடக்குச் சுவரில் உள்ள துண்டுக் கல்வெட்டுக்கள் மூலமும் மற்றும் மீனாட்சியம்மன் சன்னதி தெற்குச் சுவரில் உள்ள முதலாம் குலோத்துங்கன் 10ஆம் ஆண்டுக் கல்வெட்டு மூலமும் அறியமுடிகிறது.*

*இக்கோயில் மேலப்பழுவூரில் கட்டப்பட்டு இருந்தது என்பதை முதலாம் குலோத்துங்கன் காலத்திலும் நல்ல நிலையில் இருந்தது என்பதையும் முதலாம் குலோத்துங்கன் கல்வெட்டால் அறியமுடிகிறது. (இல.தியாகராஜன், மேலப்பழுவூர் அருள்மிகு மீனாட்சியம்மன் உடனுறை சுந்தரேஸ்வரர் திருக்கோயில் வரலாறு, 2014,பக்கம்.94-95)*

### 6. கண்டராதித்தம் சிவலோகத்து மகாதேவர் கோயில்(பொ.ஆ.982,983)

*அரியலூர் மாவட்டம் திருமழபாடி அருகில் கண்டராதித்தம் என்ற ஊர் உள்ளது. இவ்வூரை கண்டராதித்தச்சதுர்வேதிமங்கலம் என்ற பெயரில் பிரம்மதேய கிராமமாக கண்டராதித்தச்சோழர் அமைத்தார் என்று முதலாம் இராஜராஜனின் ஆனைமங்கலச் செப்பேடு கூறுகிறது. (பொ.ஆ.1006, இல.தியாகராஜன், சோழர் வரலாற்றில் கண்டராதித்தசோழரும் செம்பியன் மாதேவியும், 2016,பக்கம்.29)இவ்வூரில் இம்மன்னர் காலத்தில் கோயில்கள் எதுவும் கட்டப்பெற்றனவா என்பதை அறிய இம்மன்னர் காலக் கல்வெட்டுச் சான்றுகள் எதுவுமில்லை.*

*இருப்பினும் உத்தமசோழன் காலத்தில் இவ்வூரில் சிவலோகத்து மகாதேவன் கோயில் என்னும் சிவன் கோயிலை இம்மன்னரின் அதிகாரியான செம்பர் அருளன் உத்தம பிதியான உத்தமசோழ மூவேந்தவேளான் என்பவர் கட்டினார் என்பதை இம்மன்னரின் 13,14 ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் மூலம் அறியமுடிகிறது.*

*இக்கோயிலைக் கட்டிய செம்பன் அருளன் திருக்கருகாவூரில் உள்ள சிவன் கோயிலையும் கற்றளியாகக் கட்டினார் என்பதை உத்தமசோழரின் 13ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது. (தெ.இ.க.19, எண். 326)*

## கண்டராதித்த ஈஸ்வரம், கண்டராதித்த விண்ணகர்

சிவலோகத்து மகாதேவர் கோயிலைத் தவிர இவ்வூரில் கண்டராதித்தஈஸ்வரம் என்ற சிவன் கோயில் இருந்தது பற்றி முதலாம் இராஜராஜன் கல்வெட்டும் கண்டராதித்த விண்ணகர் என்ற பெருமாள் கோயில் பற்றி முதலாம் இராஜாதிராஜன் கல்வெட்டும் கூறுகின்றன. இவ்விருகோயில்களும் கண்டராதித்தன் பெயரில் இருக்கின்றன என்றாலும் அவையும் உத்தமசோழன் காலத்தில் கட்டப்பெற்றன என்றே கருதலாம். ஏனெனில் சிவலோகத்து மகாதேவர் கோயில் பொ.ஆ.984 இல் உத்தமசோழன் காலத்தில் கட்டப்பட்டது என்பது இதற்கு அடிப்படையாகும்.

கண்டராதித்த விண்ணகர் என்று அழைக்கப்பட்ட பெருமாள் கோயில் தற்போது லட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் என அழைக்கப்படுகிறது. இப்பெயர் இக்கோயில் கண்டராதித்தசோழர் பெயரில் உத்தமசோழன் காலத்தில் கட்டப்பட்டது எனக் கருதலாம். பிற்காலத் திருப்பணியால் இக்கோயில் தனது பழமை கலைக் கூறுகளை இழந்துவிட்டது. இக்கோயிலைப் பற்றித் திருமழபாடியில் உள்ள முதலாம் இராஜேந்திரனின் 23 ஆம் ஆண்டுக் கல்வெட்டு, 'ஸ்ரீகண்டராதி த்தச்சருப்பேதிமங்கலத்துத் திருமேற்றளிதேவர் நிலத்துக்குத் தெற்கும்' (30/1920) என்று கூறுகிறது. இதன்பின் முதலாம் இராஜாதிராஜனின் 33 ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயில் பெயரை கண்டராதித்த விண்ணகர் என்று முழுமையானப் பெயராகக் கூறுகிறது. இவ்வூர்ச் சபை ஸ்ரீகண்டராதித்த விண்ணகர் திருமுற்றத்தில் கூட்டம் கூடித் திருமழபாடிக் கோயிலில் மனுகுலதீப மூவேந்த வேளான் என்பவர் எழுந்தருளிவித்த மகாவிஷ்ணுக்கள், நம்பிராட்டியார், பிரம்மா, ஜெயங்கொண்டசோழவிடங்கர், நம்பிராட்டியார் ஆகிய இறைத்திருமேனிகளுக்குப் பூஜை வழிபாட்டு நிலம் வழங்க செய்த தீர்மானம் பற்றிக் கூறுகிறது. (க.ஆ.அ.எண்.78/1920)
கண்டராதித்த ஈஸ்வரத்து மகாதேவர் கோயில் என்னும் சிவன் கோயிலும் இவ்வூரில் இருந்துள்ளது. இது கண்டராதித்தன் பெயரில் உத்தமசோழன் அல்லது இராஜராஜன் காலத்தில் கட்டப்பட்ட கோயில் ஆகும். இக்கோயிலும் தற்போது அழிந்து மறைந்துவிட்டது. இக்கோயிலில் இருந்த கற்கள் தற்போது திருமழபாடிக் கோயில் அலுவலக மண்டப பீடப்பகுதியில் வைத்துக் கட்டப்பட்டுள்ளன. இவற்றில் உள்ள ஒரு துண்டுக் கல்வெட்டு முதலாம் இராஜராஜன் காலத்தில் எழுதப்பட்டுள்ளது. இது கண்டராதித்தச்சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீகண்டராதித்த ஈஸ்வரமுடைய மகாதேவர் கோயிலில் பிராமணர்கள் உண்ப

*தற்காக செம்பியன் மாதேவியார் நிலம் வழங்கிய செய்தியைத் தருகிறது. (இல.தியாகராஜன், சோழர் வரலாற்றில் கண்டரா தித்தசோழரும் செம்பியன் மாதேவியும், 2016, பக்கம்.31-32)*

## காமரசவல்லி சிவன் கோயில் (பொ.ஆ.978)

*காமரசவல்லி சிவன்கோயில் சுந்தரசோழரின் 5 ஆம் ஆட்சியாண்டில் (பொ.ஆ.962) இல் கட்டப்பட்டது என்பதை மேலே பார்த்தோம். இம்மன்னரின் கல்வெட்டுக்குப் பிறகு இக்கோயிலில் உத்தமசோழரின் 8 ஆம் ஆண்டில் எழுதப்பட்ட கல்வெட்டு இக்கோயில் அர்த்தமண்டபத் தெற்குச் சுவரில் உள்ளது. வளஞ்சியர் வணிகர் குழுவைச் சேர்ந்த ஒருவனுக்காக ஐய்யபொழில் ஐந்நூற்றுவர் இக்கோயிலில் விளக்கு வைத்த செய்தியைத் தருகிறது.(புதிய கல்வெட்டு). மேலே குறிப்பிடப்படி கோயிலில் உள்ள கருவறை, அர்த்தமண்டபச் சுவர்களில் புதிய மாடங்கள் அமைத்து சிற்பங்களை செம்பியன் மாதேவி கலைப்பாணியில் அமைத்துள்ளனர் என்பதைப் பார்த்தோம். இப்பதி உத்தமசோழன் காலத்தில் நடைபெற்றது என்று கருதலாம். ஏனெனில் இங்குள்ள புதிய சிற்பங்களின் முக அமைதி இம்மாவட்டத்தில் கோவிந்தப்புத்தூர், கீழப்பழூவூர், திருமழபாடி போன்ற கோயில்களில் உள்ள சிற்பங்களைப் போலவே உள்ளன என்பது இங்கு கருதத்தக்கது.*

*இவ்வாறு உத்தமசோழன் காலத்தில் கீழப்பழூவூர் ஆலந்துறையார் கோயில், கோவிந்தப்புத்தூர் சிவன் கோயில், ஸ்ரீபுரந்தான் கைலாசநாதர் கோயில், மேலப்பழூவூர் திருத்தோற்றமுடையார் கோயில், பள்ளிப்படை ஸ்ரீகண்டஈஸ்வரம், கண்டராதித்தம் சிவேலோகத்து மகாதேவர் கோயில் மற்றும் இவ்வூரில் இவர் தந்தை பெயரில் அமைந்த கண்டராதித்த ஈஸ்வரம், கண்டராதித்த விண்ணகர்ஆகிய கோயில்கள் கட்டப்பெற்றுள்ளன. காமரசவல்லி சிவன் கோயிலில் புதிய மாடங்கள் அமைக்கப்பட்டு அங்கு புதிய சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. பள்ளிப்படை ஸ்ரீகண்டஈஸ்வரம் கோயில், கண்டராதித்த ஈஸ்வரம், கண்டராதித்த விண்ணகர் ஆகிய கோயில்கள் முற்றிலும் அழிந்துவிட்டன. அவற்றில் இருந்த கல்வெட்டுக்களும் ஒரு சில சிற்பங்களும் இருக்கின்றன.*

## தொகுப்புரை

*இவ்வாறு முற்காலச் சோழர் காலம் ஆன முதலாம் ஆதித்தன் காலம் முதல் உத்தமசோழன் காலம் வரை 16 கோயில்கள் பின்வரும் ஊர்களில் பின்வரும் எண்ணிக்கையில் கட்டப்பட்டதை அறியலாம்.*

## I. முதலாம் ஆதித்தன் காலம்

1. அவனி கந்தர்வபுரத்து (கீழையூர்) அவனி கந்தர்வ ஈஸ்வரம் -பொ.ஆ.884
2. பழுவூர் (மேலப்பழுவூர்) பகைவிடை ஈஸ்வரம் பொ.ஆ.884
3. திருமழபாடி மகாதேவர் கோயில் -பொ.ஆ.894

## II. முதலாம் பராந்தகன் காலம்

1. கீழப்பழுவூர்(சிறுபழுவூர்) மறவனீஸ்வரம் -பொ.ஆ.911
2. கீழப்பழுவூர்(சிறுபழுவூர்) ஆலந்துறை மகாதேவர் கோயில் -பொ.ஆ.911-917
3. கீழப்பழுவூர்(சிறுபழுவூர்) வீர்சோழவிண்ணகர் -பொ.ஆ.911)
4. கோவிந்தப்புத்தூர் விஜயமங்கலத்து மகாதேவர் கோயில் -பொ.ஆ.929

## III. சுந்தரசோழர் காலம்

1. காமரவல்லிச் சதுர்வேதிமங்கலத்து திருநல்லூர் மகாதேவர் கோயில் -பொ.ஆ.962

## IV. உத்தமசோழன் காலம்

1. காமரசவல்லி சிவன் கோயில் பொ.ஆ.978
2. கீழப்பழுவூர்(சிறுபழுவூர்) திருவாலந்துறை மகாதேவர் கோயில்

   திருக்கற்றளி செய்வித்த -பொ.ஆ.979,985
3. கோவிந்தப்புத்தூர் விஜயமங்கலத்து மகாதேவர் கோயில்

   ஸ்ரீவிமானம் கல்லால் எழுந்தருளிவித்தல், திருக்கற்றளி

   செய்வித்தல் -பொ.ஆ.980
4. ஸ்ரீபுரந்தான் கைலாசநாதர் கோயில் -பொ.ஆ.982,983
5. கண்டராதித்தம் சிவலோகத்து மகாதேவர் கோயில் பொ.ஆ.983,984)

6. மேலப்பழூர் திருத்தோற்றமுடையார் கோயில் பொ.ஆ.986

7. பள்ளிப்படை ஸ்ரீகண்டஈஸ்வரம்

8. கண்டராதித்தஈஸ்வரம்,கண்டராதித்த விண்ணகர்

## இடைக்காலச் சோழர் காலக் கோயில்கள்

### முதலாம் இராஜராஜன் காலம்

**1.கோவிந்தப்புத்தூர் நடுவில் ஸ்ரீகோயில் வினையாபரண விண்ணகர், வானவன் மாதேவி விண்ணகர் பொ.ஆ.988**

கோவிந்தப்புத்தூர் சிவன் கோயிலில் எழுதப்பட்டுள்ள முதலாம் இராஜராஜனின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு பெரிய ஸ்ரீவானவன்மாதேவிச்சதுர்வேதிமங்கலத்து ஊர் நடுவில் இருந்த வினையாபரண விண்ணகர எம்பெருமான் கோயில் பற்றிக் கூறுகிறது. (தெ.இ.க..13, எண். 76) ஆனால் தற்போது இக்கோயில் எங்குள்ளது என அறியமுடியவில்லை.
ஸ்ரீபுரந்தான் ஊரில் உள்ள பேருந்து நிலையத்தின் அருகில் ஒரு பெரிய பெருமாள் கோயில் உள்ளது. இக்கோயில் சுவர்களில் பாண்டியர் காலத் துண்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. இதில் ஒரு கல்வெட்டு இக்கோயில் பெயரை வானவன் மாதேவி விண்ணகர் என்று கூறுகிறது. ( இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், தொகுதி-1, 2015, பக்கம்.154-155) மேலும் இவ்வூருக்கு நடுவில் 12 அடி உயரமுடைய மிகப்பெரிய மகாவிஷ்ணு சிற்பம் ஸ்ரீதேவி பூதேவி சிற்பங்களுடன் நிற்கிறது.

இவ்வூர் கைலாசநாதர் கோயில் வளாகத்தில் 6 அடி உயரமுடைய அழகிய மகாவிஷ்ணு சிற்பம் இவ்வூர் கொல்லைப் பகுதியில் இருந்து கொண்டு வந்து வைக்கப்பட்டுள்ளது. இவ்விரு சிற்பத் தொகுதிகளில் ஏதேனும் ஒன்று இக்கல்வெட்டுக் குறிப்பிடும் வினையாபரண விண்ணகர் கோயில் மூலவராக இருக்கலாம். கைலாசநாதர் கோயிலில் உள்ள சிற்பம் முதலாம் இராஜராஜன் காலச் சிற்பக் கலைப்பாணியில் முக அழகைக் கொண்டுள்ளது. என இச்சிற்பம் இக்கல்வெட்டுக் குறிப்பிடும் பெருமாள் கோயிலில் மூலவர் எனலாம்.

**2. செந்துறை ஈஸ்வரமுடைய மகாதேவர் கோயில்-பொ.ஆ.999**

செந்துறையில் சிவத்தாண்டீஸ்வரர் கோயில் என்ற சிவன் கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானது

முதலாம் இராஜராஜனின் 14ஆம் ஆண்டில் எழுதப்பட்ட கல்வெட்டாகும். இது துண்டநாட்டுத் தேவதானப் பிரம்மதேயம் செந்துறை ஈஸ்வரமுடையமகாதேவர் கோயிலில் வைகாசி விசாகம் திருவிழா செய்வதற்கு நாச்சோலைச் சபையார் நிலம் கொடுத்த செய்தியைத் தருகிறது. ( இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், தொகுதி-1, 2015, பக்கம்.169–170) இக்கோயில் கட்டப்பெற்ற நாள் முதல் இன்றுவரை மாற்றமின்றி உள்ளது. இதனால் இக்கோயில் முதலாம் இராஜராஜன் காலக் கட்டடக் கலைப்பாணிக்கு ஒரு சான்று.. ஆனால் கோயில் கருவறை அர்த்தமண்டபச் சுவர்களில் சோழர் காலச் சிற்பங்கள் எதுவுமில்லை.

**4.பெரியமறைச் சிவன்கோயில் கல்வெட்டு–பொ.ஆ.1012**

அரியலூர் மாவட்டம் திருமானூரிலிருந்து ஏலாக்குறிச்சிச் செல்லும் பாதையில் பெரியமறை என்ற சிற்றூர் உள்ளது. இவ்வூர் மிறைக் கூற்றம் என்ற நாட்டுப்பிரிவுக்குத் தலைநகரமாக இருந்த ஊராகும். இவ்வூர்ச் சிவன் கோயிலுக்குச் செல்லும் வழியில் காளிக் கோயில், உஜ்ஜயினி மாகாளிக் கோயில் என அழைக்கப்படும் கோயில் உள்ளது. இக்கோயில் வாயில் நிலைக்காலில் முதலாம் இராஜராஜனின் 27 ஆம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. இது ராஜேந்திரசிங்கவளநாட்டு விறைக் கூற்றத்து விறையில் நகரத்தார் திரதி என்ற ஊரில் நிரை எறிந்து கொண்டு வந்த ஆடுகளால் உஞ்சேனை மாகாளமுடைய பட்டாரகிக்கும் உஞ்சேனைக் கூத்தர்க்கும் இரண்டு விளக்குகள் வைத்தது பற்றிக் கூறுகிறது. இதிலிருந்து இவ்வூர் வணிகநகரமாக விளங்கியது என அறியலாம். மேலும் கல்வெட்டு எழுதப்பட்டுள்ள காளிக் கோயில் இம்மன்னர் காலத்தில் உஞ்சேனை மாகாளமுடைய பட்டாரகி என அழைக்கப்பட்டது எனவும் அறிகிறோம். இவ்வூரில் சிவன் கோயிலும் இருந்துள்ளது என்பதால் அக்கோயிலில் இருந்த உஞ்சேனைக் கூத்தர்(நடராஜர்) திருமேனிப் பற்றியும் இக்கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.( இல.தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், தொகுதி-1, 2015, பக்கம்.250-251)

இக்கல்வெட்டிலிருந்து இவ்வூரில் முதலாம் இராஜராஜன் காலத்தில் சிவன் கோயில் இருந்தது என்பது புலனாகிறது. இம்மன்னர் காலத்திய சப்த மாதர்கள் சிற்ப வரிசை இக்கோயில் குளக்கரையில் உள்ளது. (அச்சிற்பங்கள் தற்போது கங்கைகொண்டசோழபுரம் அருங்காட்சியகத்திற்கு கொண்டு சென்று வைக்கப்பட்டுள்ளது.) மேலும் இவ்வூர் சிவன் கோயிலில்

உதிரியாக உள்ள அழகிய துர்க்கைச் சிற்பம் முதலாம் இராஜராஜன் காலத்தியதாகும். ஆனால் இராஜராஜன் காலத்துச் சிவன் கோயில் தற்போது இல்லை. அது மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் திருப்பணி செய்து புதுப்பித்துக் கட்டப்பட்டுள்ளது.

**4.ஸ்ரீ புரந்தான் ஆதித்தஈஸ்வரம் -பொ.ஆ.1014**

கோவிந்தப்புத்தூர் சிவன் கோயிலில் எழுதப்பட்டுள்ள முதலாம் இராஜராஜனின் 29ஆம் ஆண்டுக் கல்வெட்டு வடகரை இராஜேந்திரசிங்கவளநாட்டுப் பிரம்மதேயம் ஸ்ரீபராந்தகச்சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறி மகாசபையார் இவ்வூர் ஸ்ரீபராந்தகப்பேரேரிக் கரையிலே கூட்டம் கூடி இவ்வூருக்கு மூலதெய்வமாக உள்ள ஸ்ரீ ஆதித்தஈஸ்வரமுடையார்க்குப் பூஜை வழிபாடுகளுக்கு நிலம் வழங்கிய தகவலைத் தருகிறது. ஆனால் தற்போது இக்கோயில் அழிந்துவிட்டது. அதன் சிற்ப எச்சங்களையும் கண்டறிய முடியவில்லை. ( இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், தொகுதி-2, 2016, பக்கம்.269, புதிய கல்வெட்டு, ஆவணம் இதழ்-17, ஜுலை 2006, பக்கம்.27-28)

**5.திருமழபாடிக் கோயில் கருவறைக்கு முன் உள்ள முகமண்டபம் செம்பியன் மாதேவி கலைப்பாணியில் அமைக்கப்படுதல் -பொ.ஆ.991**

திருமழபாடியில் உள்ள சிவன் கோயில் கருவறை-அர்த்தமண்டபத்துக்கு முன் நீள்சதுரவடிவில் ஒரு முகமண்டபம் உள்ளது. இதில் பக்கத்திற்கு 4 தேவகோஷ்டங்கள் வீதம் தென்பக்கம், வடக்குப் பக்கம் ஆகியவற்றில் 8 தேவகோஷ்டங்கள் உள்ளன. கிழக்குப் பக்கம் வாயிலின் இருபுறமும் பக்கத்திற்கு 2 வீதம் என 4 தேவகோஷ்டங்கள் உள்ளன. அதேபோல மேற்கு பக்கம் அர்த்தமண்டபத்தைநோக்கியவாறு பக்கத்திற்கு 2 வீதம் என நான்கு தேவகோஷ்டங்கள் இருந்திருக்க வேண்டும். ஆனால் தற்போது 2 தேவகோஷ்டங்கள் மட்டுமே உள்ளன. 2 தேவகோஷ்டங்களை அகற்றிவிட்டு இம்முகமண்டபத்தின் உள்பகுதியை பக்தர்கள் வந்து பின்று மூலவரை தரிசிக்க வசதியாக அகலமாக ஆக்கியுள்ளனர் எனலாம். இவ்வாறு 16 தேவகோஷ்டங்கள் கொண்டதாக இந்த முகமண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. இத்தேவகோஷ்டங்களில் தற்போது கா லாரிமூர்த்தி(மழுவாடிச்சிற்பம்), விநாயகர், அகத்தியர், அரிகரர்,கல்யாண சுந்தரர், அர்த்தநாரி, கஜசம்காரமூர்த்தி, கங்காஜடாதரர்(நந்திகேஸ்வரர் கல்யாண சிற்பம்) ஆகிய சிற்பங்கள் உள்ளன.

மேற்கு தேவகோஷ்டத்தில் வாயில் இடப்பக்கம் உள்ள மாடத்தில் உமாசகிதர் மூர்த்தி சிற்பத்தின் இடுப்புக்கு கீழ்ப்பகுதி மட்டும் உள்ளது. மீதி உடைந்துவிட்டது. இச்சிற்பத்தின் பீடத்தில் ஸ்வஸ்திஸ்ரீ இத்தேவரை எழுந்தருளிவித்தாந் கிளியூர் நாட்டு கிளியூருடையாந் சந்திரசேகரந் பொற்காரியாந கநகராஜந் என்ற வாசகம் கல்வெட்டாக எழுதப்பட்டுள்ளது. இதன் கீழ் அஞ்சலி முத்திரையுடன் சிறிய அழகிய ஆண் சிற்பம் உள்ளது. இது இச்சிற்பத்தை எழுந்தருளிவித்த கனகராஜன் உருவமாகும் மற்றொரு துண்டுக் கல்வெட்டு கநகராயந் எழுந்தருளிவித்த உமாமகேஸ்வரன் பற்றிக் கூறுகிறது.(புதிய கல்வெட்டுக்கள்)

இவ்வாறு பல சிற்பங்கள் அமைக்கப்படும் கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம் ஆகியவை கொண்ட கலைப்பாணியைச் செம்பியன் மாதேவியார் அறிமுகம் செய்தார் என்பதை அவர் எழுப்பிய பல கோயில்களிலும் இம்மாவட்டத்தில் உள்ள காமரசவல்லி, கோவிந்தப்புத்தூர் கோயில்களிலும் காணமுடிகிறது. அதேபோன்று திருமழபாடியிலும் இம்முகமண்டபம் இவரால் அமைக்கப்பட்டது என்று தெரிகிறது. இக்கோயிலில் இவ்வம்மையார் காலத்தில் எழுதப்பட்ட ஒரு துண்டுக் கல்வெட்டு உள்ளது. அது இவ்வம்மையார் பெயரைப் பிராந்தகன் மாதேவடிகள் என்றும் இவர் 30 கழஞ்சுப் பொன் கொடுத்து 4மா நிலம் விலைக்கு வாங்கி அர்த்தஜாமபூஜைக்குக் கொடுத்ததைக் கூறுகிறது. (தெ.இ.க.. 19,எண்.167) இந்த அம்மையாரின் கல்வெட்டு இக்கோயி லில் இருப்பதால் இந்த முகமண்டபம் இவரால் அமைக்க ப்பட்டது என்பது தேற்றம். இருப்பினும் இந்த முகமண்டபத்து தெற்குச் சுவரில் முதலாம் இராஜராஜனின் 4 கல்வெட்டுக்கள் உள்ளன.(தெ.இ.க..13,எண்.145, புதிய கல்வெட்டுக்கள்) இதனால் இம்மண்டபம் செம்பியன் மாதேவியால் முதலாம் இராஜராஜன் காலத்தில் கட்டப்பெற்றது எனக் கொள்ளலாம்.

**6.திருமழபாடிக் கோயில் பிரித்துக் கட்டப்பட உத்தரவிடப்படுதல் பொ.ஆ.1013**

திருமழபாடியில் முதலாம் இராஜராஜனின் 28 ஆம் ஆண்டில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டு திருமழுவாடியுடையார் ஸ்ரீவிமானம் வாங்கி திருக்கற்றளி யெடுக்கவென்று உடையார் ஸ்ரீராஜராஜதேவர் அருளிச் செய திருக்கற்றளி எடுக்க ஸ்ரீவிமானம் வாங்கி இ ஸ்ரீவிமானத்துள்ள கல்வெட்டுப்படி பொத்தகத்தில் சோர்ப்பிக்க வென்று இம்மன்னர் பிறப்பித்த ஆணைப்பற்றிக் கூறுகிறது. (தெ.இ.க..5, எண்.652).இதிலிருந்து

முதலாம் ஆதித்தசோழன் காலத்தில் கட்டப் பெற்ற இச்சிவன்கோயில் முதலாம் இராஜராஜன் காலத்தில் புதுப்பித்து திருப்பணிசெய்யும் வேலை தொடங்கப்பட்ட நிலையில் இருந்தது என்பது அறியமுடிகிறது.

இவ்வாறு முதலாம் இராஜராஜன் காலத்தில் செந்துறைக் கோயில் தவிர தனியாக முழுமையாக அமைக்கப்பட்ட கோயில் எதையும் இம்மாவட்டத்தில் தற்போது காணமுடியவில்லை.

## முதலாம் இராஜேந்திரசோழர் காலம்

### 1.சென்னிவனம் –திருச்சென்னிவலமுடைய மகாதேவர் கோயில் – பொ.ஆ.1015

அரியலூர் அருகே சென்னிவனம் என்ற சிற்றூர் உள்ளது. திருமழபாடிச் சிவன் கோயிலில் முதலாம் பராந்தகசோழரின் காலத்தில் எழுதப்பட்ட 18ஆம் ஆண்டுக் கல்வெட்டு(பொ.ஆ.925) மூலம் காரைக்காட்டுச் சென்னிவலக் கூற்றம் என்ற நாட்டுப்பிரிவின் தலைநகரமாக இவ்வூர் விளங்கியதை அறியமுடிகிறது. (தெ.இ.க..5, எண். 657) இக்கூற்றத்து நெடுவாயில் ஊரைச்சேர்ந்த கொல்லன் குமரன் சீலனான வீர்நாரணப் பெருங்கொல்லன் என்பவர் திருமழபாடி இறைவனுக்குப் பகல் விளக்கு எரிக்க 45 ஆடுகள் கொடுத்துள்ளார். இதிலிருந்து முற்காலச் சோழர் காலத்திலிருந்தே இவ்வூர் வரலாற்று முக்கியத்துவமிக்க ஊராக இருந்தது என்பது புலனாகிறது.

சென்னிவனம் தீர்த்தபுரீஸ்வரர் கோயிலில் பல கல்வெட்டுக்கள் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் மிகவும் பழமையானது இக்கோயில் அர்த்தமண்டப மேற்கு-தெற்குச் சுவர் பட்டிகையில் எழுதப்பட்டுள்ள முதலாம் இராஜேந்திரசோழரின் 3 ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். இது இவ்வூர் மற்றும் கோயில் பெயர்களை, 'வடகரை ராஜேந்த்ரசிங்கவளநாட்டு மேல்காரைக்காட்டு சென்னிவலக் கூற்றத்து நெடுவாயிலான வீரசோழநல்லூர் ஊரோம் இவ்வூர் திருச்சென்னிவலமுடையமாதேவர்க்கு' என்றும் இக்கோயிலுக்கு இவ்வூர் பிராமணன் பாரதாயன் மாதேவன் என்பவர் விளக்கு வைக்க நிலம் வழங்கியதையும் கூறுகிறது.( இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், தொகுதி-1, 2015, பக்கம். 189) இதிலிருந்து இச்சிவன் கோயில் இம்மன்னரின் ஆட்சியின் போது கட்டப்பெற்ற பழமையுடையது என்பது புலனாகிறது. இப்பகுதியில் கிடைக்கும் வெள்ளைச் சுண்ணாம்புக்

கல்லால் இக்கோயில் கட்டப்பட்டுள்ளது. இக்கோயிலில் உள்ள தேவகோஷ்டத்துச் சிற்பங்களில் சண்டிகேஸ்வரர் தவிர பிற சிற்பங்கள் மிகவும் பிற்காலத்தவை ஆகும். இங்குள்ள செப்புத் திருமேனிகளில் திரிபுராந்தகர் திருமேனி சோழர் காலத்தது ஆகும். கருவறை, அர்த்தமண்டபம், முன்மண்டபம் ஆகியவை சோழர் கால கட்டடக் கலைப்பாணியில் அமைந்துள்ளன.

**2.காமரசவல்லி இராஜேந்திரசோளிஸ்வரம், குந்தவைவிண்ணகர் பொ.ஆ.1020**

இவ்வூரில் ஏற்கனவே சுந்தரசோழர் ஆட்சியின் போது கட்டப்பெற்ற திருநல்லூர் மகாதேவர் என்னும் கோயிலைப் பற்றி மேலே கண்டோம். இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபச் சுவர்ப் பகுதியில் உத்தமசோழன் காலத்தில் புதிய மாடங்கள் அமைக்கப்பெற்று சிற்பங்கள் வைக்கப்பட்டதையும் பார்த்தோம். இக்கோயில் தவிர முதலாம் இராஜேந்திரனின் 8ஆம் ஆண்டுக் கல்வெட்டில் ஸ்ரீகயிலாசமுடைய மகாதேவர் கோயில், திருமேற்த்தளியான ஸ்ரீகுந்தவை விண்ணகரதேவர் என்னும் கோயில் பெயர்களும் முதலாம் குலோத்துங்கனின் 26 ஆம் ஆண்டுக் கல்வெட்டில் ஸ்ரீகாமரசவல்லிச் சருப்பேதிமங்கலத்து ஸ்ரீகயிலாசமான ஸ்ரீராஜேந்திரசோழ ஈஸ்வரமுடையார் கோயில் பற்றியும் குறிப்பிடப்படுகின்றன.(தெ.இ.க..34, எண்.72,73)

இருப்பினும் தற்போது சிவன் கோயிலின் சுவடுகளைக் காணமுடியவில்லை. ஆனால் பெருமாள் கோயில் ஊருக்கு மேற்கில் அமைந்துள்ளது. இக்கோயிலும் தனது பழமைக் கூறுகளை இழந்து தற்போது எளிய முறையில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் பெயர்களிலிருந்து இவை முதலாம் இராஜேந்திரன் காலத்தில் கட்டப்பெற்ற கோயில்கள் என்பது புலனாகிறது. குந்தவை விண்ணகர் என்ற பெருமாள் கோயில் இம்மன்னரின் சகோதரியின் பெயரில் அமைந்த கோயில் எனலாம்.

**3.திருமழபாடிச் சிவன் கோயில் முதல் திருச்சுற்று மாளிகை மற்றும் மூலவர் கோயில் பொ.ஆ.1019,1026**

ஏற்கனவே முதலாம் ஆதித்தச் சோழன் காலத்தில் கட்டப்பெற்ற திருமழபாடிச் சிவன் கோயில் ஸ்ரீவிமானத்தைப் பிரித்துப் புதுப்பித்துக் கட்டும்படி முதலாம் இராஜராஜன் ஆணையைப் பிறப்பித்தார் என்பதை மேலே கண்டோம். அவ்வாறு புதிதாக கோயில் அமைக்கும் பணி முதலாம் இராஜேந்திரனின் 14ஆம் ஆண்டு70ஆம் நாள் முடிவடைந்தது

என்பதையும் படியெடுத்து வைக்கப்பட்டிருந்த பழைய கல்வெட்டுக்கள் ஆகியவை புதிய விமானத்தில் கல்வெட்டாக எழுதப்பட்டது. (தெ.இ.க..5, எண்.651)

இக்கல்வெட்டிலிருந்து தற்போதுள்ள மூலவர் விமானம், கருவறை, அர்த்த மண்டபம் ஆகியவை முதலாம் இராஜேந்திரன் காலத்தில் கட்டப்பெற்று இவருக்கு முன் எழுதப்பட்டிருந்த முதலாம் ஆதித்தன், முதலாம் பராந்தகன், உத்தமசோழன், முதலாம் இராஜராஜன் ஆகியோரின் கல்வெட்டுக்கள் இராஜேந்திரன் காலத்தில் மீண்டும் எழுதப்பட்டுள்ளன என அறிகிறோம்.

இருப்பினும் இக்கோயில் முதல் திருச்சுற்று மாளிகையில் எழுதப்பட்டுள்ள ஏராளமான கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானது முதலாம் இராஜேந்திரனின் 7-13ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் ஆகும். (64,66,63,65,62,67/1920) இதிலிருந்து மூலவர் விமானத்தைப் பிரித்துக் கட்டும் பணி நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில் இந்த முதல் திருச்சுற்று மாளிகை கட்டடப்பகுதி பொ.ஆ.1019 இல் கட்டி முடிக்கப்பட்டு விட்டது என்பதை அறிகிறோம். 2 அடுக்குகள் கொண்ட மிக அழகான இந்த திருச்சுற்று மாளிகை முதலாம் இராஜேந்திரன் காலத்துக் கட்டடம் ஆகும்.

**4.கங்கைகொண்டசோழீஸ்வரர் கோயில் பொ.ஆ.1023-1036**

முதலாம் இராஜேந்திரசோழர் கங்கைவரை படையெடுத்துச் சென்று கங்கைநீரைக் கொண்டு வந்து தான் அமைத்த புதிய நகரம், புதிய கோயில், புதிய ஏரி(சோழகங்கம்) ஆகியவற்றைப் புனிதநீராட்டினான். இவ்வெற்றி இவருடைய 11ஆம் ஆட்சியாண்டில்(பொஆ.1023) நிறைவு பெற்றது. கங்கைகொண்டசோழபுரம் பற்றிய முதல் குறிப்பு இவருடைய 15 ஆம் ஆட்சியாண்டில்(பொஆ.1027) குறிப்பிடப்படுகிறது.(தெ.இ.க.. 22,எண்.20) பொஆ.1036இல் இம்மன்னர் வெளியிட்டுள்ள எசாலம் செப்பேடு சிவனுக்கு இவர் கங்கைகொண்டசோழபவனம் என்னும் கோயிலைக் கட்டியதாகக் கூறுகிறது. *(R.Nagaswamy,Archaeological finds in South India, Esalam Bronzes and Copper Plates Bulletin DE 1, Ecole Francaise, D'Extreme-Orient, TomeLXXVI,Paris, 1987,pp-1-51)*

இச்சான்றுகளிலிருந்து இக்கோயில் கங்கைவெற்றி முடிவுற்ற ஆண்டிலிருந்து பொ.ஆ.1036 வரை உள்ள இடைப்பட்ட காலத்தில் கட்டி முடிக்கப்பட்டது என்பது புலனாகிறது. இக்கோயிலில் இம்மன்னரின் காலத்தில் எழுதப்பட்ட கல்வெட்டு

எதுவுமில்லை. இருப்பினும் இவருடைய மூன்றாவது மகன் வீரராஜேந்திரனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டுதான்(பொ.ஆ.1068) இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் மிகவும் பழமையானதாகும். இக்கல்வெட்டு இக்கோயிலுக்கு முதலாம் இராஜேந்திரன் தனது 23வது ஆட்சியாண்டில்(பொ.ஆ.1035) வழங்கிய ஊர்களைப் பற்றிக் கூறுகிறது.

'இத்தேவர்க்குத் தேவதானமாய் வருகிறபடி பூர்வதேசமுங் கங்கையுங் கடாரமுங் கொண்டருளிந ஐய்யர்க்கு யாண்டு இருபத்து மூன்றாவது முதல் தவிர்ந்து'(தெ.இ.க..4,எண்.529) இச்செய்தியும் எசாலம் செப்பேடு செய்தியும் ஒத்துப்போவதால் இக்கோயில் பொ.ஆ.1035-1036இல் கட்டி முடிக்கப்பட்டுவிட்டது என்பதை உணர்த்துகின்றன.

இக்கோயிலின் கட்டடக்கலை மற்றும் இங்குள்ள சிற்பங்களின் அழகு பற்றியும் பல அறிஞர்கள் விரிவாக எழுதியுள்ளனர் என்பதால் அவை இங்கு விவரிக்கப்படவில்லை.

**5.விக்கிரமங்கலம் (விக்கிரமசோழபுரம்) இராஜேந்திரசோழஈஸ்வரம்(பொ.ஆ.1012-1044)**

உடையார் பாளையம் வட்டத்தில் விக்கிரமங்கலம் என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூர்ப் பெயர் விக்கிரமசோழபுரம் எனவும் இக்கோயில் ராஜேந்திரசோழிஸ்வரர் என அழைக்கப்பட்டதையும் அறிகிறோம். இவ்வூரிலிருந்த அரண்மனையிலிருந்து சோழமன்னர்கள் வெளியிட்ட ஆணைகள் பற்றி கீழப்பழூவூர் உள்ளிட்ட பிற ஊர்களில் உள்ள கல்வெட்டுக்களிலிருந்து அறியமுடிகிறது. விக்கிரமசோழன் என்பது முதலாம் இராஜேந்திரசோழரின் பட்டப்பெயர்களில் ஒன்று என்பதால் இவ்வூர் ஒரு வணிகநகரமாக அரசர்கள் வந்து தங்குமிடமாக இம்மன்னர் காலத்தில் உருவாக்கப்பட்டது என அறிகிறோம். இவ்வூருக்கு மிக அருகில் உள்ள நாகமங்கலம் என்ற கிராமம் இம்மன்னரின் மனைவியின் பெயரால் வானவன்மா தேவிச்சதுர்வேதி மங்கலம் என அழைக்கப்பட்டுள்ளது. அதேபோல இவ்வூருக்கு அருகில் செட்டித்திருக்கோணம்-பெரியத்திருக்கோணம் ஆகிய ஊர்கள் இம்மன்னரின் பெயரால் மதுராந்தகபுரம் என அழைக்கப்பட்டது. இச்சான்றுகளிலிருந்து விக்கிரமங்கலத்தில் உள்ள சிவன் கோயில் ராஜேந்திரன் காலத்தில் கட்டப்பெற்றது என்பது புலனாகிறது. இருப்பினும் இம்மன்னர் காலக் கோயில் பிற்காலத்தில் திருப்பணி செய்யப்பட்டுள்ளதால் இதன் பழமைக் கூறுகள் மற்றும் சிற்பங்கள் அழிந்துவிட்டன. இங்குள்ள தட்சணாமூர்த்தி,

விநாயகர் சிற்பங்கள் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தவை எனலாம். இங்குள்ள அழகிய பல செப்புத்திருமேனிகள் பிற்காலச் சோழர் காலத்தில் வார்க்கப்பட்டவை ஆகும். (இல. தியாகராஜன், விக்கிரமங்கலம் அருள்மிகு பிறையதியம்மை உடனுறை சோளிஸ்வரர் திருக்கோயில் தலவரலாறு, 2013)

## முதலாம் இராஜாதிராஜன், இரண்டாம் இராஜேந்திரன், அதிராஜேந்திரன் காலம்

### 1.செட்டித்திருக்கோணம், பெரியத்திருக்கோணம் இரணசிங்கஈஸ்வரம், மதுராந்தகஈஸ்வரம், இராஜேந்திரசோழவிண்ணகர்

அரியலூரிலிருந்து நாகமங்கலம்-விக்கிரமங்கலம்-ஸ்ரீபுரந்தான் செல்லும் சாலையில் நாகமங்கலத்துக்கு மேற்கில் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள சிற்றூர்கள் செட்டித்திருக்கோணம், பெரியத்திருக்கோணம் ஆகும். செட்டித்திருக்கோணத்தில் இரணேஸ்வரர் என்ற சிவன் கோயில் உள்ளது. இக்கோயிலில் உள்ள முதலாம் இராஜாதிராஜனின் 35ஆம் ஆண்டுக் கல்வெட்டு இவ்வூர்ப் பெயரைத் திருக்குன்றம் எனவும் கோயில் பெயரை இரணசிங்கஈஸ்வரமுடைய மகாதேவர் எனவும் கூறுகின்றது. இதே மன்னரின் 31ஆம் ஆண்டில் எழுதப்பட்ட கல்வெட்டு மதுராந்தகபுரத்து நகரத்தார்கள் இவ்வூர் மதுராந்தகஈஸ்வரமுடைய மகாதேவர் கோயில் திருமுற்றத்தில் கூட்டம் கூடி இவ்வூரில் உள்ள பிலங்களைத் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டு அனுபவிப்பது பற்றியும் இவ்வூரில் உள்ள மதுராந்தகஈஸ்வரமுடைய மகாதேவர், இராஜேந்திரசோழ விண்ணகர் அழகிய மணவாளர், இரணசிங்கஈஸ்வரமுடைய மகாதேவர் கோயில் ஆகிய மூன்று கோயில்களுக்கும் பூஜை வழிபாட்டுக்கு நிலங்கள் ஒதுக்கியது பற்றியும் விவரிக்கிறது. பெரியத்திருக்கோணத்தில் உள்ள மத்தியார்ச்சுனேஸ்வரர் கோயிலில் உள்ள இரண்டாம் இராஜேந்திரன் கல்வெட்டு(பொ.ஆ.1055) இக்கோயில் பெயரை மதுராந்தக ஈஸ்வரம் என்றும் ஊர்ப் பெயரை நகரம் மதுராந்தகபுரம் என்றும் குறிப்பிடுகின்றது. அதேபோல இவ்வூரில் உள்ள சௌந்தரப்பெருமாள் கோயிலில் உள்ள அதிராஜேந்திரனின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு(பொ.ஆ.1070) இக்கோயில் பெயரே திருமேற்கோயிலான ஸ்ரீராஜேந்திரசோழவிண்ணகர் அழகிய மணவாளர் என்று கூறுகிறது.

இக்கல்வெட்டுக்களிலிருந்து திருக்குன்றம் என அழைக்கப்பட்ட இவ்வூர் முதலாம் இராஜேந்திரன் காலத்தில் மதுராந்தகபுரம் என்னும் பெயரில் பெரிய வணிகநகரமாக உருவாக்கப்பட்டது

எனவும் இங்கு இரணசிங்க ஈஸ்வரம், மதுராந்தகஈஸ்வரம், இராஜேந்திரசோழவிண்ணகர் என்ற மூன்று கோயில்கள் கட்டப்பட்டது எனவும் அறிகிறோம்.

இக்கோயில்களில் இரணசிங்கஈஸ்வரம், மதுராந்தகஈஸ்வரம் ஆகியவை முதலாம் இராஜேந்திரனின் இரணசிங்கன், மதுராந்தகன் என்னும் பெயர்களில் கட்டப்பட்டவை என்பதும் தெளிவாகிறது. இரணேஸ்வரர் கோயிலில் அதிஷ்டானம் மட்டும் கருங்கல்லாலும் மேற்பகுதிகள் வெள்ளைச் சுண்ணாம்புக் கல்லாலும் மீதி இரண்டு கோயில்கள் முழுவதும் வெள்ளைச் சுண்ணாம்புக் கல்லாலும் கட்டப்பட்டுள்ளது. இங்குள்ள விநாயகர், மூலவர் பெருமாள் ஜேஷ்டா போன்ற ஒரு சில சிற்பங்கள் மட்டுமே சோழர் காலத்தவை ஆகும். பிற சிற்பங்கள் பிற்காலத்தவை ஆகும். (இல. தியாகராஜன், விக்கிரமங்கலம் அருள்மிகு பிறையதியம்மை உடனுறை சோழிஸ்வரர் திருக்கோயில் தலவரலாறு, 2013, (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, பக்கம்.161-169, 235-250)

## முதலாம் குலோத்துங்கன் காலம்

### 1.ஆலத்தூர் கோட்டைக்காடு அகத்தீஸ்வரர் கோயில் பொ.ஆ.1110

செந்துறை வட்டத்தில் ஆலத்தூர் கோட்டைக்காடு என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூரின் வடக்கில் வெள்ளாறு ஓடுகிறது. இந்த ஆற்றின் தென்கரையில் அகத்தீஸ்வரர் கோயில் என்னும் சிறிய சிவாலயம் உள்ளது. கருவறை, அர்த்தமண்டபம் ஆகிய இரு பகுதிகள் மட்டுமே உள்ளன. இக்கோயில் சுவர்களில் முழுமையான கல்வெட்டுக்கள் எதுவுமில்லை. பிற்காலத் திருப்பணியின் போது அவை அழிந்திருக்கலாம். இதன் காரணமாக ஆங்காங்கே இரண்டு துண்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. அவை விக்கிரமசோழனின் . மெய்க்கீர்த்தியைக் கூறுகின்றன. ஒரு துண்டுக் கல்வெட்டு பிரம்மதேயம் முடிகொண்டசோழச்சதுர்வேதிமங்கலம் என்ற பெயரையும் நம்பி பிராந்தகன் என்ற பெயரையும் நந்தா விளக்கு எரிக்க 90 ஆடுகள் கொடுத்த செய்தியையும் தருகின்றன.

இருப்பினும் இக்கோயில் வளாகத்தில் கிடக்கும் தூண்களில் முதலாம் குலோத்துங்கனின் 40 ஆம் ஆண்டில் எழுதப்பட்ட(பொ.ஆ.1110) ஒரு கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. இது வடகரை விருதராஜபயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு மு டிகொண்டசோழச்சதுர்வேதிமங்கலத்து உடையார் திருக்கர த்துறை உடையார் தேவதானம் வீர்சிங்ககுலகாலவதிக்கு மேற்கு

என்று இக்கோயில் பெயரையும் இவ்வூர் முடிகொண்ட சோழச்சதுர்வேதிமங்கலத்தின் (இன்றைய பெண்ணாடம்)ஒரு பகுதியாக இருந்ததையும் கூறுகிறது. (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, பக்கம்.137–138)

திருக்கரத்துறை என்பது இவ்வூரினுடைய பெயராகும். வெள்ளாற்றங்கரையில் அமைந்துள்ள ஏழு துறைகளில் இது 7வது துறையாகும். இதற்கு முடவன் துறை, பெலாந்துறை என்ற வேறு பெயர்களும் உள்ளன. இவ்வூருக்கு அருகில் உள்ள முதுகுளம் என்ற ஊரில் உள்ள குளக்கரையின் உள்ள கற்பலகையில் எழுதப்பட்டுள்ள முதலாம் ஸ்ரீரங்கனின் கல்வெட்டு (பொ.ஆ.1583)ஆலத்தூர் திருக்கனாகத்துறை நயினார் கோயில் பூஜைக்கு 17பற்று குறிச்சிப் பற்றுப் பிரிவைச் சேர்ந்த முதுகுளம் கிராமம் கொடுக்கப்பட்டதைக் கூறுகிறது. இக்கொடை கொண்டமநாயக்கர் என்ற செஞ்சிநாயக்கர்க்கும் இப்பகுதியை நிருவகித்த 17பற்று நாட்டார்க்கும் புண்ணியம் ஏற்பட வேண்டுமென்று கொடுக்கப்பட்டுள்ளது. (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, பக்கம்.265–266)

இச்சான்றுகளிலிருந்து திருக்கரத்துறை நாயனார் கோயில் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் சிறப்புடன் இருந்திருக்க வேண்டுமென்றும் விக்கிரமசோழன் காலம் மற்றும் விஜயநகர மன்னர் முதலாம் ஸ்ரீரங்கன் காலம் வரையிலும் இக்கோயில் வழிபாட்டில் இருந்தது என்பதும் புலனாகிறது. ஆலத்தூர் என்னும் பெயர் மற்றும் இப்பகுதியில் அக்காலத்தில் ஒரு கோட்டை இருந்தது என்று இப்பகுதி மக்கள் கூறும் தகவலையும் சேர்த்தால் ஆலத்தூர் கோட்டைக்காடு என்னும் ஊர்ப் பெயரைப் பெறமுடிகிறது.

**2. கண்டராதித்தம் சிவன் கோயில் பொ.ஆ.1093**

உத்தம சோழனின் 14ஆம் ஆட்சியாண்டில் கண்டராதித்தச்ச துர்வேதிமங்கலத்தில் இம்மன்னரின் அதிகாரி செம்பர் அருளன் என்பவர் சிவலோகத்து மகாதேவர் கோயிலைக் கற்றளியாகக் கட்டினார் என்பதை மேலே பார்த்தோம். இத்தகவலைத்தரும் கல்வெட்டு இக்கோயில் அர்த்தமண்டப வடக்கு வாயிலில் நிலைக்காலில் எழுதப்பட்டுள்ளது. ஆனால் தற்போது இக்கோயிலின் கருவறை, அர்த்தமண்டப சுவர்ப் பகுதிகள் மற்றும் அதிஷ்டானப்பகுதிகளில் முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் குலோத்துங்கன் ஆகியோரின் கல்வெட்டுக்கள்

எழுதப்பட்டுள்ளன. இவற்றில் பழமையானது முதலாம் குலோத்துங்கனின் 23ஆம் ஆண்டில் (பொஆ.1093) எழுதப்பட்ட கல்வெட்டாகும்.(201/1928-29)இதன் அடிப்படையில் உத்தமசோழன் காலத்துக் கோயில் இம்மன்னர் காலத்தில் மீண்டும் புதுப்பித்துக் கட்டப்பட்டுள்ளது என்பதை அறியமுடிகிறது. தற்போதுள்ள தட்சணாமூர்த்தி, லிங்கோத்பவர், துவாரப்பாலகர் ஆகிய சிற்பங்கள் குலோத்துங்கன் காலத்தவை ஆகும். இக்கோயிலின் இடைக்கட்டுப் பகுதியைக் காட்டுடையான் நாதன் ஆராவமுது என்பவர் கட்டியுள்ளார். இம்மன்னர் காலக் கட்டடக்கலை அமைப்புக்கு இக்கோயில் சிறந்த சான்றாக உள்ளது.

**3.கற்றளியான மேலப்பழுவூர் திருத்தோற்றமுடையார் கோயில் குலோத்துங்க சோழ ஈஸ்வரம் –பொ.ஆ.1085, 1100**

மேலப்பழூவூரில் உள்ள சுந்தரேஸ்வரர் கோயில் வளாகத்தில் திருத்தோற்றமுடையார் என்ற கோயிலை உத்தமசோழரின் ஆட்சிக்காலத்தில் பழுவேட்டரைய மன்னன் கண்டன் மறவன் பொ.ஆ.986 இல் கட்டினார் என்பதை மேலே பார்த்தோம். ஆனால் செங்கல்லால் கட்டப்பட்டிருந்த இக்கோயில் காலப்போக்கில் விரதித்துப் போனதாலும் தற்போது இக்கோயிலை முழுவதும் கருங்கல்லால் முதலாம் குலோத்துங்க சோழருக்கு உடல் நலம் நன்றாக இருக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டு இவருடைய அதிகாரி வாணகோவரையன் சுத்தமல்லன் உத்தமசோழனான இலங்கேஸ்வரர் என்பவர் கட்டியுள்ளார் என்பதை குலோத்துங்கசோழரின் கல்வெட்டால் அறியமுடிகிறது. மேலும் இக்கோயிலில் கோபுரம், பிரகாரங்கள், அஷ்டபரிவார ஆலயங்களையும் இவர் கட்டியுள்ளார்.

தற்போது இக்கோயில் சுவர்களில் கல்வெட்டுக்கள் தவிர வேறு சிற்பங்கள் எதுவுமில்லை. அடி முதல் முடி வரை கருங்கல்லால் கற்றளியாக வேசர விமானத்துடன் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் முதலாம் குலோத்துங்கன் காலக் கட்டடக் கலைக்கு நல்ல எடுத்துக்காட்டாக உள்ளது. தற்போது இக்கோயிலில் உள்ள உதிரி சிற்பங்களில் சில குறிப்பாக சப்தமாதர், முருகன் போன்ற சிற்பங்கள் இம்மன்னர் காலத்தவை எனலாம். (393,392/1924) தன்னுடைய அதிகாரி கட்டிய இக்கோயிலுக்கு முதலாம் குலோத்துங்கன் பொ.ஆ.1102 இல் தில்லைக்குடியான குலோத்துங்கசோழ நல்லூர் (இன்றைய சில்லக்குடி) என்ற ஊரை இறையிலியாக வழங்கி ஆணைப் பிறப்பித் துள்ளார்.(390/1924)

**4.போத்தாலிமடம் ராஜேந்திரசோழீஸ்வரம் -பொ.ஆ.1119**

கங்கைகொண்டசோழபுரத்தில் எழுதப்பட்டுள்ள முதலாம் குலோத்துங்கசோழனின் 49ஆம் ஆண்டுக்கல்வெட்டு(பொ.ஆ.1119) போத்தாலிமடம் என்ற ஊரில் இருந்த ராஜேந்திர சோழஈஸ்வர முடையார் என்ற கோயிலுக்குப் பூஜைவழிபாடுகள் நடத்துவதற்குப் போதுமான நிலம் இல்லை என்று இக்கோயில் பிடாரர் மன்னரிடம் விண்ணப்பம் செய்து நிலம் வழங்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இதனால் மன்னர் இராஜேந்திரசோழ நல்லூரைப் பாதியாகப் பிரித்து குலோத்துங்கசோழ நல்லூர் என்ற பெயரிட்டு அவ்வூர் வருமானத்தைக் கோயிலுக்குக் கொடுத்து ஆணையிட்டுள்ளார். இந்த ஆணையை இம்மன்னர் கங்கைகொண்ட சோழபுரத்தில் இருந்த கங்கைகொண்டசோழன் திருமாளிகையில் ஆதிப்பூமியில் கீழைசோபானத்தில்ப் பள்ளிக்கட்டிலில் எழுந்தருளியிருந்தபோது பிறப்பித்துள்ளார்.(தெ.இ.க..4, எண்.527) தற்போது கங்கைகொண்டசோழபுரம் அருகே உள்ள முத்துசேருவாமடம் அல்லது ஆண்டிமடம் ஆகிய இரண்டு ஊர்களில் ஒரு ஊரில் இந்த கோயில் இருந்தது என்று கருதலாம்.

**5.சுள்ளங்குடி அகத்தீஸ்வரர் கோயில் பொ.ஆ.1120**

அரியலூர் -ஏலாக்குறிச்சி சாலையில் பெரியமறை ஊருக்கு முன்பாக சுள்ளங்குடி என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூர்ச் சிவன் கோயில் வளாகத்தில் கிடைக்கும் மூன்றாம் இராஜராஜன் காலத் துண்டுக்கல்வெட்டுகளிலிருந்து இக்கோயில் பெயர் திருவகத்தீஸ்வரர் என அழைக்கப்பட்டதை அறியமுடிகிறது. (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, பக்கம்.159-161)

காமரசவல்லி சிவன் கோயிலில் எழுதப்பட்டுள்ள முதலாம் குலோத்துங்கனின் 50 ஆம் ஆண்டுக் கல்வெட்டு காமரவல்லிச்சதுர்வேதிமங்கலத்து பெருங்குறி மகாசபையார் விறைக் கூற்றத்து வளவன் புளியங்குடி திருவகத்தீஸ்வரமுடைய மகாதேவர் கோயில் திருக்காவணத்தில் கூட்டம் கூடி இக்கோயிலுக்கு அர்ச்சனாபோகமாக காமரசவல்லி ஊரில் நிலம் வழங்கிய செய்தியைத் தருகிறது. (84/1914) இதிலிருந்து இன்றைய சுள்ளங்குடி கிராமம் குலோத்துங்கன் காலத்தில் வளவன் புளியங்குடி என அழைக்கப்பட்டதையும் இங்குள்ள அகத்தீஸ்வரர் கோயில் இம்மன்னர் காலத்தில் கட்டப்பட்டது என்பதையும் அறியலாம். இக்கோயில் தற்போது மிகவும் சிதிலமடைந்துள்ளது. இங்குள்ள முருகன், தட்சணாமூர்த்தி,

துர்க்கை உள்ளிட்ட சிற்பங்கள் இம்மன்னர் காலத்தவை எனலாம்.

## விக்கிரமசோழன் காலம்

### 1.சேனாபதிமுடிகொண்டான் முடிகொண்டசோயிஸ்வரம்-பொ.ஆ.1124

அரியலூர் -திருமானூர் சாலையில் சேனாபதி முடிகொண்டான் என்னும் இரண்டு சிற்றூர்கள் உள்ளன. இவ்வூர் வாணவிச்சாதிரநல்லூர் என்ற பெயரில் இம்மன்னரின் அதிகாரி சுத்தமல்லன் முடிகொண்டானான விருதராஜ பயங்கரவாணகோவரையன் என்பவருக்குக் காணியாக வழங்கப்பட்ட ஊராக இருந்துள்ளது. காலப்போக்கில் வாணவிச்சாதிரநல்லூர் என்ற பெயர் மறைந்து இந்த அதிகாரியின் பெயரால் சேனாபதி முடிகொண்டான் என அழைக்கப்பட்டு தற்போது இரண்டுசிற்றூர்களாக விளங்குகிறது. இவ்வூரில் இவ்வதிகாரி முடிகொண்டசோழ ஈஸ்வரமுடைய மகாதேவர் என்னும் கோயிலைக் கட்டியுள்ளார். இக்கோயிலை தபசி பொய்க்குடையான் திருச்சிற்றம்பலபிச்சன் என்பவர் கட்டியுள்ளார். இக்கோயிலின் பூஜை வழிபாடுகளுக்கும் கோயில் பதியாளர்களுக்கும் இவ்வதிகாரி நிலம் வழங்கியுள்ளார். இச்செய்திகளைத் தரும் விக்கிரமசோழனின் 6ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு கீழப்பழுவூர் ஆலந்துறையார் கோயிலில் எழுதப்பட்டுள்ளது. (தெ.இ.க. .5, எண்.673) ஆனால் தற்போது சேனாபதி முடிகொண்டான் இரண்டு ஊர்களிலும் சோழர் காலக் கோயில் எதுவுமில்லை. காலப்போக்கில் இக்கோயில் அழிந்துவிட்டது எனலாம். தற்போது செங்கல்லால் ஆன விஸ்வநாதர் கோயில் என்னும் கோயில் மட்டுமே முடிகொண்டானில் உள்ளது.

## இரண்டாம் இராஜராஜன் காலம்

### 1.மேலப்பழுவூர் குலோத்துங்கசோழ அக்கசாலை ஈஸ்வரம் பொ.ஆ.1149

கீழப்பழுவூர் ஆலந்துறையார் கோயிலில் எழுதப்பட்டுள்ள இரண்டாம் இராஜராஜன் காலத்தது என்று கணிக்கக் கூடிய இம்மன்னரின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டு இக்கோயில் பற்றிக் குறிப்பிடுகிறது.(வரலாறு இதழ்-3, ஆகஸ்டு 1994, பக்கம். 8-9) தங்க காசுகள் அச்சடிக்கப்படும் இடத்தில் இக்கோயில் இருந்தது என்பதை இப்பெயர் உணர்த்துகிறது. இக்கோயிலுக்குத் தேவதானமாக இரைக்குடி என்ற ஊர் பூலோகப்புரந்தர நல்லூர் என்று பெயரிடப்பட்டு கொடுக்கப்பட்டிருந்ததையும் இக்கல்வெட்டு மூலம் அறியமுடிகிறது. கீழப்பழுவூர் அருகே

எறக்குடி என்ற கிராமம் உள்ளது. மேலப்பழூரில் தங்கச்சாலை என்ற தெருப் பெயர் உள்ளூர் மக்களால் கூறப்படுகிறது. எனவே இக்கோயில் மேலப்பழூரில் இருந்திருக்கலாம். ஆனால் தற்போது இக்கோயில் அழிந்து போய்விட்டது.

**2.உடையவர் தீயனூர் திருவக்கீஸ்வரமுடையார் கோயில் பொ.ஆ.1166**

அரியலூர் -விக்கிரமங்கலம் சாலையில் உடையவர் தீயனூர் என்ற சிற்றூர் உள்ளது. இங்குள்ள சிவன் கோயில் ஜமதக்னீஸ்வரர் கோயில் என அழைக்கப்படுகிறது. இக்கோயில் சுவர்களில் இரண்டாம் இராஜராஜன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராஜராஜன், விஜயநகரமன்னர் இரண்டாம் தேவராயர் ஆகிய மன்னர்களின் கல்வெட்டுக்கள் உள்ளன. இவற்றில் மிகவும் தொன்மையான இரண்டாம் இராஜராஜனின் 20 ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஆகும். இதனால் இக்கோயில் இம்மன்னர் காலத்தில் கட்டப்பட்டது எனலாம். கல்வெட்டில் இவ்வூர்ப் பெயர் தீயனூரான மனுகுலகேசரி நல்லூர் எனவும் கோயில் பெயர் திருவக்கீஸ்வரமுடையார் எனவும் குறிப்பிடப்படுகிறது. இரண்டாம் தேவராயரின் கல்வெட்டு திருவக்னீஸ்வரமுடைய நாயனார் திருக்கோயில் என்று கூறுகிறது. முழுவதும் வெள்ளைச் சுண்ணாம்புக் கல்லால் கட்டப்பட்டுள்ள இக்கோயிலில் உள்ள தேவகோஷ்ட சிற்பங்களான விநாயகர், விஷ்ணு ஆகியவை சோழர் கால வார்ப்புகளாகும். இங்குள்ள செப்புத் திருமேனிகளும் இம்மன்னர் காலத்தவை எனலாம். (இல. தியாகராஜன், உடையவர் தீயனூர் அருள்மிகு அமிர்தாம்பிகை உடனுறை ஜமதக்னீஸ்வரர் திருக்கோயில் தலவரலாறு, 2009)

**3.இராயம்புரம் இராஜகம்பீரசோழீஸ்வரம் பொ.ஆ.1297**

அரியலூர் - செந்துறைச் சாலையில் இராயம்புரம் என்னும் சிற்றூர் உள்ளது. இங்குள்ள இராஜகம்பீரசோழீஸ்வரர் என அழைக்கப்படும் சிவன் கோயிலில் சோழர் காலக் கல்வெட்டுக்கள் எதுவுமில்லை. தனியாக ஒரு கற்பலகையில் எழுதப்பட்டுள்ள முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 30 ஆம் ஆண்டுக் கல்வெட்டு(பொ.ஆ.1297) இவ்வூர் இராஜகம்பீரபுரம் என்ற பெயரில் வணிக நகரமாக விளங்கியது என்பதையும் இக்கோயில் இராஜகம்பீரசோழீஸ்வரமுடைய நாயனார் என அழைக்கப்பட்டதையும் இவ்வூர் மேல் காரைக்காட்டுச் சென்னிவலக் கூற்றம் என்ற நாட்டுப்பிரிவின் கீழ் இருந்ததையும் இக்கோயிலுக்கு 79 நாட்டவரும் நான்கு திசை 18 விஷயத்தாரும் ஒன்றுகூடி தங்களின் வணிகப்பொருட்கள் மீது மகமை வரி விதித்து கோயிலில் பூஜை வழிபாடுகள் நடத்தவும்

நகர நிருவாகம் செய்யவும் செய்த ஏற்பாட்டைக் கூறுகிறது. ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியில் இரண்டாம் இராஜராஜனை இராஜகம்பீரன் என்று பாடியுள்ளார். இப்பெயரில் இம்மன்னர் காலத்தில் இவ்வூரும் கோயிலும் உருவாயிற்று எனலாம். தற்போது இக்கோயிலில் சோழர் கால எச்சமாக இருப்பவை கோயிற் பெயரும் தட்சணாமூர்த்தி சிற்பமும் ஆகும். ஊர்ப்பெயர் இராயம்புரம் என மருவிவிட்டது. இருப்பினும் பாண்டியர் காலத்திலும் இவ்வூர் சிறப்புடன் வணிகநகரமாகத் திகழ்ந்துள்ளது என்பதை அறிகிறோம். (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, பக்கம். 83-85)

## இரண்டாம் இராஜாதிராஜன் காலம்

### 1.பெரியாக்குறிச்சி இராஜேந்திரசோழீஸ்வரம், புகழாபரண விண்ணகர், பொ.ஆ.1169

### கொடுக்கூர் திருச்செந்தீஸ்வரம், வேதநாயக விண்ணகர் பொ.ஆ.1169

செந்துறை வட்டத்தில் உள்ள பெரியாக்குறிச்சி ஊரில் சோழீஸ்வரர் கோயில் என்னும் சிவாலயத்தில் இரண்டாம் இராஜாதிராஜன் காலத்திய 3,8, ஆகிய ஆட்சியாண்டுகளில் எழுதப்பட்ட கல்வெட்டுகள் உள்ளன. இவை பெரியாக்குறிச்சியிலும் கொடுக்கூரிலும் வங்கார முத்தரையன் என்பவர் மேலே குறிப்பிடப்பட்டுள்ள 4 கோயில்களையும் கட்டியுள்ளார் என்பதையும் இக்கோயில்களுக்கு இம்மன்னர் தனது மூன்றாம் ஆட்சியாண்டில் புகழாபரண நல்லூர் என்ற கிராமத்தை இறையிலியாக வழங்கி ஆணைப் பிறப்பித்ததைக் கூறுகிறது. (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, பக்கம். 256-261) கொடுக்கூரில் உள்ள கோயில்கள் சோழர் கால அம்சங்களை இழந்து தற்போது வழிபாடின்றி சாதாரண கோயில்களாக கல்வெட்டுக்கள் ஏதுமின்றி உள்ளன. பெரியாக்குறிச்சி சிவன் கோயிலில் மட்டும் கல்வெட்டுக்கள் உள்ளன. இங்குள்ள தட்சணாமூர்த்தி சிலை மட்டும் இம்மன்னர் காலத்திய சிற்பக்கலைக்குச் சாட்சியாக உள்ளது. அச்சிற்பமும் தற்போது கங்கைகொண்டசோழபுரம் அருங்காட்சியகத்துக்குக் கொண்டு செல்லப்பட்டு வைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் கட்டுமான அமைப்பு இரண்டாம் இராஜாதிராஜன் காலக் கலை அமைப்புக்குச் சான்றாக உள்ளது. வெள்ளைச் சுண்ணாம்பு கல்லால் கட்டப்பெற்றுள்ள இக்கோயிலும் அண்மையில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

**2.தேளூர் சோமனாதீஸ்வரர் கோயில் பொ.ஆ.1173**

*அரியலூர் -விளாங்குடி சாலையில் அமைந்துள்ள சிற்றூர் தேளூர் ஆகும். இவ்வூரில் கட்டப்பட்டுள்ள சோமனாதீஸ்வரர் கோயிலில் ஒரே ஒரு கல்வெட்டு மட்டும் உள்ளது. சிற்பங்கள் ஏதுமில்லை. முழுவதும் வெள்ளைச் சுண்ணாம்புக்கல்லால் கட்டப்பட்டுள்ள இக்கோயில் சுவரில் எழுதப்பட்டுள்ள இரண்டாம் இராஜாதிராஜனின் 7ஆம் ஆண்டுக் கல்வெட்டு இவ்வூர்ப் பெயரை திகையொளியூர் என்றும் கோயில் பெயரை திகையொளிஈஸ்வரமுடைய நாயனார் என்றும் இவ்வூர் காரைக்காட்டுச் சென்னிவலக் கூற்றத்தில் இருந்தது என்றும் இக்கோயிலுக்கு இவ்வூரில் காதியுரிமையுடைய பலர் பூஜை வழிபாட்டுக்கு நிலம் கொடுத்தது பற்றியும் கூறுகிறது. (இல. தியாகராஜன், அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, பக்கம். 83-85)*

**மூன்றாம் குலோத்துங்கன் காலம்**

*இம்மன்னரின் காலத்தில் பின்வரும் ஊர்களில் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன.*

1. *தூத்தூர்(தூற்றூர்) திருவெண்பபேறுடையார் கோயில் பொ.ஆ.1180*
2. *ஶ்ரீபுரந்தான் (ஶ்ரீபராந்தகச்சதுர்வேதிமங்கலம்) சிவபாதசேகர ஈஸ்வரம் -பொ.ஆ.1184*
3. *ஶ்ரீபுரந்தான் (ஶ்ரீபராந்தகச்சதுர்வேதிமங்கலம்) கைலாசநாதர் கோயில் பொ.ஆ.1184*
4. *இரைக்குடி(எறக்குடி) மதுராந்தகஈஸ்வரம் பொ.ஆ.1191*
5. *கண்டராதித்தம் லட்சுமிநாராயணப் பெருமாள் கோயில் (கண்டராதித்த விண்ணகர்) பொ.ஆ.1215*
6. *பெரியமறை திருப்பார்ப்பதீஸ்வரமுடையார் கோயில் பொ.ஆ.1216*

**மூன்றாம் இராஜராஜன் காலம்**

1. *திருமழபாடி வைத்தியநாதப்பெருமாள் சன்னதி பொ.ஆ.1222*
2. *திருமழபாடி சோமநாதீஸ்வரர் கோயில் பொ.ஆ.1223*
3. *தாமரைப்பூண்டி தர்மலிங்கேஸ்வரர் கோயில் பொ.ஆ.1229*
4. *ஓட்டக்கோயில் பொன்பரப்பின சோழீஸ்வரர் கோயில் பொ.ஆ.1236. போசளர் காலத்தில் இப்பகுதி கோயில்கள் சிலவற்றில் திருப்பணிகள் நடந்தன.*

## முடிவுரை

இவ்வாறு முதலாம் ஆதித்தன் காலம் முதல் மூன்றாம் இராஜராஜன் ஆட்சி காலம் வரை போசளர்களின் பங்களிப்பையும் சேர்த்து 55 கோயில்கள் இப்பகுதியில் கட்டப்பெற்றுள்ளன. இவற்றில் பெரும்பாலான கோயில் சிற்பங்களும் செப்புத் திருமேனிகளும் நல்ல நிலையில் அந்தந்த காலக் கலைச் சிறப்புகளை நமக்குப் பறைச்சாற்றிக் கொண்டு சோழர் காலக் கலைப்பெருமைகளை அறிய உதவுகின்றன.

## துணைநூல்கள்


1. இல. தியாகராஜன், *அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-1, 2015, காமரசவல்லி பதிப்பகம், அரியலூர்.*

2. இல. தியாகராஜன், *அரியலூர் மாவட்டக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் தொகுதி-2, 2016, காமரசவல்லி பதிப்பகம், அரியலூர்.(அச்சில்)*

   இல. தியாகராஜன், *"அரியலூர் வட்டாரத்துச் சிற்றூர்களில் கிடக்கும் புத்த-சமண உதிரிச்சிற்பங்கள்- ஓர் வணிக வரலாற்று ஆய்வு", அரசுக் கலைக் கல்லூரி, அரியலூர், ஆண்டு மலர் 1995, பக்கம்.3-8*

3. Doughlas Barret, *Early Chola Bronzes,* Bombay. 1965.

   ____________ *Early Chola Architecture and Sculpture,* 1974

4. Balasubrahmanyam, *S.R. Early Chola Art, Part I,* Asia Publishing House, Bombay,1966.

   ____________ *Early Chola Temples (A.D.907-985),*Orient Longman, New Delhi,1971.

   .____________ *Middle Chola Temples,* Oriental Press Amsterdam,1977

5. ____________ *Later Chola Temples,* (A.D.1070-1280), Faridabad, 1979.

   Michael W. Meister, *Encyclopaedia of Indian Temple Architecture, South India, Lower Dravidadesa, 200BC-A.D.1324,* Oxford University Press, Delhi, 1983.

# 66. செய்தித்திரட்டு - புதிய கண்டுபிடிப்புகள்

## 66:1

### மஞ்சுவிரட்டு நடுகல்

திருவண்ணாமலை மாவட்டம் கலசபாக்கம் வட்டத்தில் ஆதமங்கலம் புதூர் அருகே 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த மஞ்சுவிரட்டு நடுகல். சுமார் 3 அடி உயரமும் 2 அடி நீளமும் கொண்ட இந்த நடுகல் அப்பகுதியில் தொன்று தொட்டு நடந்து வரும் மஞ்சுவிரட்டு அல்லது மாடுபிடித்தல் நிகழ்ச்சியின் நினைவாக வைக்கப்பட்டுள்ளது. இவ்வூரில் 5 இடங்களில் வீர மரணமடைந்த வர்களுக்கான நடுகற்கள் காணப்படு கின்றன.



## 66:2

### பச்சையம்மன் கோயில் சதிகல்

மேற்படி மாவட்டம் தேவிகாபுரம் அருகே உள்ள வீரசம்பனூர் என்ற கிராமத்தில் பச்சையம்மன் மன்னார் சாமி கோயில் எதிரில் வேட்டைக்காரன் நடுகல் அமைந்துள்ளது. இதன் உயரம் சுமார் 3 அடி அகலம் .1.5 அடி. காலம் 16 -17ஆம் நூ. இந்நடுகல்லில் வலதுபுறம் நாயின் உருவமும் இடதுபுறம் பெண்ணின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. வேட்டையின் பொழுது தன் கணவர் இறந்தமைக்காக மனைவி உடன்கட்டை ஏறியமைக்கான சதிக்கல் இது.



**ச.பாலமுருகன்,**
**தேவிகாபுரம்.**

## 66:3

## குருவித்துறை நடுகற்கள்



மதுரையில் இருந்து சோழவந்தான் வழியாக குருபகவான் கோவிலுக்குச் செல்லும் வழியில் நடுகல் ஒன்று உள்ளது. மூன்று அடுக்குகளைக் கொண்ட இந்நடுகல் கீழ் பகுதி முற்றிலும் சிதைந்துள்ளது. இரண்டாவது அடுக்கில் ஆண் பெண் புடைப்புகள் இரண்டும் தொங்கிய கைகளுடன் நின்ற நிலையில் காட்சியளிக்கிறது. பெண் உருவம் ஆண் உருவத்தைவிட உயரம் குறைவாகவும் ஆணின் வலக்கையில் வாள் ஒன்று கூர்முனை கீழ் நோக்கியவாறு உள்ளது. இச்சிற்பங்கள் மிகவும் தேய்ந்துள்ளதால் அவற்றின் பிற அடையாளங்களைச் சரியாக கணிக்க இயலவில்லை. மூன்றாவது மேல் அடுக்கில் பக்கவாட்டில் இருமகளிர் நின்ற நிலையில் உள்ளனர். இடப்பக்கம் இருப்பவரின் வலக்கை மடக்கிய நிலையில் மேலே தூக்கியவாறும் பிறிதொரு கை கீழே தொங்கவிட்டவாரும் உள்ளது. இவர் பின் தலையில் பரந்த நிலையில் தனது முடியினைக் கொண்டுள்ளார். வலப்பக்கம் இருக்கும் பெண்ணின் கொண்டை பக்கவாட்டில் காட்டப்பட்டுள்ளது. திரண்ட மார்பகங்களுடன் காணப்படும் இவ்விருவரின் கீழாடை முழங்கால் வரை காட்டப்பட்டுள்ளது. இவ்விருவரும் கீழ் உள்ள கணவன் மனைவியை மேலுகத்திற்கு வரவேற்கும் தேவமகளிராவர். போரில் வீர மரணமடைந்த தன் கணவருடன் சதி மேற்கொண்ட சதிக்கல் இதுவாகும். இந்நடுகள் 15-16ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகலாம்.

## 66:4

## குதிரை வீரன் நடுகல்

மேற்குறித்த பகுதியில் பிற்கால அமைப்பில் இரண்டு அடுக்குடைய நடுகல் ஒன்று உள்ளது. கீழ் அடுக்கில் குடைந்த நிலையில் குதிரை வீரன் ஒருவன் குதிரை மீதமர்ந்து குதிரையைச் செலுத்தும் நிலையில் காட்சியளிக்கின்றான். குதிரை சீறிப்பாயும் நிலையில் உள்ளது. கழுத்துகளில் அணிகள் பெற்றுள்ளது.



குதிரையின் கயிற்றை குதிரை மேல் அமர்ந்துள்ள வீரன் தனது இடக்கையால் பிடித்தவாறும் வலக்கையை உயர்த்தி குதிரையை வேகமாகச் செலுத்தும் நிலையிலும் உள்ளார். குதிரை முன்னங்கால்களை மடித்து வேகமாகச் செல்வது போல் காட்சியளிக்கிறது. குதிரையின் வால் நேர்த்தியுடன் உள்ளது. இவ்வுருவத்தின் மேல் பகுதியில் தோரன அமைப்புடன் நின்ற நிலையில் தண்டையும் வில்லையும் ஏந்திய நிலையில் உயர்நிலையில் உள்ள வீரனது உருவம் இரு பெண்களுக்கு இடையில் காட்சியளிக்கிறது. இவ்வீரன் கீழே காட்டிய குதிரை வீரனாக இருக்கலாம். இவரது மார்பில் புரிநூலும் கழுத்தணிகளும் உள்ளன. தொடை வரை இருத்திய ஆடையுடன் சடாபாரத்துடன் இவர் காட்சியளிக்கின்றார். இருபக்கங்களில் உள்ள பெண்கள் மதுரைக் கொண்டையுடன் நின்ற நிலையில் அழகுடன் காட்சியளிக்கின்றனர். வீரனுக்கும் வலப்பக்கம் உள்ள பெண்ணுக்கும் இடையில் குள்ளமான உருவம் ஒன்று நின்ற நிலையில் உள்ளது. வலப்பக்கப் பெண் தனது இடப்பக்க கையினை குள்ள உருவத்தின் தலை மீது இருத்தியுள்ளார். பெண்கள் இருவருமே மடிப்புடன் கூடிய ஆடையை கால்களின் கணுக்கால் வரை அனிந்துள்ளனர். மேலாடை மார்பின் நடுவில் இருவருக்கும் செல்கின்றது. இடப்பக்க பென்னின் தொங்க விட்ட இடக்கையில் செண்டு ஒன்றைப் பற்றிய நிலையில் உள்ளது. மேற்குறித்த சிற்பங்களை இங்குள்ள நாயக்கர்கள் வணங்கி வருகின்றனர். இச்சிற்பத்தொகுதி *17-18* ஆம் நூ.சார்ந்ததாகலாம்.

**66:5**

**சிதிலமடைந்த குதிரை வீரன் சிற்பம்**

இதேபகுதியில் சிதைந்த நிலையில் இரு அடுக்குகள் கொண்ட குதிரை வீரன் சிற்பம் ஒன்றும் உள்ளது. கீழ்ப்பகுதியில் குதிரை மீதமர்ந்த நிலையில் வீரன் ஒருவன் காட்சியளிக்கின்றான். குதிரையின் முன் கால்கள் மண்ணில் இருத்திய நிலையிலும் பின்கால்கள் மடக்கிய நிலையிலும் உள்ளது. வீரனின் இருகைகளில் ஒன்று குதிரையின் கயிற்றைப் பிடித்தவாறும்



மற்றொரு கை தூக்கிய நிலையில் குதிரையை விரைவாகச் செலுத்தும் நிலையிலும் அமைந்துள்ளது. இச்சிற்பத்தின் மேலடுக்கில் நின்ற நிலையில் ஆண் வீரனின் இருபக்கங்களிலும் இரு பெண்கள் நின்ற நிலையில் காட்சியளிக்கின்றனர். வீரனின் வலக்கையில் வாள் ஒன்று கீழ் நிலையை நோக்கியவாறு பிடிக்கப்பட்டுள்ளது. வலக்காலை சிறிது மடக்கியும் இடக்காலை தரையில் நன்கு ஊன்றியும் வீரன் காட்சியளிக்கின்றார். நேர்கொண்டை யிட்டு நடுவில் முடிச்சு போடப்பட்டுள்ள தலை அலங்காரத்தை இவர் பெற்றுள்ளார். பெண்கள் இருவரும் இருபக்கங்களிலும் சரிந்த தலையலங்காரத்தைப் பெற்றுள்ளனர். இவர்களின் கைகள் கீழ்நோக்கிய நிலையில் தொங்கவிட்டவாறு உள்ளது. சொர்கத்திற்கு இறந்த குதிரை வீரரை இட்டுச் செல்லும் தேவமகளிராக இவர்கள் இருக்கக்கூடும்.

## 66:6

### அய்யப்பன் நாயக்கன்பட்டி சிற்பம்



குருவித்துறை செல்லும் சாலையில் உள்ள இவ்வூரில் அய்யப்ப நாயக்கர் காலத்தில் பெண்கள் உடன்கட்டை ஏறிய இடத்தில் அமர்ந்த நிலையில் இச்சிற்பத்தொகுதி உள்ளது. இதனை எல்லை அம்மன் என்றும் மாலையம்மன்கள் என்றும் வழங்குவர். இவ்விருவரும் ஊரைக் காவல் காக்கும் தெய்வம் எனக் கருதுவர். இவர்கள் இருவரும் இறந்தமையால் அத்துயரம் தாங்காமல் இவர்களுடைய தோழிகள் இருவரும் உடன்கட்டை ஏறியதாக மற்றொரு சிற்பத் தொகுதியும் இங்கு உள்ளன. இச்சிற்பங்கள் யாவும் பீடத்தின் மீது அமர்ந்த நிலையில் ஒரு காலை தரையில் ஊன்றியவாறு பிறிதொரு காலை மடித்து தொடையில் இருத்திய நிலையில் கைகளில் செண்டு மலரை ஏந்தியும் பிறிதொரு கையை தொடையில் இருத்தியும் காட்சியளிக்கின்றன. காதுகளில் வளையணியும் கழுத்துகளில் அணிகலன்களும் பெற்று இவை விளங்குகின்றன.

## 66:7

## நடுவக்கோட்டை நடுகற்கள்

மதுரை திருமங்கலத்திலிருந்து சேடப்பட்டி செல்லும் சாலையில் நடுவக்கோட்டை அமைந்துள்ளது. இவ்வூரில் பாட்டைய கோயில் என வழங்குகின்ற நடுகல் சிற்பம் உள்ளது. பூசாரி கவுண்டர் இன மக்கள் இதனை வழிபடுகின்றனர். வேட்டுவ அமைப்பில் காணப்படும் இச்சிற்பத்தின் ஒரு கையில் அம்பை எய்யும் நிலையில் வீரன் ஒருவன் காட்சியளிக்கின்றான். தொடைவரை இருத்திய கீழாடை கால்களில் தண்டை கைகளில் வளையணி மார்பில் கழுத்தணி பெற்று விளங்கும் இவ்வீரனின் முதுகில் அம்புக்கூடு காட்டப்பட்டுள்ளது. உருண்டை விழிகள் முருக்கிய மீசை தடித்த உதடுகளுடன் நேர்கொண்ட பார்வையாக விளங்கும் இச்சிற்பம் *17-18* ஆம் நூ. சார்ந்தது.



இவ்வூரின் எல்லை நுழைவுப்பகுதியில் நின்ற நிலையில் ஒரு நடுகல் உள்ளது. இச்சிற்பம் பெண்ணுருவமாக விளங்குகிறது. மடிப்புகளுடன் கூடிய கீழாடை நேர்நிலையில் நின்று ஒரு கையை மேலே தூக்கியவாறும் மற்றொரு கையைத் தொங்கவிட்ட நிலையிலும் இச்சிற்பம் உள்ளது. பக்கவாட்டுக் கொண்டையுடன் விளங்கும் இச்சிற்பத்தை இவ்வூர் மக்கள் வழிபடுகின்றனர். இச்சிற்பம் இவ்வூரின் பெண் தெய்வமாக இருக்கலாம்.

**R.ருக்மாங்கதன்,**
**மதுரை**

## 66:8

## சோலைக்கவுண்டன் பாளையம் அய்யனார் சிற்பம்

கடலூர் மாவட்டம், பண்ருட்டி வட்டம், மாளிகைமேட்டுக்கு அருகில் உள்ள சோலைக்கவுண்டன் பாளையம்.*(N11*48*27.0, E079*35*23.3)* ஊருக்கு வடக்கே, அய்யனார் சிற்பம் பலகைக்கல்லில் புடைப்புச்சிற்பமாக உள்ளது. இப்பலகைக் கல்லின் அடிப்பகுதி பெரியபத்ரபீடம் போன்று உள்ளது. உருவ அமைதியைக் கொண்டு இச்சிற்பத்தின் காலம் *9*ம் நூற்றாண்டாக இருக்கலாம்.



தலையில் சடா பாரத்துடன் இடதுகாலை மடக்கி வலதுகாலைக் குத்திட்ட நிலையில் ராசலீலா சனத்தில் அமர்ந்து காணப்படும் இவர் நீண்ட காதில் தொங்கிய பத்ரகுண்டலம், கழுத்தில் கண்டிகை, சரப்பை, முப்புரிநூல், தோளில் தோள்வளையும், கையில் கைவளையும் அணிந்து காணப்படு கிறார். வயிற்றின்மேல் உதரபந்தமும், இடையில் ஆடையும் காணப்படு கின்றது. சிற்பத்தின் கீழே இரண்டு விலங்கு உருவங்கள் உள்ளன. அவை நாய் மற்றும் குதிரையாக இருக்கலாம்.

**கோ.மதிவாணன்,**
**தஞ்சாவூர்**

**66:9**

## ஆடிப்புலியூர் சிற்பங்கள்

### பைரவர்



திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டம் ஆடிப்புலியூரில் அங்காளம்மன் கோயிலில் பைரவர் மற்றும் சண்டிகேஸ்வரர் ஆகிய இரு சிற்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பைரவர் சிற்பம் நின்ற கோலத்தில் சதுர்புஜங்களுடன் நாய் வாகனத்துடன் காட்சியளிக்கிறது. இதன் மேல் வலக்கரம் டமரு முத்திரையில் உடுக்கையை பற்றியுள்ளது. மேல் இடக்கரம் கடக முத்திரையில் பாசக்கயிற்றை பிடித்துள்ளது. கீழ் வலக்கரம் திரிசூலத்தண்டையும், இடக்கரம் கபால கிண்ணத்தையும் கொண்டுள்ளது. பைரவரின் தலையை ஜுவாலா மகுடம் என்னும் சுடர் முடி அலங்கரிக்கிறது. பைரவர் சதுர முகம், அகன்ற நெற்றி, நெற்றிக்கண், நெலிந்த புருவம், பருத்த விழிகள், புடைத்த நாசி, கடைவாய் பற்களுடன் கூடிய திருவாய் யாவும் கொண்டு அணியா அழகராக அங்காளம்மன் கோயிலில் வழிபாட்டில் உள்ளார். இதன் காலம்11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.

## சண்டிகேஸ்வரர்



இவ்வுருவம் சதுரமான பீடத்தின் மேல் இடக்காலை மடித்து, வலக்காலை தொங்கவிட்டு சுகாசனத்தில் இரண்டு கைகளுடன் அமர்ந்துள்ளது. இவரது வலக்கரம் கடக முத்திரையில் மழுவாயுதத்தை பற்றியுள்ளது. இடக்கரம் இடது தொடைமீது சிம்ஹகர்ண முத்திரை காட்டி அமைந்துள்ளது. தலையை ஜடாமகுடம் அலங்கரிக்கிறது. இவ்வுருவம் அங்காளம்மன் கோயிலில் தாண்டவராயமூர்த்தி என்ற பெயரில் வழிபாட்டில் உள்ளது. இவ்விரு சிற்பங்களும் இவ்வூரில் சிதைந்து மறைந்த சிவாலயத்திற்கு உரியவை. இதன் காலம் பொ.ஆ.11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி

## யோக ஆஞ்சநேயர்



தாண்டவராய மூர்த்தி சன்னதியின் அர்த்த மண்டபத்தில் இச்சிற்பம் வழிபாட்டில் உள்ளது. சதுரமான பீடத்தின் மேலுள்ள பத்ம பீடத்தில் இரு கால்களை முன்புறம் குறுக்காக வைத்து, இரண்டு கரங்களுடன் யோகாசனத்தில் வீற்றிருக்கிறது. வலக்கரம் ஞானமுத்திரை காட்டும் கரமாகவும், இடக்கரம் முழங்கால் மீது புத்தக முத்திரையில் அமைந்து சுவடி ஏந்திய கரமாகவும் உள்ளது. ஆஞ்சநேயர் தலையை சிறிய மகுடம் போன்ற அமைப்பு அலங்கரிக்கிறது. இரு கால்களின் முன்புறம் யோகபட்டம் அணிசெய்கிறது. யோக ஆஞ்சநேயரின் இவ்வுருவம் குடந்தை இராமசாமி கோயில் கருவறையில் உள்ள இராமபிரானின் முன்பு சுவடி ஏந்திய அனுமனுடன் ஒப்பிடத்தக்கது. பீடத்துடன் 20 செ.மீ. உயரமும், 13 செ.மீ. அகலமும் உடையது. காலம்.17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

## மதுரைவீரன்

வாளும் கேடயமும் பற்றி நிற்கும் மதுரைவீரன் மாவீரனை போன்ற தோற்றத்துடன் வார்ப்பில் வடிக்கப்பட்டுள்ளான். இவனது தலையில் இடப்புறம் சரிந்த கொண்டை அலங்கரிக்கிறது.

இடையிலிருந்து தொடை வரை மடிப்புடன் கூடிய கீழாடையும், வலது இடையின் முன்புறம் குறுவாளும் செறுகப்பட்டுள்ளன. வீரனின் வலது தோளின் பின்புறம் அம்பறாதூணி காட்டப்பட்டுள்ளது.மதுரை வீரனின் வலப்புறம் அடப்பைகாரரன் உருவம் வலக்கையில் வெற்றிலை சீவலை பற்றிய வண்ணம் சிறிய வடிவில் நிற்கிறான். அவனது இடக்கையில் இடுப்பின்மேல் உள்ளது. இவ்விரு படிமங்களும் ஒரே பீடத்தில் வார்க்கப்பட்டுள்ளன. இதன் காலம் 17ஆம் நூற்றாண்டின் முற்பகுதி



## வெள்ளையம்மாள்

மதுரைவீரனின் பொம்மி - வெள்ளையம்மாள் ஆகிய இரு தேவியரில் வெள்ளையம்மாள் படிவம் மட்டும் இக்கோயிலில் உள்ளது. இது சதுரமான பீடத்தின் மேலுள்ள தாமரை இருக்கையில், இடது காலை ஊன்றி, வலது காலை சற்று முன்வைத்து, திரிபங்கத்தில் கரங்களில் வாளோடும் கேடயத்தோடும் காட்டப்பட்டுள்ளது. வெள்ளை யம்மாளின் தலையில் இடப்புறம் சாய்ந்த மதுரைகொண்டை அலங்கரிக்கிறது. இதன் காலம் 17ஆம் நூற்றாண்டின் முற்பகுதி. முந்தைய நாயக்கர் கலைப்பாணி. செப்புத் திருமேனிகளான இவை இரண்டும் ஆலய சேமிப்பில் பாதுகாப்பாக உள்ளன.



## ஐயனார் பூரணி புஷ்கலை

ஐயனார் மற்றும் பூரணி புஷ்கலை சிற்பத்தொகுதி, ஆடிப்புலியூர் ஐயனார் கோயிலில் ஒரே பீடத்தில் அமைந்துள்ளன. நடுவே உள்ள ஐயனார் வலக்காலை தொங்கவிட்டு, இடக்காலை குத்திட்டு இரண்டு கைகளுடன் மானிட வடிவில்



காட்சியளிக்கிறார். இவரது வலக்கரம் கடக முத்திரையில் செண்டு பற்றியுள்ளது. இடக்கரம் முழங்கால் மீது தாழ்கரமாக நீண்டுள்ளது. தலையில் ஜடாபாரம் நேர்த்தியான வேலைப்பாடுடன் விளங்குகிறது. ஐயனாரின் வலப்புறம் ஒரே பீடத்தில் இடது காலை மடித்து, வலது காலை தொங்கவிட்டு இரண்டு கைகளுடன் காட்டப்பட்டுள்ளது. இடக்கரம் தாமரை மலரை பற்றி, வலக்கரத்தால் வரத முத்திரை காட்டுகிறது. தலையில் கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. மார்பில் கச்சை உள்ளது. ஐயனாரின் இடப்புறம் வலது காலை மடித்து, இடது காலை தொங்கவிட்டு இரண்டு கரங்களுடன், தலையில் கரண்ட மகுடம் தரித்து எழிலாக வீற்றிருக்கிறது. வலக்கை அல்லி மலரையும், இடக்கரம் வரத கரமாகவும் அமைந்துள்ளது. இச்சிற்பங்களின் உருவ அமைப்பு, தலைக்கோலம், ஆடை அணிகளின் தோற்றம் யாவும் கொண்டு பொ.ஆ.16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த விஜயநகர கலைப்பாணியாகக் கருதலாம்.

**மா.சந்திரமூர்த்தி, சென்னை**

**க.ஆ.கவிதா, சென்னை**

## 66:10

## வேம்படிதாவளம் புதிர்நிலை

சேலம் மாவட்டம் வேம்படித்தாவளம் ஊருக்க ருகில் கோட்டைப்புதூர் கிராமத்தில் இரண்டு புதிர்நிலைகள் உள்ளன. வழி பாட்டில் உள்ள புதிர்நிலைகளில் ஒன்று மிகப் பெரியது. இப்பெரிய புதிர்நிலை வட்டவடிவில்அமைக்கப்பட்டது.



பெருங்கற்கால ஈமச் சின்னத்திற்க ருகில் இதுஅமைந்துள்ளது.பெரிய புதிர்நிலை வட்ட வடிவில் ஆரம் 15 மீ. சுற்றளவு 140 மீட்டர் என்ற அளவில் 700 சதுர அடி பரப்பில் அமைந்துள்ளது. இரண்டாவது புதிர்நிலை அன்மையில் ஊர் மக்களால் நிர்மாணிக்கப்பட்டது.

**சுகவனமுருகன், காவேரிப்பட்டினம்,**
**பொன்.வெங்கடேசன்,ஆறகழூர்,**
**சி.வீரராகவன்,விழுப்புரம்,**
**வை.கலைச்செல்வன்,சேலம்,**
**கே.சீனிவாசன்,சேலம்**

## 66:11

### பல்லவர் கால முருகன்:



கடலூர் மாவட்டம் திட்டக்குடியில் வைத்தியநாதன் கோயிலில் இரண்டாம் சுற்றுப் பிரகாரத்தில் கருவறைக்குப் பின் தெற்குப்பகுதியில் முருகன் சிற்பம் தற்போதும் வழிபாட்டில் உள்ளது. இச்சிற்பத்தின் கரங்களில் வஜ்ஜிரம், சக்தி, அபயம், ஊரவில், கடகம் ஆகியவை காணப்படுகின்றன. க்ரைவேயகம், உபக்ரைவேயகம் உள்ளது. மார்பில் சன்னவீரம் காணப்படுகிறது. காதுகளில் பத்ரகுண்டலம், ஜடாமகுடம், காந்தள் பூக்களுடன் ஊருதக்னமான பட்டாடை, தோள் வரை கங்கணம் காணப்படுகிறது. இது பல்லவர் காலப்படைப்பாகும்

## 66:12

### ஆறகழூர் நிசும்பசூதனி:

சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் ஆறகழூரில் தென் திசையில் காளிக்கோயில் உள்ளது. இங்குள்ள சிற்பம் காளி, காளிப்பிடாரி என்ற பெயரில் வழிபாட்டில் உள்ளது. இதன் உயரம் 105 செ.மீ, அகலம் 80 செ.மீ. சிம்மாசனத்தில் உட்குடி ஆசனத்தில் அமர்ந்துள்ளாள். 8 கரங்களுடன் காட்சியளிக்கிறாள்

. வலப்புற கையில் சூலம், உடுக்கை, நீண்டகத்தி, முன்கரத்தில் மலர் ஏந்தியவாறு உள்ளது. இடப்புற கைகளில் மேற்கரத்தில் சாட்டை அடுத்து கேடயமும் மணியும் ஏந்தியபடி உள்ளது. முன் கை உடைந்துள்ளது. இடையில் கலைநயத்துடன் கூடிய அரை ஆடை உள்ளது. மார்பில் கச்சை இல்லை. கழுத்தில் இரு அணிகலன்கள் காட்டப்பட்டுள்ளது. மார்பில் கபால மாலை புரி நூல் உள்ளது. தீ நாக்குடன் கூடிய மகுடம் உள்ளது. இரு காதுகளிலும் பிரேத குண்டலம் காட்டப்பட்டுள்ளது. சிம்மம் பொறிக்கப்பட்டுள்ள ஆசனத்தில் அமர்ந்துள்ளாள். பாதம் கணுக்காலில் கழல் காணப்படுகிறது. மகிஷாசூரனை மிதித்தப்படி உள்ளாள். அமைப்பின்படி இச்சிற்பம் 12ஆம் நூற்றாண்டகலாம்.



## 66:13

## ஆறகழூர் வணிகக்குழு தூபக்கரண்டி

ஆறகழூரில் வளையற்கார தெருவில் உள்ள தேசாதி பட்டணம் செட்டியார் என்பவர்களுக்கு சொந்தமான மடத்தில் உள்ள தூபக்கரண்டி, காலம் 15 ஆம் நூற்றாண்டாகலாம். இதே போன்ற ஒரு கரண்டி மும்பையில் உள்ளதாய் முனைவர் சு.இராசகோபால் அய்யா குறிப்பிட்டுள்ளார். இந்த கரண்டியுடன் சங்கிலியால் ஒரு மணி இணைக்கப்பட்டுள்ளது. இந்த கரண்டியின் முனையில் கொட்டாங்குச்சி போன்ற குழி போன்ற அமைப்பு காணப்படுகிறது. இது கற்பூரம் சாம்பிராணி போன்றவை போட பயன்பட்டிருக்கலாம். இதற்கு அடுத்து இரு புறமும் யாழி போன்ற அமைப்பு காட்டப்பட்டுள்ளது. அடுத்து சிவலிங்கம் மற்றும் பிள்ளயார் சிறிய அளவிலும் அவற்றின் நடுவே சூரியன் அல்லது தன்வந்திரியின் உருவம் பெரிய அளவிலும் காட்டப்பட்டுள்ளது. பின்னிரு கரங்களில் அமிர்த



கலசம் அல்லது கட்டை போன்ற அமைப்பு காணப்படுகிறது. முன் வலது கை அபய முத்திரையும் மற்றொரு கை நீட்டி விரித்த நிலையிலும் உள்ளது. மார்பில் இரு கோடுகளாக அணிகலன் காட்டப்பட்டுள்ளது. ஆடை மூன்று வரிகளில் காட்டப்பட்டுள்ளது. அமர்ந்த நிலையில் உள்ளது. கைப்பிடி உள்ள பகுதி ஒன்பது பகுதிகளாக பிரிக்கப்பட்டு அதில் வணிக குழுக்களின் குறியீடுகள் காணப்படுகின்றன. பிரிவு ஒன்றில் மூவர் நிற்பது போல் உள்ளது. அடுத்தடுத்த பிரிவுகளில், வணிக குறியீடுகள் இசைக்கருவிகள் போன்ற குறியீடுகள் காணப்படுகின்றன. இவை இன்னும் முழுமையாக ஆய்வுசெய்யப்படவேண்டும்.

தேசாதி பட்டணம் செட்டியார் என்ற பிரிவை சேர்ந்தவர்கள் இன்றும் ஆறகழூர் திருகாமீசுரமுடைய நாயனார் கோயிலில் முக்கிய பொறுப்பில் உள்ளனர். திருவிழாக்களின் போது மரியாதை தரப்படுகிறது. தேர் திருவிழாவின் போது இந்த கரண்டியை எடுத்துச்சென்று நன்கொடை வசூல் செய்கிறார்கள். இவர்கள் வசிக்கும் தெரு இன்றும் வளையற்கார தெரு என அழைக்கப்படுகிறது.

**பொன்.வெங்கடேசன்,ஆறகழூர்**

## 66:14

## கோவைப் பகுதி மண்சுவர் தொல்லியல் எச்சங்கள்:

கோயம்புத்தூர் மாவட்டம், மதுக்கரை வட்டம், ஒத்தகால் மண்டபம் நவகோடி நாரயணப் பெருமாள் கோயிலின் பின்புறம் சுமார் *500* அடி நீளம் கொண்ட மண்ணால் கட்டப்பட்ட மண்சுவர் காணப்படுகிறது. இச்சுவற்றின் உயரம் அகலம் முறையே *12X6*அடியாகும். இம்மண்சுவரில் சங்க காலத்தைச் சேர்ந்த சிவப்பு, கருப்பு, கருப்பு சிவப்பு, மெருகூட்டிய நிறப் பானை ஓடு, முதுமக்கள் தாழியினுடைய வாய்ப்பகுதி, இரும்பு உருக்குகள், மனித எலும்புகள், கெண்டி மூக்கு போன்றவை கண்டுபிடிக்கப்பட்டன. இம்மண்சுவரைக் கட்டுவதற்கு





இரும்புக்கால புதைவிடப் பகுதியின் மண்ணைப் பயன்படுத்திக் கட்டியுள்ளமையை அறிய முடிகிறது. இம்மண்சுவர் பகுதியில் விஜயநகர காலத்தைச் சார்ந்த நாணயம் ஒன்றும் கண்டெடுக்கப்பட்டது. இந்நாணயத்தின் முன்புறம் அமர்ந்த நிலையில் அம்மன் உருவம் ஒன்று காணப்படுகிறது.

**புலி, யானை நடுகற்கள்:**





கோவை மாவட்டம், கிணத்துக்கடவு வட்டம் கோவை- பொள்ளாச்சி சாலையில் கிணத்துக்கடவு பொன்மலை குன்றுப் பகுதியில் ஸ்ரீஆதிப்பட்டி விநாயகர் கோயிலின் பின்புறம் கிழக்கு நோக்கிய நிலையில் யானை மற்றும் புலியுடன் மனித உருவம் கொண்ட நடுகள் காணப்படுகிறது. சுமார் இரண்டரை அடி உயரம் கொண்ட நடுகல்லில் ஒருவர் நின்ற நிலையில் அவரது இடுப்பில் புலி ஒன்று முன்னங்கால்களை இருத்தி அவரது தலைக்கொண்டையைக் கவ்வி கடித்தவாறும் இவர்களுக்குக் கீழ் யானையின் உருவமும் காணப்படுகிறது. பொன்மைலைக் குன்றுக்கு வடமேற்குப் பகுதியில் மற்றொரு புலிக்குத்தி நடுகல்லும் காணப்படுகிறது. இந்நடுகல்லில் வீரன் ஒருவன் புலியின் வாயைப் பிளப்பது போன்றும், இடது கையில் உள்ள கத்தியால் புலியின் வயிற்றில் குத்துவது போன்றும் காணப்படுகிறது.

**மு.சதீஸ்குமார்,கிணத்துகடவு**

**பா.அருண்ராஜ்,தஞ்சாவூர்**

**66:15**

**ஒத்திவாக்கம் தீப்பாஞ்ச அம்மன் நடுகல்:**

காஞ்சிபுரம் மாவட்டம், திருக்கழுக்குன்றம் வட்டத்தில் பொன் விளைந்தகளத்தூர் செல்லும் வழியில் பிள்ளையார் கோயில் தெரு மெயின் ரோட்டில், ஒத்திவாக்கம் ஊர் எல்லையில் தீப்பாஞ்ச அம்மன் என வழங்கப்படும் சிற்பம் ஒன்று கிழக்கு

நோக்கிய நிலையில் உள்ளது. கற்பலகையில் உள்ள பீடத்தின் மீது நடுவே ஆண் புடைப்புச் சிற்பமும் அவனது இருபுறமும் இரு பெண்களும் காணப்படுகின்றனர். ஆணின் வலது கையில் வாள் ஏந்தியும் இடது கரம் கதாயுதம் ஏந்தியும் உள்ளது. ஆண் தலையில் இடப்புறம் சரிந்த கொண்டையி ட்டுள்ளான். காதுகள் இரண்டும் அணிகளின்றி நீள் செவிகளாக உள்ளன. கழுத்தில்



மணிவடமும், முத்துவடமும் அலங்கரிக்க, மார்பில் பதக்கம் கோர்த்த நீள்சரம் அலங்கரிக்கிறது. இடுப்பிலிருந்து முழங்காலுக்கு கீழ் வரை ஆடை தரித்துள்ளான். பரந்த முகம், அகன்ற நெற்றி, கோடிட்ட புருவம், திறந்த கண்கள், எடுப்பான மூக்கு, முருக்கிய மீசை, குவிந்த வாய், அகன்ற தோள், விரிந்த மார்பு, அளவான அங்கங்கள் யாவும் இச்சிலையில் காணத்தக்கவை. முகத்தில் வீரம் வெளிப்பட எடுப்பாக நிற்கும் இவ்வுருவம் உயரம் 36 செ.மீ., அகலம் 15 செ.மீ. கொண்டது. அவனது வலப்புறம் உள்ள பெண் இடக்கரத்தால் தாமரை மலரைப் பற்றியும், வலக்கரம் தாழ்கரமாக உள்ளது. தலையை அலங்கரிக்கும் கொண்டை வலப்புறம் சரிந்துள்ளது. நீள் செவியில் அணியில்லை. கழுத்தில் கண்டசரம், மணிவடம், முத்துமணி, சரப்பளி அலங்கரிக்கின்றன. இடையிலிருந்து முழங்காலுக்கு கீழ்வரை இடைக்கச்சை தரித்து நிற்கிறாள். உயரம் 31 செ.மீ., அகலம் 13 செ.மீ.வீரனின் இடப்புறம் உள்ள பெண் வலக்கரத்தில் அல்லி மலர் பிடித்து, இடக்கரத்தை தாழ்கரமாக கொண்டுள்ளாள். அவளது கொண்டை இடப்புறம் சரிந்துள்ளது. நீள் செவிகளும், கழுத்தில் அணிகளும், தோள்களில் வளையும், முன் கைகளில் காப்பும் கொண்டு இடையில் இடைக்கச்சை தரித்துள்ளார். உயரம் 30 செ.மீ., அகலம் 13 செ. மீ. பலகைக் கல்லின் மொத்த உயரம் 60 செ.மீ., அகலம் 45 செ.மீ. கொண்ட கற்பலகையில் இச்சிற்பங்கள் உள்ளன. இவர்களின் ஆடை விசிறி மடிப்புடையது. 16 நூ. சார்ந்த விஜயநகர காலத்து கலைப்பாணி. இச்சிற்பங்களின் அமைப்பில் உயர் அலுவலர் ஒருவர் இறந்த பின் அவரது மனைவியர் இருவர் உடன்கட்டை ஏறியமையால் வைக்கப்பட்ட நினைவுக்கல்லாக இருப்பதால்

இன்றளவும் இதனை தீப்பாஞ்ச அம்மன் என வழங்குகின்றனர்.

**கூ.பிச்சைபிள்ளை,உளுந்தூர்பேட்டை**

**பெ.லெனின்,செஞ்சி**

**த.காமாட்சி,சென்னை**

**க.ஆ.கவிதா,சென்னை**

**66:16**

## திருப்பூர் பகுதி சிற்பங்கள்





திருப்பூர் மாவட்டம் பல்லடம் வட்டம், இச்சிப்பட்டி பஞ்சா யத்தில் கோயம்புத்தூர் - திருச்சி செல்லும் நெடுஞ்சாலையில்காரணம்பேட்டைக்கு அருகில் உள்ள பெரிய அய்யன் கோயில் தெருவில், பலகைக்கல்லில் வீரன் சிற்பம் நேராக நின்ற (சமபங்க) நிலையில், தலையில் வலதுபக்க கொண்டையுடன் காணப்படு கிறது. காதணி கழுத்தணிகளுடன் காணப்படும் இச்சிற்பத்தின் இரு கைகளிலும் அணிகலண்களுடன், வலது கையில் வாளும் இடது கையில் குறுவாளும் காணப்படுகிறது. இடுப்பில் முடிச்சியுடன் கூடிய ஆடை காணப்படுகிறது. இவ்வீரனை சுற்றிலும் தோரணங்களுடன் கூடிய திருவாட்சி காணப்படுகிறது. வலுது பக்கம் மேல் கிளி ஒன்று உள்ளது. இப்பகுதி மக்கள் இச்சிற்பத்தை 'அப்பரய்யன்' என்று அழைக்கின்றனர். இச்சிற்பம் உருவ அமைதி நாயக்கர் காலத்தைச் சார்ந்தது.

மற்றொரு வீரன் சிற்பம் மேற்படி மாவட்டம் வட்டத்தில், இச்சிப்பட்டி பஞ்சாயத்து கோயம்புத்தூர் - திருச்சி செல்லும் நெடுஞ்சாலையில் காரணம் பேட்டைக்கு அருகில் உள்ள பெத்தாம்பூச்சிபாளையம் எனும் ஊரில் உள்ளது. நேராக நின்ற நிலையில் தலையில் வலது பக்க கொண்டையுடன் கையில் கிளியை பிடித்தவாறு இச்சிற்பம் காணப்படுகிறது. கை,

கால்களில் வளையும் அணிந்து இடுப்பில் முடிச்சியுடன் கூடிய ஆடையும் இடதுபக்க இடுப்பில் குறுவாளுடனும் காணப்படுகிறது. சிற்பத்தை சுற்றி திருவாச்சி அமைப்பு செதுக்கப்பட்டுள்ளது. சிற்பத்தின் வலது மேல்பகுதயில் விளக்கேற்றும் முக்கோண வடிவ மாடம் உள்ளது. இப்பகுதி மக்கள் இச்சிற்பத்தை 'கொல்லப்ப நாயக்கர்' என்று அடைக்கின்றனர். இச்சிற்ப உருவ அமைதி நாயக்கர் காலத்தைச் சார்ந்தது.

**கி.மாலதி,கோவை**

## 66:17

### கூழம்பந்தல் சோழர் கால சிற்பங்கள்



திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டம், கூழம்பந்தல் கிராமத்தின் சிவாலயத்தைச் சுற்றிலும் சோழர் கால உதிரி சிற்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை முதலாம் ராஜேந்திர சோழனின் காலத்தவை.

### விநாயகர்

இவ்விநாயகர் சிற்பம் சிவன் கோயிலில் இருந்து கொண்டுவரப்பட்டு சாலை ஓரத்தில் வைத்து வழிபடுகின்றனர். நீண்ட பலகைக் கல்லின் முன்புறம் செதுக்கப்பட்டுள்ளது. நான்கு கரங்களுடன் நின்ற நிலையில் துதிக்கை இடம்புரியாக வளைந்து மோதகத்தை பற்றுகிறது. கரங்கள் நான்கிலும் அங்குசம், பாசம், எழுத்தாணி, மோதகம் உள்ளன. தலையை கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. இரு பக்கங்களில் சாமரமும், மேற்பகுதியில் வெண்கொற்றக் குடையும் செதுக்கப்பட்டுள்ளன.



### துர்க்கை

நீண்ட பலகைக் கல்லின் முன்புறம் எருமைத் தலைமீது துர்க்கை எண் கரங்களோடு காட்சியளிக்கிறாள். துர்க்கையின் எண் கரங்களில் சக்கரம், சங்கு, அம்பு, வில், வாள், கேடயம் ஆகிய ஆறு ஆயுதங்கள் உள்ளன. ஏனைய இரு கரங்கள் அபய கரமாகவும், தொடைமீது ஊரு முத்திரை காட்டும் கரமாகவும் அமைந்துள்ளன. கிரீட மகுடம் தலையை அலங்கரிக்கிறது. மகுடத்தின் இருபுறமும் இரு சாமரங்களும்,

தலைமீது வெண்கொற்றக் குடையும் காட்டப்பட்டுள்ளன. துர்க்கையின் மார்பில் குஜபந்தம் உள்ளது. இடையிலிருந்து தொடை வரை கச்சைத் தரித்துள்ளார். காலின் கீழ் எருமைத்தலை காட்டப்பட்டுள்ளது.



**ஆலமரச் செல்வன்**

நீண்ட பலகைக் கல்லின் முன்புறம் ஆலின்கீழ் அமர்ந்த அண்ணலின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. பீடத்தின் மேல் வலது காலை தொங்கவிட்டு, இடது காலை வீராசனத்தில் மடித்து, சதுர் புஜங்களுடன் வீற்றிருக்கிறது. மேற்கரங்கள் நாகத்தையும், அனலையும் பற்றியுள்ளன. கீழ் கரங்கள் ஞான முத்திரையிலும், ஏடு ஏந்திய கரமாகவும் உள்ளன. தலையில் சுருண்டு விரிந்த ஜடாபாரம் அலங்கரிக்கிறது. பீடத்தின் முன்புறம் ஜனகாதி முனிவர்கள் இருவர் காட்டப்பட்டுள்ளனர். வலது திருவடியின் கீழ் அபஸ்மாரன் உருவம் உள்ளது. தலையின் பின்புறம் அடர்ந்த ஆலவிருட்சம் காட்டப்பட்டுள்ளது.



**ஜனகாதி முனிவர்கள் இருவர்**

தலையில் ஜடாமகுடமும், முகத்தில் தாடியும், மீசையும் தரித்த நிலையில் மண்டியிட்டு அமர்ந்துள்ள ஜனகாதி முனிவர் இருவரது சிற்பங்களும் தனித்து காணப்படுகின்றன.

**சூரியன்**

இவ்வுருவம் இரண்டு கைகளுடன் நின்ற நிலையில் உள்ளது. இரு கரங்களிலும் தாமரை மலரை கடக முத்திரையில் பற்றியுள்ளன. தலையில் கரண்ட மகுடமும், தலையின் பின்புறம் ஒளிவட்டமும் உள்ளன. குண்டலம், கண்டசரம், அட்டிகை, புரிநூல், உதரபந்தம், இடைவார், கச்சை ஆகிய அணிகலன்கள் இவ்வுருவை அலங்கரிக்கின்றன.



இச்சிற்பங்கள் கங்கைகொண்ட சோழபுரம் என்னும் கூழம்பந்தல்

சிவாலயத்தை சுற்றிலும் அரசு அகழ்ந்து சீரமைத்தபோது புதையுண்டு கிடந்ததாக ஊரார் கூறுகின்றனர்.

**மா.சந்திரமூர்த்தி,சென்னை**
**டி.கல்யாணி,சென்னை.**
**க.ஆ.கவிதா, சென்னை.**

## 66:18

### அணைக்கரைப்பட்டி கல்திட்டை:

தேனி மாவட்டம், போடிநாயக்கனூர்வட்டம், பி. அணைக்கரைப்பட்டிக்கு வடக்கிலுள்ள மரக்காமலையில் கல்திட்டை உள்ளது. இப்பகுதி மக்கள் இதனைப் பாண்டியர் திட்டு, பாண்டியர் குகை, பாண்டியர் வீடு, பாண்டவர் குகை, பாண்டவர் வீடு எனப் பலவாறு வழங்குகின்றனர். இங்கு நான்கு கற்திட்டைகள் காணப்படுகிறன்றன. இவற்றில் மூன்று சேதமடைந்த நிலையிலும் ஒன்று மட்டும் முழுமையாகவும் காணப்படுகிறது. கல்திட்டை 4 அடி நீளமும் 3 அடி அகலமுடைய கற்பலகைக்கற்களைக் கொண்டு 8 அடி அகலத்தில் கல்வட்டங்களைக் கொண்டும் காணப்படுகிறது.



**சி.மாணிக்கராஜ், போடிநாயக்கனூர்**

## 66:19

### குதிரை குத்திப்பட்டான் நடுகல், மூத்த தேவி சிற்பம்

கரூர் மாவட்டம் அரவக்குறிச்சியில் இருந்து 2 கி.மீ. தொலைவில் கரடிப்பட்டி-நங்காஞ்சி ஆற்றங்கரை. இங்குள்ள நடுகல் 135X80 செ.மீ உடைய கற்பலைகையில் வெட்டப்பட்டுள்ளது. வீரன் தலையில் மகுடமும், காதில் காதணிகளும், கழுத்தில் கண்டிகை, சரப்பளி அணிகலன்களும், கையில் வீரக்கப்பும், இடையில் நல்ல வேலைப்பாடுகளுடன் ஆடையும், குறுவாளும் உள்ளன. வீரனது வலது கையில் உள்ள குறுவாளால் தன்னைத் தாக்கும் குதிரையை குத்தும் வண்ணமும், இடது கையால் தன்னைத் தாக்கும் குதிரையைத்தடுக்கும்

வண்ணமும் நடுகல் வடிவமைக்கப்பட்டுள்ளது. குதிரையின் முன்னங்கால் இரண்டும் வீரனின் இடுப்புப் பகுதியை தாக்கும் வண்ணமும், பின்னங் கால் இரண்டும் நிலத்தில் ஊன்றிய வண்ணமும் உள்ளது. குதிரையின் மேற்ப்பகுதியில் வீரன் அமர்ந்து செல்லும் இருக்கை (சேடல்) அற்புதமாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்நடுகள் அமைப்பில் 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகலாம்.



## மூத்த தேவி சிற்பம்

திருப்பூரில் இருந்து தென் கிழக்கே 15 கி.மீ. தொலைவில் உள்ள பெருந்தொழுவில் உள்ள சிவன் கோயிலின் வெளிப்புற வளாகத்தில் மூத்த தேவி சிற்பம் உள்ளது.110 X95 செ.மீ அளவுள்ள இச்சிற்பத்தில் மூத்ததேவியின் மகனான மாந்தான் வலது பக்கத்திலும், மகளான மாந்தி இடது பக்கத்திலும் உள்ளனர். மூத்ததேவி அமர்ந்தும், அமராத நிலை போன்று தொங்கிய கால்களுடன் காட்சியளிக்கிறாள். மாந்தான் விவசாயப் பெருங்குடி மக்கள் தங்கள் உழவுப் பணிக்குப் பெரிதும் உதவும் காளை மாட்டின் உருவம் கொண்டு வலது கையில் தடியுடனும், இடது கை தன் இடது கால் மேல் வைத்தபடியும் உள்ளார். மாந்தி தன்வலது கையில் தாமரை மொட்டையும், இடது கையைத் தன் கால் மேலும் வைத்துள்ளார். மூத்ததேவி தன்வலது கரத்தில் தாமரை மொட்டையும், இடது கையைத் தன் இடுப்புப் பகுதியிலும் வைத்து உள்ளார். தலையில் கிரீட மகுடமும், காதுகளில் தடாங்கம் என்ற தோடும், கைகள் கழுத்துப் பகுதிகளில் அணிகலன்களும், இடையில் மட்டும் ஆடைகளும் பெற்றுள்ளார். இச்சிற்பம் சிற்ப அமைதிப்படி 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த்தாகலாம்.



சு.இரவிக்குமார்,அவிநாசி
க.பொன்னுச்சாமி,பல்லடம்

## கொங்குபகுதியில் புதிய கண்டுபிடிப்புகள்:

### சேவூர் அடுக்குநிலை நடுகல்:

திருப்பூர் மாவட்டம் சேவூர் காவல் நிலைய வளாகத்தில் மூன்றடுக்குகள் கொண்ட ஐந்து அடி உயரமும், மூன்றடி அகலமும் கொண்ட அடுக்குநிலை நடுகல் காணப்படுகிறது.. நடுகல் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. மழுங்கிக் காணப்படும் இந்நடுகல்லின் கீழ் அடுக்கில் வீரன் ஒருவன் நாணேற்றிய வில்லைக் கையில் பிடித்துப்போரிடும் நிலையில் காணப்படுகிறான். வீரனின் இடப்புறத்தலைப்பகுதியில் கொண்டை முடி உள்ளது. இடைப்பகுதியில் ஆடைக்கச்சு உள்ளது. வீரனின் இன்னொருபுறத்தில் அவன் மனைவி என்று கருதும்படியான ஒரு பெண்ணுருவம் காணப்படுகிறது. பெண்ணின் தலையிலும் கொண்டை உள்ளது. ஆனால் கொண்டை தலையின் வலபுறம் உள்ளது. கணுக்கால் வரை ஆடை உள்ளது. இரண்டாம் அடுக்கில், நான்கு உருவங்கள் காணப்படுகின்றன. ஓர் ஆண் மூன்று பெண்கள். முதல் அடுக்கில் கண்ட ஆணின் கொண்டை மற்றும் பெண்ணின் கொண்டை ஆகியவற்றின் அடிப்படையிலேயே இரண்டாம் அடுக்கிலும் தலைக்கொண்டைகள் காணப்படுகின்றன. மூன்றாம் அடுக்கில், வீரன் சிவலிங்கத்தை வழிபடுவது போன்ற தோற்றம். ஒரு நந்திச்சிற்பமும் காணப்படுகிறது. மேலும் கை கூப்பிய நிலையில் இரு பெண்ணுருவங்கள். வீரன் சண்டையின்போது இறந்துபடுகிறான். அவன் மனைவி அவனோடு உடன்கட்டை ஏறுதல். வீரனையும் அவளது மனைவியையும் சுவர்க்கம் என்னும் மேலுலகத்துக்குத் தேவமகளிர் அழைத்துச்செல்கின்றனர்.

### புதூர் புலிகுத்திக்கல்:

உடுமலை அருகில் தேவனூர் புதூரில், நவக்கரை பாலத்தருகில் நரிகடிச்சான் கோயில் அமைந்துள்ளது. கருவறையின் வாயில் போன்ற முன்புறத்தில், ஐந்தடி உயரமுள்ள இருகற்கள் இருபுறம் நிற்கவைக்கப்பட்டு, நடுவில் ஒருவர் உள்ளே நுழையுமளவு வாயில் திறப்பு அமைக்கப்பட்டிருந்தது. கருவறையின் இரு பக்கவாட்டுப்பகுதிகளிலும் பின்புறத்திலும் ஐந்தடி உயரமுள்ள மூன்று மூன்று கற்கள் இணைக்கப்பட்டிருந்தன. கற்களால் அமைந்த மேற்கண்ட அறைக்குள் மூன்று அடி நீளமும் இரண்டரை அடி உயரமும் கொண்ட புடைப்புச்சிற்பத்தில்,

வீரன் ஒருவன் தன் இடது கையால் புலியின் வாய்க்குள் சிறிய வாளைப் பாய்ச்சியவாறும், தன் வலது கையால் நீண்டதொரு வாளைப்புலியின் வயிற்றுப்பகுதியில் பாய்ச்சியவாறும் காணப்படு கிறான். இரண்டு வாள்களுமே புலியின் உடலைத்துளைத்து உடலுக்கு மறுபுறம் வெளிவந்துள்ளவாறு உள்ளன. புலி தன் பின்னங்கால்களால் நின்றவாறு முன்கால்களைத் தூக்கி வீரனின் வலது கையைப்பற்றிக்கொண்டு தாக்கும் நிலையில் காணப்படுகிறது. வீரனின் கால்களும், புலியின் பின்னங்கால்களும் உள்ள பகுதி நிலத்தில் புதைந்து உள்ளது. வீரன் தலையில் தலைப்பாகை இருப்பதுபோல் தோன்றுகிறது. தலையின் வலப்பக்கம் கொண்டை காணப்படுகிறது. கழுத்திலும் காதிலும் அணிகள் உள்ளன. இடையில் ஆடைக்கச்சு காணப்படுகிறது. இடைக்கச்சில் குறுவாள் ஒன்று இருப்பதுபோல் புலப்படுகிறது. நீண்ட நாட்களாகச் சிற்பத்துக்கு எண்ணை பூசப்பட்டுவருவதன் காரணமாகச் சிற்பநுணுக்கங்களை அறிய முடியவில்லை. வீரனுக்கும் புலிக்கும் இடையில் ஒரு நீண்ட தண்டு காணப்படு கின்றது. எண்ணைப்பூச்சில் அதன் வடிவம் தெளிவாகப் புலப்படவில்லை.

## தொண்டாமுத்தூர் வேட்டைக்காரசாமி புலிகுத்திக்கல்:

கோவை மாவட்டம் பொள்ளாச்சியை அடுத்துள்ள தொண்டாமுத்தூரில் சாலையோரத்தில் வேட்டைக்காரசாமி கோயில் அருகிலுள்ள மரத்தடியைச் சுற்றிலும் நான்கைந்து சிற்பங்கள் காணப்பட்டன. அவற்றில் ஒன்று புலிகுத்திக்கல் சிற்பமாகும்.. வீரன் மண்டியிட்டு அமர்ந்த நிலையிலும், புலி தன் நான்கு கால்களால் இயல்பாய் நின்ற தோற்றத்திலும் காணப்படுகின்றனர். வீரன் தன் கையில் வேல் அல்லது ஈட்டியை ஏந்தியவாறு புலியின் வாய்க்குள் ஆயுதத்தைச் செலுத்திக்கொண்டிருக்கிறான். வீரனின் தலைமுடி இடப்புறம் கொண்டையாக முடியப்பட்டுள்ளது. கழுத்திலும், கைகால்களிலும் தடித்த அணிகளை அணிந்திருக்கிறான், இடையில் ஒரு குறுவாள் உள்ளது. ஆடை அமைப்புச் சரியாகப்புலப்படவில்லை.

வீரனின் இடதுபுறம் ஒரு பெண் சிற்பம் உள்ளது. புலியுடன் நடந்த சண்டையில் வீரன் இறந்துபோவதால், மனைவியும் உடன் இறந்துபோகிறாள் என்று கருதலாம். பெண்ணின் தலைமுடிக் கொண்டை வலப்புறமாக உள்ளது. பெண்ணின் அனிகலன்களும் தடித்துக் காணப்படுகின்றன. ஆடை கணுக்கால்வரை உள்ளது. சிற்பம் தேய்ந்துள்ளதால் சிற்பக்கூறுகளைத் தெளிவாக அறிய முடியவில்லை.

அடுத்து இரண்டு தனிச்சிற்பங்களில், ஒன்றுபோல ஆண், பெண் இருவர் உருவங்கள் கணப்படுகின்றன. ஆணின் கைகள் மடித்துவைத்த அமைப்பில் தடித்த வாளைச் சாய்த்துப்பிடித்தவாறு உள்ளன. மற்றொரு சிற்பத்தில் ஆண், பெண் ஆகிய இரண்டு உருவங்களோடு அவர்களுக்கிடையில் ஒரு குழந்தை உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. ஆணின் வலப்பக்கம் ஒரு பாம்பு வடிவம் செதுக்கப்பட்டுள்ளது. இச் சிற்பத்தின் அமைப்பு, அணிகலன்கள், தலைக்கிரீடம், ஆடை அமைப்பு ஆகியன, சிற்பத்தில் உள்ள ஆணும் பெண்ணும் உயர்நிலையில் இருப்பவர்கள் எனச் சுட்டுவதுபோல் தெரிகிறது. இந்த வேட்டைக்கார சாமிக் கோயில் நரிகடிச்சான் கோயில் எனவும் மக்களால் அழைக்கப்படுகிறது. பழங்காலத்தில், புலியைப் "பெருநரி" என்னும் பெயரால் அழைத்தனர்.

## சிங்கநல்லூர் புலிகுத்திக்கல்:

பொள்ளாச்சி அருகே அமைந்துள்ளது சிங்கநல்லூர். அங்கு பிள்ளையார் கோயிலின் முன்புறத்தில் ஒரு புலிகுத்திக்கல் சிற்பம் காணப்படுகிறது. சிற்பத்தில் வீரன் மிக நெருக்கமான நிலையில் புலியுடன் போரிடும் காட்சி புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. இப்புலிகுத்திக்கல்லில் நீண்ட வாளுக்கு மாற்றாகக் கோடரி ஒன்று காணப்படுவது சிறப்பு. குறுவாள் புலியின் நெஞ்சுப்பகுதியில் நுழைந்துவிட்டபடியால் வீரனின் கை மட்டுமே தெரியும்படி உள்ளது. புலி தன் பின்னங்கால்களில் நின்ற நிலையில் முன்னங்கால்களால் வீரனைத் தாக்குகின்றது. வீரனின் தலைப்பகுதியில் தலைப்பாகை காணப்படுகிறது. தலையின் வலது பக்கமாகக் கொண்டையுள்ளது. காதுகளில் காதணியும், கைகளில் வளையும், கால்களில் கழலும் அணிந்திருக்கிறான். இடைப்பகுதியில் ஆடைக்கச்சும் முழங்கால்வரை ஆடையும் காணப்படுகின்றன. இச்சிற்பம் பொ.ஆ. 12-13 நூற்றாண்டுகளைச் சார்ந்தது.

## கோவை-சரவணம்பட்டி எழுத்துப்பொறிப்புக்கல்:

சரவ ணம்பட்டி சாலையில் மளிகைக்கடை ஒன்றின் முன்புறம் நடப்பட்டுள்ள பலகைக் கல் ஒன்றில் எழுத்துகள் காணப்படுகின்றன.எழுத்துக்கள் சில சிதைந்துள்ளன. எஞ்சிய வாசகத்தின் அடிப்படையில் இக்கல்வெட்டு கால் வலி உள்ளவர்களுக்கு வைக்கப்பட்ட மந்திரக்கல் என்று ஊர் மக்கள் கூறினர். தமிழகத்தில் கால்நடைகளுக்கு ஊர் மந்தையின் நடுவில் இதுபோன்ற மந்திரக் கல் நடுவது வழக்கம். அதுபோன்று

கால்வலி உள்ளவர்களுக்காக வைக்கப்பட்ட கல்லாகலாம் இது. பிற்காலத்தைச் சார்ந்தது. கல்லில் எழுத்துகள் உள்ளன.

1. கல்லு 2 .....லு...3 . . .நல்லு. வ.

.4 . . . தைச் செய்.....5.ஈ. .இ செ 6.பிணி..வ 7.நீங்கு 6. ம்

### பெள்ளாதி பீரங்கிமேடு-புலிக்குத்திக்கல்:

கோவை மாவட்டம், காரமடைக்கருகில் உள்ள பெள்ளாதி என்னும் சிற்றூரில் கோட்டை மாரியம்மன் கோயில் அருகில் திப்பு சுல்தானின் பீரங்கிமேடு என்னும் பெயரில் படிக்கற்களுடன் கூடிய ஒரு மேடு உள்ளது. சதுர வடிவங்களால் ஆன ஏழு அடுக்குகளை கொண்ட இப்பீரங்கிமேட்டின் தரைப்பகுதியில் ஒரு புலிக்குத்திக்கல் காணப்படுகிறது. பலகைக்கல்லில் புடைப்புச் சிற்பமாக, வீரன் ஒருவன் புலியைக் குத்துகின்ற காட்சி வடிக்கப்பட்டுள்ளது. புலியின் உருவம் உடைந்துபோயுள்ளது. புலியின் தலைப்பகுதி இல்லை. கால்கள் தெரிகின்றன. வீரன் தன் வலது கையால் புலியின் நெஞ்சுப்பகுதியில் வாளைப்பாய்ச்சுகிறான். வீரனின் தலையில் கொண்டை காணப்படுகிறது. இடையில் கச்சும், குறுவாளும் புலப்படுகின்றன. ஆனால், ஆடை அமைப்பு, அணிகலன்கள், முகம் ஆகியன நுண்மையாகத் தோன்றாமல் மழுங்கலான அமைப்பில் உள்ளன.

**து.சுந்தரம்,கோவை**

## 66:21

### பொள்ளாச்சிப் பகுதி நடுகற்கள்

#### கூள நாயக்கன்பட்டி நடுகல்:

பொள்ளாச்சி-உடுமலை சாலையில் கெடிமேடு சாலைப்பிரிவில் உடுக்கம்பாளையம் என்னும் ஊருக்குப் பிரிந்து செல்லும் சாலையில் கூளநாயக்கன்பட்டியின் சாலை ஓரத்தில் ஒரு சிறிய கோயில் உள்ளது. மலைக்காத்தாள் கோயில் என்னும் பெயரில் வழிபட்டு வருகிறார்கள்.

இக்கோயில் மேடையில் பலகைக்கல்லில் புடைப்புச் சிற்பமாக நடுகல் காணப்படுகிறது. ஆண் பெண் புடைப்பாக உள்ளதில் ஆண் தன் இரு கைகளையும் கூப்பி வணங்கிய நிலையிலும் பெண் தன் இரு கைகளை மடக்கி மேல்நோக்கி உயர்த்தியிருக்கிறாள். இருவருமே கணுக்கால் வரை ஆடைக்கட்டுடன் உள்ளனர். ஆண் இடதுபுறமாகவும், பெண்

வலதுபுறமாகவும் கொண்டை முடிந்துள்ளனர். இருவருக்கும் காதணிகள் உள்ளன. இருவருக்கும் இடையில் சிறிய உருவத்தில் விலங்கு ஒன்று காணப்படுகிறது. அதன் கொம்பின் அமைப்பைக் காண்கையில் அது ஒரு மாட்டின் கன்று எனக்கருதலாம்.

## சிஞ்சுவாடி தூண் நடுகல்

கோவை மாவட்டம், பொள்ளாச்சி வட்டத்தில் சிஞ்சுவாடி என்னும் ஊரிலுள்ள அடுக்கு நிலை நடுகல் உள்ளது. இது மாலக்கோயில் என வழங்கப்பெறுகிறது. இத்தூண் நடுகல்லில் எட்டு அடுக்கு நிலைகளில் மனித உருவங்கள் வரிசையாக நிற்கும் தோற்றத்தில் வடிக்கப்பட்டுள்ளன. எண்ணைப் பூச்சினால் ஆண் உருவங்கள், பெண் உருவங்கள் என இனம் காண இயலவில்லை. தவிர உருவங்களின் மேல் குங்குமப்பூச்சு. ஒன்பதாவது அடுக்கு தூணின் விமானச் சிகரம் போன்று வடிவமைக்கப்பட்டுள்ளது. தூணை நெருங்கிய பகுதியில், வேல்கம்புகளும், சூலங்களும், கற்களும் நிறுத்தப்பட்டுள்ளன. சுற்றுச் சுவருக்கு வெளியிலும், வேல் கம்புகளும், சூலங்களும் நிறுத்தப்பட்டுள்ளன. மாலக்கோயில் என்னும் பெயரில் மக்கள் வழிபட்டுவருகின்றனர்.

**து.சுந்தரம்,கோவை**
**சதாசிவம்,உடுமலை**

## 66:22

## திருச்சோற்றுத்துறை நான்கு நிலை நடுகல்

தஞ்சாவூர் மாவட்டம், திருவையாறு வட்டத்தில் அமைந்துள்ள திருச்சோற்றுத்துறை தேவாராப்பாடல் பெற்ற தலமாகும். இவ்வாலயத்தின் முதல் உள்சுற்று மண்டபத்தின் தென்கிழக்கு மூலையில் மூன்றடுக்கு நடுகல் ஒன்று காணப்படுகிறது. பொதுவாக கோயிலின் உள் திருச்சுற்றில் சோழர்காலத்தில் நடுகற்கல் அமைப்பது வழக்கமல்ல. ஆனால் இந்நடுகல் இக்கோயிலில் இருப்பது வரலாற்றுச் செய்தியைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது. நடுகல் கருநாடகம் மற்றும் தருமபுரி, கொங்குப் பகுதிகளில் காணப்படுகின்ற அடுக்குநிலை நடுகல்லின் அமைப்பை உடையது. நடுகல்லின் கீழ்ப் பகுதியில் ஆறு வீரர்கள் காணப்படுகின்றனர். மூவர் தரையில் போரிட்டு வீழ்ந்த நிலையில் உள்ளனர். மூவர் நின்ற நிலையில் உள்ளனர். அவர்களில் வலப்பக்கத்தில் இருக்கும் இரண்டு வீரர்கள் அம்பில் நாணேற்றி போரிடும் நிலையில் உள்ளனர். இடப்பக்கத்தில் இருக்கும் மூன்றாவது வீரர் அவருக்குக் கீழ் விழுந்திருப்பவரின் அருகில் மண்டியிட்டது போல் காட்சியளிக்கின்றார். கீழ் விழுந்தவர்களின்

கைகளிலும் கேடயங்கள் காணப்படுகின்றன.



இதனை அடுத்து மேல்பகுதியில் உள்ள இரண்டாவது நிலையில் குதிரை வீரர்கள் நால்வர் படைகளுடன் சண்டையிடும் காட்சி காணப்படுகிறது. வலப்பக்கம் குதிரைவீரர் ஒருவர் குதிரையின் மீது வாள்பிடித்து சண்டையிட அவரைத் தாக்குமாறு மூன்று குதிரை வீரர்கள் எதிரில் காட்டப்பட்டுள்ளனர். இவர்களுள் முதலாமவர் நீண்ட வாளுடன் வலப்பக்கத்தி லிருப்பவரை அவரது வாளுடன் மோதி முகத்திற்கு முகம் மோதுமாறு காட்சியளிக்கின்றார். இவர் முகத்தில் தாடி இருப்பது போல் உள்ளது. மற்ற இரு குதிரை வீரர்களும் கைகளில் குறுகிய கத்தி அல்லது சிறிய வாள் கொண்டு அதனை உயர்த்தி தாக்குகின்ற நிலையில் காணப்படுகின்றனர். இக்குதிரைகளில் முதலில் அமர்ந்திருப்பவரின் குதிரை நேர்த்தியாக அணிகலன்களுடன் இருப்பது போல் கழுத்துப் பகுதி காணப்படுகிறது. இவரே இப்போரை வழிநடத்திச் செல்பவராக இருக்கக்கூடும். இவர்களைச் சுற்றி பல படை வீரர்கள் இருப்பது போன்று வீரர்களின் கழுத்துடன் கூடிய தலைப்பகுதிகள் மட்டும் இக்குதிரை வீரர்களுக்கு இடையில் காட்டப்பட்டுள்ளன. ஒரு போர்க்களக்காட்சி இங்கு வடிக்கப்பட்டுள்ளது. வலப்பக்கம் உள்ள குதிரை வீரருக்குப் பின்னால் ஒருவரின் மார்பளவு தலை அமைப்பு கையில் ஏதோ ஒன்றை ஏந்தி இருப்பது போல் காட்டப்பட்டுள்ளது. இவர் அக்குதிரை வீரரின் பக்கத்தைச் சார்ந்தவர். அதேபோன்று பிறிதொருவர் இவரைத் தாக்கும் இடப்பக்க முதல் குதிரை வீரருக்கும் இரண்டாவது குதிரை வீரருக்கும் இடையில் காட்டப்பட்டுள்ளார். குதிரை வீரர்கள் அனைவருக்கும் தலைக்கொண்டை காட்டப்பட்டுள்ளது. குதிரைகள் ஒன்றுக்கொன்று மோதுவது போன்று அவற்றின் முன்கால்கள் தூக்கிய நிலையில் காட்டப்பட்டுள்ளன.

மூன்றாவது அடுக்கில் திரிபங்க நிலையில் நின்றிருக்கும் இரு பெண்களுக்கு இடையில் அஞ்சலி அமைப்பில் வீரர் ஒருவர்

கம்பீரமாக நிற்கின்றார். இவர் கீழ் இருக்கும் குதிரை வீரர்களில் ஒருவராக இருக்கலாம். வீரமரணம் அடைந்ததால் இவரை மேல் உலகத்திற்கு தேவ மகளிர் அழைத்துச் செல்வது போன்று காட்டப்பட்டுள்ளார். பெண்கள் இருவரின் கைகளில் ஒன்று தொங்கவிட்ட நிலையிலும் மற்ற இரு கைகள் முறையே நடுவிலுள்ள வீரரின் தோள்பகுதியைத் தாங்கி அழைத்துச் செல்வது போல் காட்டப்பட்டுள்ளது. நான்காவது அடுக்கில் திருச்சோற்றுத்துறை கோயிலின் இறைவன் லிங்க வடிவில் காட்சித் தருகின்றார். லிங்கத்திற்கு முன்பாக நந்தி அமர்ந்துள்ளது. சதுர வடிவில் இருக்கும் லிங்கத்திற்கு ஒருவர் அபிஷேகம் செய்கின்றார். அவருக்கு பின்பாக ஒருவர் அஞ்சலியுடன் அமர்ந்த நிலையில் இறைவனை வேண்டுகின்ற காட்சி அமைந்துள்ளது.போரில் வெற்றி பெற்ற பின் இறைவனை வேண்டுவதாக இது அமையலாம்.

இந்நடுகல் மூன்றாம் இராஜராஜன் காலத்தில் ஒய்சள மன்னர் வீர ராமநாதனுடன் இணைந்து பாண்டியர்களுடன் பூசல் கொண்டதை நினைவு கூர்வதாக அமைந்துள்ளது. இக்கோயிலில் உள்ள வீர இராமநாதனின் இரண்டு கல்வெட்டுகள் இதனை உறுதி செய்வதாக உள்ளன.

**சு.இராசவேலு, தஞ்சாவூர்**
**பா.அருண்ராஜ், தஞ்சாவூர்**

## 66:23

## திருக்கழுக்குன்றம் முன்குடுமீஸ்வரர் கோயில் பைரவர், சூரியன், சிற்பங்கள்



காஞ்சிபுரம் மாவட்டம் திருக்கழுக்குன்றம் வட்டத்தில் உள்ள பொன்விளைந்த களத்தூரிலுள்ள முன்குடுமீஸ்வரர் கோயிலில் சோழர் கால பைரவர் மற்றும் சூரியன் சிற்பங்கள் உள்ளன. இவ்விரு சிற்பங்களில் பைரவரின் சிற்பம் கோயில் மகாமண்டபத்தின் வடகிழக்கு மூலையில் சுவரை ஒட்டி தென்திசையை நோக்கிய வண்ணம் அமைந்துள்ளது. செவ்வக வடிவான பீடத்தின் மேல் உள்ள தாமரை இருக்கையில் இரு கால்களையும் சமபங்கத்தில் நேராக ஊன்றி, சதுர்புஜங்களில் ஆயுதம் ஏந்தி, நாய்

வாகனத்தின் முன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறது.இவரது மேல் வலக்கரம் கடக முத்திரையில் நாகம் சுற்றிய உடுக்கையை பற்றியும் மேல் இடக்கரம் பாசக்கயிற்றை கடக முத்திரையில் செங்குத்தாகவும் பிடித்துள்ளது. கீழ் வலக்கரம் முத்தலைச் சூலமான திரிசூலத் தண்டை கடக முத்திரையில் செங்குத்தாக கொண்டுள்ளது. இடது கையில் சிறிய கபாலத்தை தாங்கிய நிலையில் காட்டப்பட்டுள்ளது.பைரவரின் தலையை ஜுவால மகுடம் என்னும் அனல்முடி அலங்கரிக்கிறது. மகுடத்தின் பின்புறம் வட்டமான சிரச்சக்கரம் உள்ளது. மகுடத்தின் மேல் வலப்புறம் ஆடும் நாகம் சீற்றத்தோடு காட்டப்பட்டுள்ளது. மகுடத்தின் முன்புறம் பூரிமமும், நடுவே கபாலமும் அலங்கரிக்கின்றன. மேல் நெற்றியை சுற்றிலும் முத்தாலான நெற்றிப்பட்டம், காதுகளில் வட்டக்குழைகள் அலங்கரிக்கின்றன. கழுத்தில் கண்டச்சரம், மணிவடம், முத்துவடம், சவடி ஆகிய அணிகள் அலங்கரிக்க, இடது தோளில் சிறிதும் பெரிதுமாக கபால மாலையும், இடையில் இருந்து இடது தொடை வழியாக சரிந்து வலது முழங்கால் மீது செல்லும் உடைமணியும், மேல் வயிற்றில் கற்கள் பதித்த உதரபந்தமும், மேற்கைகளில் தோள்வளையும், முன்கைகளில் காப்பும், கால்களில் கழலும், பாதச்சரமும் பைரவர் திருக்கோலத்தை முடி முதல் திருவடி வரை அலங்கரிக்கின்றன.

பைரவரின் இடையைச் சுற்றிலும் நாக அரைஞாண் அரையணியாக அலங்கரிக்கிறது. நாகத்தின் மகுடம் கபாலம் ஏந்தி முன்கரத்தின் கீழ்புறம் தாங்கிய நிலையில் விழிப்போடு காட்டப்பட்டுள்ளது. சுடர் முடி சதுரமான பரந்த முகம், நெற்றிக்கண்ணுடன் அகன்ற நுதல், நெளிந்த புருவம், கீழ் நோக்கிய கண்கள், எடுப்பான புடைத்த மூக்கு, கடைவாய் பற்களுடன் கூடிய குவிந்த திருவாய், குறுங்கழுத்து, அகன்ற தோள், விரிந்த மார்பு, ஆடை அணியா அழகரின் கீழ் உடல், இளநகை தோன்ற முறுவலிக்கும் முகம், எடுப்பானத் தோற்றமுடன் உள்ள இவரது பின்புறம் அவரது வாகனமான நாய் நின்ற கோலத்தில் முகத்தில் சீற்றம் தெறிக்க, கூரிய பற்கள் நீண்ட வலுவான கால்கள், அளவான உடல்வாகு, மேல்நோக்கி நிற்கும் காதுகள், பக்கவாட்டில் விழிப்போடு தோன்றும் கண்கள், கூர்மையான முகம், கழுத்து வாருடன் கூடிய மணி, மேல் தூக்கிய வால், முட்டி எலும்புகளுடன் கூடிய பின்கால், கூர்மையான நகங்களையுடைய முன் கால் யாவும் இச்சிலையில் காணப்படுகின்றன. ஷேத்திர பாலரான இப்பைரவரை எழுந்தருளிவித்த கொடையாளரைப் பற்றிய குறிப்புகள்

முன்குடுமீஸ்வரர் கோயிலில் காணப்படுகின்றன. இச்சிறப்பத்தின் காலம் 13ஆம் நூற்றாண்டு.

## சூரியன்



இக்கோயில் மகாமண்டபத்தின் கீழ்திசை சுவரை ஒட்டி மேற்கு நோக்கி பத்ர பீடத்தின் மீது அமைந்துள்ள பத்ம பீடத்தின் மீது சூரியன் நேராக கால்களை ஊன்றி இரு கரங்களுடன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார்.இதன் உயரம் சுமார் 1.55 மீட்டர் அகலம் 44 செ.மீ. உடையது.

சூரியனின் இரு கரங்களும் மலர்ந்த தாமரை மலர்களுடன் கடக முத்திரையில் பிடித்துள்ளது. சூரியனின் தலையை கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. தலையின் பின்புறம் வட்டமான ஒளிவட்டம் காட்டப்பட்டுள்ளது. நெற்றியைச் சுற்றிலும் பட்டையான நெற்றிப்பட்டம் அலங்கரிக்கிறது. நீள் செவிகளில் பத்ர குண்டலங்கள் அலங்கரிக்கின்றன. கழுத்தில் கண்டசரம், அரைவட்டமான பிறை வடிவில் கழுத்தணி ஒன்றும், மணிவடம், சவடி ஆகிய அணிகலன்கள் கழுத்தையும் மார்பையும் அலங்கரிக்கின்றன. மார்பை அலங்கரிக்கும் சவடியிலிருந்து சன்னவீரம் வீழ்ந்து இரண்டாக மேல் வயிற்றில் விரிகிறது. பட்டையான உதரபந்தம் மேல் வயிற்றில் அணிசெய்கிறது.

வலது கீழ் வயிற்றில் பட்டையான பூணூல் சரிந்துள்ளது. இடையைச் சுற்றிலும் கீர்த்திமுக இடைக்கச்சை மேல் தொடை வரை அணிசெய்கிறது. இடையின் பக்கங்களில் முடிச்சுடன் கூடிய ஆடைக்கட்டு முழங்காலுக்கு கீழ்வரை இரு பிரியாக சரிந்துள்ளன. மேல் இடையைச் சுற்றிலும் வரம்புகளையுடைய அரை பட்டிகையும், இரு தொடைகள் மீது அரைவட்டமாக சரிந்துள்ள இடைவார் எனும் பட்டையான கடிபந்தமும், கால்களில் கழல்களும் இவ்வுருவை அலங்கரிக்கின்றன. முன் கைகளில் புஜங்களுக்குரிய அணிகலன்கள் காட்டப்படவில்லை. சன்னவீரம், உதரபந்தம், கடிபந்தம் போன்ற அணிகலன்கள் தட்டையாக உடலை ஒட்டி அமைந்துள்ளன. சூரியனின் முழங்கால் முட்டி எலும்புகள் கூட இச்சிறப்பத்தில்

வெளிப்பட்டுள்ளதை காணலாம். சூரியனின் பாதவிரல்கள் இச்சிற்பத்தில் நேர்த்தியாக செதுக்கப்படவில்லை. மூக்கின் முன்பகுதி சிதைந்துள்ளது. இச்சிற்பத்தின் உருவ அமைப்பு ஆடைகளின் தோற்றம் யாவும் கொண்டு இதனை முந்தைய சோழர் காலட்தில்10 ஆம் நூற்றாண்டின் சிற்பமாகலாம்.

**மா.சந்திரமூர்த்தி,சென்னை**
**பெ.லெனின்,செஞ்சி**
**பி.சத்யா,சென்னை**

## 66:24
## தட்சிணாமூர்த்தி கற்சிலை:



வேலூர் மாவட்டம் ஆர்க்காடு வட்டம் ஆர்க்காட்டுக்கு அருகில் உள்ள விளாப்பாக்கம் சமணத்தடயங்களுக்கு புகழ்பெற்றது. இவ்வூரிலுள்ள நாகநாதர் கோயிலுக்கு வெளியில் கற்பலகையில் தட்சிணாமூர்த்தி புடைப்புச் சிற்பம் உள்ளது. இதனை தேவ கோட்டத்தில் பொருத்துவதற்காகச் செதிக்கியிருக்க வேண்டும். தட்சிணாமூர்த்தி உட்குடிகாசனத்தில் பீடத்தில் அமர்ந்துள்ளார். இடது கால் தொங்கி நல்லப் பாம்பைக் கையில் பிடித்து முயலகனின் முதுகின் மீது வைத்துள்ளாண். தலையில் ஜடாபாரம் சதுர வடிவில் செதுக்கப்பட்டு விளிம்பில் சிறுசிறு சுருள் முடிகள் காட்டப்பட்டுள்ளன. தலையின் உச்சியில் கபாலமும் இரண்டு நல்லப்பாம்புகளும் அணிசெய்கின்றன. வலது காதில் ஓலை அணியும் இடது காதில் மகர குண்டலமும் உள்ளன. மார்பில் பூணூலும் வயிற்றில் உதர பந்தமும் இருக்கின்றன. வலது மற்றும் இடது பின் கைகளில் அக்க மாலையும் மானும் முறையே ஏந்தியுள்ளார். வலது முன் கை உடைந்துள்ளது. இடது கை ஓலைச் சுவடியை ஏந்திக் கொண்டு இடது தொடை மீது வைத்திருக்கிறது. தட்சிணாமூர்த்தியின் முகம் தேய்ந்திருக்கிறது. எனினும் இச் சிற்பம் 11-ஆம் நூ. சார்ந்தது.

**ம.காந்தி,வேலூர்.**

## சேலம் பகுதியில் சில நடுகற்கள்

### வெள்ளரிவெள்ளி நடுகற்கள்:

சேலம் மாவட்டம், இடைப்பாடி வட்டம், வெள்ளரிவெள்ளி கிராமத்தின் இடைப்பாடி-நெடுங்குளம், சித்தார்-பவானி சாலைகளின் சந்திப்பிலிருந்து சித்தார் சாலையில் நானூறு மீட்டர் தொலைவில், சாலையின் இடதுபுற ஓரத்தில் ஒரு புடைப்புச் சிற்பக்கல் உள்ளது. இதன் அளவுகள்: 80x60X10 செ.மீ. நேர்த்தியான ஆடை அணிகலன்களுடன் ஆணுடன் பெண்கள் இருவர் கைகளைக் கூப்பிய நிலையில் இச்சிற்பத்தொகுதி உள்ளது. இடது புறத்திலும் வலது புறத்திலும் முறையே பணப்பை அல்லது பொருள் சேமித்து வைக்கும் உலோகக்கலம் வைக்கப்பட்டுள்ளது.



சிற்பத்திலுள்ள மூவரும் முடியை வலப்புறம் கொண்டை போட்டு சாய்த்துள்ளனர். மூவரின் காது, கழுத்துக்களில் அணிகலண்கள் உள்ளன. மூவரும் பின்னங்கைகளில் காப்புகள் அணிந்துள்ளனர் மணிக்கட்டுகளில் வளையல்காப்பு உள்ளன. பெண்கள் மார்புக்கச்சை அணிந்துள்ளனர். அவர்களின் இடையிலிருந்து கணுக்கால் வரை அணிந்துள்ள சேலைகள் மடிப்புகள் கொண்டதாக உள்ளன. ஆணின் இடுப்பிலிருந்து கணுக்கால் வரை கீழாடை சரிந்துள்ளது; இடுப்பில் கட்டி முடிந்துள்ள அங்கவஸ்திரத்தின் ஒரு நுனி இடது தொடையில் படிந்துள்ளது. மூவரும் கால்களில் சிலம்பு, தண்டை அணிந்துள்ளனர். இச்சிற்பத்தின் காலம்16-17ஆம் நூற்றாண்டகலாம்.

புலிக்குத்தி நடுகள் மேற்குறிப்பிட்ட நான்கு சாலைகளின் சந்திப்பிலிருந்து மேற்கே நெடுங்குளம் சாலையில் 300 மீட்டர் தொலைவில் ஒரு வீட்டின் முன்புறம் விளைநிலத்தை ஒட்டி புலிக்குத்தி நடுகல் உள்ளது. இதன் அளவு 105X130X10 செ.மீ. வீரன் ஒருவன் வில்லை நாணேற்றி அம்பைத் தொடுத்து முறுக்கிய மீசையுடன் நம்மைப் பார்க்கும் நிலையில் வடிவமைக்கப்

பட்டுள்ளான். அவன் தலை முடியைக் கொண்டையாக்கி முடிந்துள்ளான். அவன் காதுகளில் அணிகள் உள்ளது. இடுப்பில் வாள் கொண்டுள்ளான். இடுப்பிலிருந்து முழங்கால் வரை ஆடை அணிந்து, கணுக்காலில் தண்டையும் பாதத்தின் மேல் சிலம்பும் அணிந்துள்ளான். அவனது கால்களின் இடையே இடைக்கச்சு தொங்குகிறது. புலியின் முன்னங்கால்கள் தூக்கியும், பின்னங்கால்கள் நிலத்தில் ஊன்றி வாயைத் திறந்தபடி பாயும் நிலையில் உள்ளது. அதன் வால் மேல் நோக்கித் திரும்பியுள்ளது. தற்போது இந்தக் கல் உள்ள இடத்திலிருந்து சுமார் நூறு அடி தூரத்தில் இவ்வூருக்கான மண் கோட்டை ஒன்று இருந்து அழிந்துள்ளது.

**செட்டிமாங்குறிச்சி புலிகுத்திக்கல்:**

சேலம் மாவட்டம், இடைப்பாடி வட்டத்தில், இடைப்பாடியிலிருந்து எட்டு கி.மீ. தூரத்தில் உள்ளது செட்டிமாங்குறிச்சி. அவ்வூரின் நெடுஞ்சாலையிலிருந்து தென்கிழக்கில் முக்கால் கி.மீ. தூரத்தில் மேற்குப் பார்த்து உலகநாத ஈஸ்வர் கோயில் உள்ளது. அக்கோயிலில் தெற்குப்புறத்தில் கோட்டைமேடு எனும் பகுதி உள்ளது. கோயிலிலிருந்து தென்கிழக்கில் நூறு அடி தூரத்தில் ஒரு நடுகல் வைக்கப்பட்டுள்ளது. இதன் உயரம் 100x100x10 செ.மீ. ஆகும். இக்கல்லிலுள்ள சிற்பத்தில் ஒரு வீரன், புலியுடன் சண்டையிடும் காட்சி வடிவமைக்கப் பட்டுள்ளது. கல்லின் மேற்புறம் உடைந்துள்ளது. வீரன் மற்றும் புலியின் தலைப் புறங்கள் காணவில்லை. மீதமுள்ள காட்சியில், புலி தனது பின்னங்கால்களை நிலத்தில் ஊன்றியவாறு நின்று, முன்னங்கால்கள் இரண்டையும் உயர்த்தி வைத்து நிற்கிறது. புலியை நோக்கிய வீரனின் கைகளில் ஒன்று புலியின் கழுத்திலும், மற்றொன்று புலியின் முன்னங்கால் ஒன்றையும் பற்றிப் போரிடும் நிலையில் அமைந்துள்ளன. வீரனின் இடையில் வாள் உள்ளது. அவன் இடுப்பிலிருந்து கட்டியுள்ள ஆடை தொடை வரை உள்ளது. இடுப்பு வேட்டி கால் தொடைகளின் குறுக்கே மடித்துக் கட்டி இடுப்பின் பின்னால் செருகியிருப்பதாகத் தெரிகிறது. இச்சிற்பம் 17ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகலாம்.

**மு.அங்கமுத்து,இடைப்பாடி**

# கருத்துப்பரிமாற்றம்

## 67. 'கல் கஞ்சணம்' ஒரு மீளாய்வு

ஐராவதம் மகாதேவன், சென்னை

திருநெல்வேலி மாவட்டத்தில் மறுகால்தலை என்ற சிற்றூரில் பூவிலுடையார் மலையில் 1906-ம் ஆண்டு ஒரு குகைக் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டது. (ARE 407/1906 (படம்-1)). இக்கல்வெட்டுக்குப் பல தனி சிறப்புகள் உண்டு. இக்கல்வெட்டிலிருந்துதான் தமிழகத்தின் பண்டைய குகைக் கல்வெட்டுகள் பிராமி எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன என்று முதலில் தெரியவந்தது. தமிழ் பிராமி கல்வெட்டுகளில் இதுவே அளவில் மிகவும் பெரியது; ஒவ்வொரு எழுத்தும் ஒரு முழ உயரம் (40 செ.மீ.); பதினேழே எழுத்துக்களாலான இக்கல்வெட்டு ஒரே வரியில் ஆழமாகப் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் மொத்த நீளம் 426 செ.மீ. ஆகும்.

**கல்வெட்டின் வாசகம் வருமாறு:**

**அ. வெண காஸிபான குடுபிதா காலா காஞசாணம**

**ஆ. வெண் காஸிபன் குடு[ப்]பி[த்]த கல் கஞ்சணம்**

முதல் வரி (அ) கல்வெட்டில் உள்ளவாறும், இரண்டாவது வரி (ஆ) புரிதலுக்காக தமிழ் நடையிலும் பெயர்த்துத் தரப்பட்டுள்ளன. 'வெண் காசிபன் என்பவன் கொடுப்பித்த கல் கஞ்சணம்' என்பது கல்வெட்டின் பொருள்.

எளிதில் புரியும் இக்கல்வெட்டில் 'கல் கஞ்சணம்' என்ற சொல் மட்டும் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாகவே பொருள் விளங்காமல் இருந்துள்ளது. இதை இக்கல்வெட்டின் மூன்றாவது சிறப்பம்சம் எனலாமா?

இக்கல்வெட்டை நேரில் சென்று பலமுறை ஆய்வு செய்தும், மலை மீது சாரம் கட்டி அதில் அமர்ந்து கொண்டு ஒவ்வொரு எழுத்தாக விளம்பல் (tracing) செய்தும் *Early Tamil Epigraphy* (2003) என்ற நூலில் பதிப்பித்திருக்கிறேன் (கல்வெட்டு எண் 14). இப்பதிப்பிலும், நூலின் இரண்டாவது பதிப்பிலும் (2014), 'கல் கஞ்சணம்' என்ற சொல்லுக்கு அடிக்குறிப்பில் 'இதன் பொருள் சரியாக விளங்கவில்லை; ஒருக்கால் குகையின் ஒரு கட்டுமானப் பகுதியைக் குறிக்கலாம்' என்றே கூறியிருக்கிறேன்.

இந்நிலையில் இவ்ஆண்டுத் தொடக்கத்தில் சிந்துவெளி எழுத்துகளைப் பற்றிய என் ஆய்வின் ஒரு பகுதியாக திராவிட வேர்ச்சொல் ஒப்பியல் அகராதியை (*Dravidian Etymological Dictionary, 1984*) பார்க்க நேர்ந்தது. அப்போது கஞ்சணம் என்ற சொல்லுக்கு ஒரு புது விளக்கம் கிடைத்து பெருமகிழ்ச்சி அடைந்தேன்.

மேற்கூறிய அகராதியில் 'கசிவு' என்ற பொருளில் பல திராவிட மொழிகளில் உள்ள சொற்கள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன (எண். 1091). சிற்சில பயன்கள் கருதி இங்கு அந்தச் சொல் தொகுப்பு அகராதியில் உள்ளபடியே ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ளது (படம்-2).

தமிழில் கசணை 'ஈரம், ஈரப்பதம்' என்ற பொருளில் பெயர்ச்சொல்லும், கசி 'ஈரம் கசிந்து வழிதல்' என்ற பொருளில் வினைச்சொல்லும் அகராதியில் தரப்பட்டுள்ளன. அவற்றுக்கு நேரான கஸி என்ற கன்னட மொழிச்சொல்லுக்கு 'வழிந்து ஓடுதல்' என்ற பொருளும் தரப்பட்டுள்ளது. இச்சொற்களுடன் இணைத்துப் பார்க்கும்பொழுது கஞ்சணம் என்றால் 'நீர்க் கசிவு வழிந்து ஓடும் தடம்' என்ற பொருள் நேராகக் கிடைக்கின்றது. மேலும் கல் கஞ்சணம் என்ற சொல் இந்தக் குகையின் முகட்டில் வெட்டப்பட்டுள்ள மிக நீளமான சல தாரையையே குறிக்கிறது என்ற விளக்கமும் கிடைக்கின்றது. வெண் காசிபன் இந்தச் சல தாரையை வெட்டுவித்ததையே இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

குகையின் முகட்டில் உள்ளது 'கல் கஞ்சணம்' என்றால் வேறு வகையான கஞ்சணம் உண்டா என்ற கேள்வி எழுகிறது. வீட்டின் மேற் கூரையில் பெய்யும் மழை நீர் வீட்டுக்குள் கசிவதைத் தடுக்க ஓடுகளாலான சல தாரைகளை அமைக்கின்றனர்; அதேபோன்று வீட்டிலிருந்து கழிவு நீரை வெளியேற்ற சுடுமண்ணாலான கலங்களையும் குழாய்களையும் முற்காலத்தில் பயன்படுத்தியது அகழாய்வுகளின் மூலம் தெரிய வருகின்றது. கல்லில் வெட்டப்பட்டுள்ளது கல் கஞ்சணம்; இது சுடுமண்ணாலான சல தாரையிலிருந்து வேறானது என்பதை உணர்த்தவே இக்கல்வெட்டில் 'கல்' என்ற அடைமொழி சேர்க்கப்பட்டுள்ளது.

அரை நூற்றாண்டுக்கும் மேலாக நான் தேடிக்கொண்டிருந்த 'பொருள்' என் வாழ்நாளிலேயே கிடைக்கப்பெற்றதை ஒரு பெரும் பேறாகக் கருதுகிறேன். எனக்குக் கிடைத்த இந்தப் புதிய விளக்கத்தை ஏனைய கல்வெட்டாய்வாளர்களுடன் ஆவணம் இதழ் மூலமாகப் பகிர்ந்து கொள்வதில் பேருவகை அடைகிறேன்.

படம்:1. மறுகால்தலை குகைக் கல்வெட்டு

1091 Ta. kacaṉai

1091 *Ta.* kacaṉai dampness, moisture; kaci (-v-, -nt-) to ooze out (as moisture from a wall), perspire, weep; kacivu ooze, dampness, perspiration, weeping; kacikacippu being damp, dark, moist to the touch. *Ka.* kasi to ooze, trickle, flow; *n.* drizzling, fine rain. Kuwi (S. Su.) kassa, (Isr.) kasa blood. / Cf. Pkt. kasavva- wet, damp. DED(S) 918.

படம் 2: *Entry No.1091, Dravidian Etymological Dictionary,1984.*

# 68. பேட்டைவாய்த்தலை சிவன் கோயில் கல்வெட்டுகள் பற்றி ஒரு குறிப்பு

சு.இராசவேலு,தஞ்சாவூர்

அன்மையில் பேட்டைவாய்த்தலை பகுதியில் பட்டயக் கல்வி மாணவர் ஆய்வேட்டிற்காக கள ஆய்வுகள் மேற்கொண்டபொழுது பேட்டைவாய்த்தலை உய்யகொண்டான் கால்வாய்ப்பகுதியில் மண்மேடிட்டுப் புதைந்தழிந்த கோயில் ஒன்றின் எச்சங்களுடன் கற்பலகைகள் இரண்டில் முழுமையான கல்வெட்டு ஒன்றையும் உடைந்த துண்டுக்கல்வெட்டு ஒன்றையும் புதியதாகப் பார்க்க நேர்ந்தது. இவ்விதழில் அவ்விரண்டு கல்வெட்டுகளும்வெளியிடப்பட்டுள்ளன. *(6.பேட்டைவாய்த்தலைக்கல்வெட்டுகள்)* இவ்விரண்டு கல்வெட்டுக்களைப் படிஎடுத்தபின் பேட்டைவாய்த்தலை ஊர்ப்பகுதியில் அமைந்துள்ள (மத்தியார்ஜுனேஸ்வரன்) சிவன் கோயிலின் கல்வெட்டுக்களைப் பார்க்கச் சென்றபொழுது அக்கோயிலில் இருந்த கல்வெட்டுகள் முழுமையாக சுண்ணாம்பு பூச்சில் அழிந்து தற்பொழுது அங்கொன்றும் இங்கொன்றுமாக கருவறை மண்டப வெளிப்புறச் சுவர்களில் சில எழுத்துக்கள் மட்டுமே காணுபடி உள்ளன. கருவறை முன்மண்டபத்தின் பக்கவாட்டுச்சுவர்களில் நுழைவு வாயிலுக்கு வல, இடச் சுவர் பகுதிகளில் கிழக்கு நோக்கிய நிலையில் இரண்டு கல்வெட்டுக்களைச் சுண்ணாம்பு தேய்த்து முழுமையாக வைத்துள்ளனர்.

அவ்விரண்டு கல்வெட்டுக்களை இந்தியத் தொல்லியல் துறையோ அல்லது அப்பகுதியில் பெரும்பாலும் கள ஆய்வுகள் மேற்கொண்டு வரும் இராசமாணிக்கனார் வரலாற்று ஆய்வு மையமோ கண்டுபிடித்து ஏற்கனவே பதிப்பித்திருக்கும் என்ற மனநிலையோடு இவ்விரண்டு கல்வெட்டுகளையும் கண்படி மற்றும் ஒளிப்படம் மட்டும் எடுத்து வந்து படித்தெழுதி அவை முன்பே பதிப்பிக்கப்பட்டதா? என முன்பதிப்புகளை ஆய்வு செய்தபொழுது அவ்விரண்டு கல்வெட்டுகளும் எந்த நிறுவனத்தாலும் முன்னர் பதிப்பிக்கப்படவில்லை என்ற அகமகிழ்ச்சியில் பேராசிரியர் சுப்பராயலு அவர்களுக்கு நான் படித்ததை அனுப்பி வைத்ததோடு அக்கல்வெட்டில் வரும் நாடு குறித்தும் பேசிய பொழுது அக்கல்வெட்டுகளைத் தாம் பல ஆண்டுகளுக்கு முன் பார்த்த நினைவு இருப்பதாகவும் ஆனால் அதனை எதிலும் பதிப்பிக்கவில்லை என்றும் அது குறித்து தன் குறிப்பில் தேடுவதாகவும் தெரிவித்திருந்தார்.

இரண்டு நாட்கள் கழித்து பேராசிரியர் அவர்களிடமிருந்து அழைப்பு வந்தது. ஏறக்குறைய 36 ஆண்டுகளுக்கு முன் நொபொரு கராஷிமா அவர்களுடன் இணைந்து காவேரி பகுதியிலுள்ள ஊர்களைக் குறிப்பாக அல்லூர் மற்றும் ஈசான மங்கலம் குறித்த ஆய்விற்காக கள ஆய்வுகள் மேற்கொண்ட பொழுது இக்கல்வெட்டுக்களைப் பார்த்தாகவும் தனது நாட்குறிப்பேட்டில் அதனை எழுதி வைத்திருப்பதாகக் கூறியதுடன் அந்நாட்குறிப்பு ஏட்டின் பக்கங்களையும் எனக்கு அனுப்பி வைத்தார்.

அக்காலத்தில் திருச்சிராப்பள்ளியில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் பணியாற்றிய மண்டலப் பதிவு அலுவலராக இருந்த திரு. அப்துல் மஜீத்துடன் காவேரிக் கரைப்பகுதியிலுள்ள பல இடங்களுக்கும் பேராசிரியர் சுப்பராயலு அவர்கள் வார விடுமுறை நாட்களில் மிதிவண்டியிலேயே செல்வது வழக்கமாம். இவ்வாறு அப்பகுதியில் நேரிடையாகக் கள ஆய்வு செய்து பல புதிய தரவுகளைக் கண்டுபிடித்ததை அவர் நினைவு கூர்ந்தார். தாம் கல்வெட்டுகளைப் படிக்க, திரு. அப்துல் மஜீத் அவர்கள் குறிப்புகள் எழுதுவார் என்றும் அவ்வாறு தான், இந்த இரு கல்வெட்டுக்களையும் அவர் குறிப்பு எடுத்ததாகவும் குறிப்பிட்டார். சில நேரங்களில் மாற்றாக திரு அப்துல் மஜீத் படிக்க பேராசிரியர் குறிப்புகள் எடுப்பாராம்.

திரு. அப்துல் மஜீத் அவர்கள் திருச்சிப்பகுதியில் அனைத்து கல்வெட்டுத் தொல்லியல் ஆய்வாளர்களுடனும் இணைந்து பல கள ஆய்வுகள் மேற்கொண்டு இளைஞர்களை ஊக்கப்படுத்தும் தன்மை மிக்கவர். இராசமாணிக்கனார் வரலாற்று ஆய்வு மையத்தின் இயக்குநர் டாக்டர் கலைக்கோவன் அவர்களுடன் இணைந்தும் பல இடங்களுக்கும் சென்று புதிய கல்வெட்டுக்களையும் தொன்மங்களையும் கண்டறிந்தவர். திருத்தியமலைப் பகுதியில் தாம் பார்த்த கல்வெட்டுக்களைப் படி எடுத்துப் பதிப்பிக்கும்படி எனக்கும் கூறியவர். அம்மலையில் பல கல்வெட்டுக்களைப் படி எடுத்தும் இதுவரை படி எடுக்கப்படாத பெரிய கல்வெட்டொன்று மலைச்சரிவில் இருப்பதால் 25 ஆண்டுகளுக்கு முன்பு படி எடுக்காமல் விட்டு வந்தது எனக்கு இப்பொழுதும் நினைவில் உள்ளது. இது போன்றே எக்காரணத்தாலோ கண்படி எடுக்கப்பட்ட பேட்டைவாய்த்தலைக் கல்வெட்டை அறிஞர்கள் இருவரும் பார்த்து தங்களது குறிப்பில் வைத்திருப்பதே ஒரு சிறப்பான நிகழ்வு. இது போன்று பல கோயில்களில் கல்வெட்டுக்கள் இன்னும் பல, கண்டறிந்தும் பதிப்பிக்கப்படாமல் இருக்கின்றன

என்ற கருத்தை பரிமாற வேண்டும் என்றே இக்கல்வெட்டுக்களை பேராசிரியர் சுப்பராயலு மற்றும் மேனாள் இயக்குநர் திரு அப்துல் மஜீத் அவர்களின் பெயரிலேயே இவ்விதழில் கல்வெட்டுப் பகுதியில் வெளியிடுவதில் (**16.பேட்டைவாய்த்தலை சிவன்கோயில் கல்வெட்டுகள்**) மகிழ்ச்சி அடைகின்றோம்.

**36 ஆண்டுகளுக்கு (1980-81) முன்பு எடுக்கப்பட்ட கண்படி திரு.அப்துல் மஜீத் அவர்களின் கையெழுத்தில்-நாட்குறிப்பு**

# 69. புதிய வெளியீடுகள்

**கங்கைகொண்ட இராஜேந்திர சோழன் ஆயிரமாவது ஆண்ட விழாக்கருத்தரங்கக் கட்டுரைகள், பதிப்பாசிரியர்கள் இல.தியாகராஜன், பெஇரவிச்சந்திரன், கங்கை கொண்ட சோழபுரம் மேம்பாட்டுக் குழுமம் - 2017: பக்கம்.504, விலை ரூ.750, ISBN:978-93-5001-519-3, மின்னஞ்சல்: erkomagan@gmail.com.**



சோழப்பேரரசன் இராஜேந்திர சோழன் அரியணையேறிய ஆயிரமாவது ஆண்டு தொடர்பாக 2014 ஆம் ஆண்டு ஜூலை திங்கள் 24,25 ஆகிய நாட்களில் நிகழ்ந்த கருத்தரங்கக் கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல். இப்பெருமன்னனின் வாழ்க்கை,போர்முனை, வணிகம், நிருவாகம், கீழ்த்திசை நாடுகள், பொது என பதினொரு தலைப்புகளில் 80 கட்டுரைகள் இந்நூலில் தொகுத்தளிக்கப் பட்டுள்ளன. விழாநிகழ்வுகளும் படங்களும் இடம் பெற்றுள்ளன. இவ்விழா கருத்தரங்கம் மற்றும் நூல் வெளியீடு மேற்கொண்ட கங்கைகொண்ட சோழபுரம் மேம்பாட்டுக் குழுமம் அதன் தலைவர் திரு ஆர். கோமகன் இந்நூல் தொகுப்பாசிரியர்கள் பதிப்பாசிரியர்கள் முனைவர் இல. தியாகராஜன், முனைவர் பெ.இரவிச்சந்திரன் ஆகியோர் பாரட்டுக் குரியவர்கள்

மாணவராகக் கங்கை கொண்ட சோழபுர அகழாய்வில் பங்கு பெற்ற இந்நூல் பதிப்பாசிரியர்களில் ஒருவரான இல.தியாகராஜன் இக்கோயிலிடத்தும், இம்மன்னனிடத்தும் வரலாற்றுக் கோணத்தில் பெரும் பற்றும் கொண்டு அன்றைய மாவட்ட ஆட்சித்தலைவர்கள், இன்றைய கங்கைகொண்ட சோழபுரம் மேம்பாட்டுக் குழுமத் தலைவர் ஆகியோருடன் நட்புக் கொண்டு பெரும் சமூக வரலாற்று எழுச்சியை ஏற்படுத்தி இந்நூலை வெளிக்கொணர்வதில் வெற்றி பெற்றுள்ளார். ”வெற்றித்தந்த கலைச்சின்னங்கள்” கட்டுரையில் மாளிகை மேடு அகழாய்வுக் கட்டுரைகளில் தரப்பட்டும் விரிவான செய்திகள் மற்றும் படங்கள் , கங்கைகொண்ட சோழபுரத்துச் சிற்பங்கள் அவற்றின் படங்கள் இராசேந்தர சோழனின் கல்வெட்டுகளின் பட்டியல்கள். சோழர் ஆட்சி நில அளவு முறைகள் குறித்த கட்டுரை எனப் பல செய்திகளும் ஒரு வரலாற்று உணர்வை

முன்னெடுக்கும் இக்கட்டுரைக் தொகுப்பு, பரவலாகத் தமிழகமெங்கும் ஆர்வலர்களிடம் சென்றடையும் போது தொல்லியல் சின்னங்களை அறிதல் - கற்றல் - பாதுகாத்தல் என்ற உணர்வு மேம்பட்டு நிலை பெறும் என்று கருதலாம்.

**சு.இராசகோபால், சென்னை**

**பெரம்பலூர் மாவட்டக் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் இல.தியாகராஜன் - 2017, காமரசவல்லி பதிப்பகம், அரியலூர் - 621173, தொலைபேசி எண்.9443765979, ISBN.978-93-5001-524-7, பக்கம் 358, நூல் அளவு 8x11, விலை ரூ.600**




வட்டார ஆய்வுகளுக்கு அடிப்படையான தரமிக்க கல்வெட்டுத்தொகுப்பாக இந்நூல் அமைந்துள்ளது. கடந்த முப்பது ஆண்டுகளாக இந்நூலாசிரியர் கள ஆய்வு மேற்கொண்டு கண்டறிந்து படித்து ஆவணம் இதழ்களில் தொடர்ந்து வெளியிட்டுவந்த கல்வெட்டுப் பாடங்கள் இதனில் உள்ளன. *69* ஊர்களின் குறிப்பு அவ்வூர்களில் கிடைத்த *348* கல்வெட்டுகள் இதனில் நல்ல முன்குறிப்புகளுடனும் நல்ல முன்னுரையுடனும் அமைந்துள்ளது. இக்கல்வெட்டுகளில் *229* புதிதாக இந்நூலசிரியரால் வாசிக்கப்பட்டவை *16* சோழ மன்னர்களின் *212* கல்வெட்டுகள் இத் தொகுப்பில் முன்னிலை வகிக்கின்றன. பிற்காலப்பாண்டியரின் 20 கல்வெட்டுகளும் விஜயநகர, நாயக்கர், பாளையக்காரர், பட்டையக்காரர், ஜமீன்தார் எனப் பிற கல்வெட்டுகள் இதனில் இடம் பெற்றுள்ளன.

சிறப்பானவை என்று ஆசிரியர் கருத்தும், சொற்களும், சொற்றொடர்களும், இந்நூலில் தடித்த எழுத்தில் அச்சிடப்பட்டுள்ளன. இம்மாவட்டம் சோழர், பாண்டியர் பேரரசுகளின் ஆட்சிப்பரப்பில் மையப் பகுதியில் அமையாது ஓரப்பகுதியில் முன்னிலை வகித்த சிற்றரசுகளின் கல்வெட்டுகளின் மிகுதியாலும் இத்தொகுப்பில் சமூகச் செய்திகள் மிகுதியாகக் கிடைப்பது குறிப்பிடத்தக்கதாகும்

சமூக அமைப்பாக பிராமணர், சித்திரமேழிப் பெரியநாட்டார், யாதவ குலத்தலைவர், நத்த மக்கள், சதிரமுடித்தலைவரான மலையமான்கள், சம்புவர், குலபதிப்பன்னாட்டர், பதினெண்

விஷயத்தார், காயங்குடி கண்குடைய அந்தணர், இடங்கை 98 கலனை என இன்றைய சமூகப்பிரிவுகளை இந்நூல் படம் பிடித்துக் காட்டுகிறது. இவர்கள் ஒருவற்கு வந்த நன்மை, தீமை அனைவருக்கும் ஆவதாகவும் என்று ஒப்புக் கொண்டமை பல சமூகப்பிரிவுகளும் அவற்றிற்கிடையே பிணக்குகளைக் குறைக்க எடுத்த நடவடிக்கைகள் பற்றியும் குறிப்பிடுகின்றன.

திருமாளிகைத் திருப்பணிக்கு தச்சக் கூலிக்கு இட்ட காசு 500 என்று ஒரு கல்வெட்டு (எண்.292) குறிப்பிடுவதுடன் பல கல்வெட்டுகளில் அம்பலம் திருவீதி, திருப்பூப்பலகை, திருநந்தவனம் அமைத்த செய்திகளும் பிள்ளைப்பேறு வேண்டி பிரார்த்திக்க பிள்ளைப்பேறு கிடைத்து பொற்பட்டம் செய்தளித்த செய்தியும் சுவையான செய்திகளாக உள்ளன.

மொத்தத்தில் இத்தொகுதியில் உள்ள கல்வெட்டுகள் சுருக்கமான சிறிய கல்வெட்டுகளே எனினும் செய்திகள் மிக அதிகம். முகநூல் பயன்பாட்டில் இன்று பல இடங்களிலும் களப்பணிகளாற்றிச் செய்திகளைத் தரும் தரவுகளை ஆவணப்படுத்தி வரும் இன்றைய சமூகத்தினருக்கு இக்கல்வெட்டுத் தொகுப்பு ஆக்கமும் ஊக்கமும் தரும் ஒரு முன்னோடி நூலாக அமையும் என்று எதிர்பார்க்கலாம்.

**சு.இராசகோபால்,சென்னை**

# தொல்லியல் கழக 26ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் செயலர் அறிக்கை

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 26 ஆம் ஆண்டுக் கருத்தரங்கமும் ஆவணம்-27ஆம் இதழ் வெளியீட்டு விழாவும் கிருஷ்ணகிரி மாவட்டம், காவேரிபட்டினம் S.M.கல்யாணி மஹாலில் 23,24-07-2016 ஆகிய நாட்களில் சிறப்பாக நடைபெற்றன. இக்கருத்தரங்கை பெண்ணையாறு தொல்லியல் சங்கத்தைச் சார்ந்தவரும் தொல்லியல் கழக உறுப்பினருமான திரு. சுகவன முருகன் அவர்கள் உள்ளூர் செயலாரக இருந்து சிறப்புற நடத்தினார். தொடக்க விழா நிகழ்ச்சி 23.07.2016 அன்று காலை 10 மணிக்குத் தொடங்கியது. வரவேற்புரையை உள்ளூர் செயலர் திரு. சுகவன முருகன் அவர்கள் நிகழ்த்த தலைமையுரையை கிருஷ்ணகிரி மாவாட்ட வரலாற்று ஆய்வு மையத்தைச் சார்ந்த திரு கே.ஏ. மனோகரன் அவர்கள் நிகழ்த்தினார்கள். தொடக்கவுரையை பேராசிரியர் எ. சுப்பராயலு ஆற்றினார்கள். ஆவணம் இதழை வெளியிட்டு சிறப்புரையை முனைவர் வே.க.சண்முகம் இ.ஆ.ப (ஓய்வு) அவர்கள் நிகழ்த்தினார். தொல்லியல் கழகத்தின் துணைத்தலைவர் திரு. செந்தீ நடராஜன் அவர்கள் தலைவர் உரை நிகழ்த்த வெளியிடப்பட்ட ஆவணம் -27ஆவது இதழை திரு.தியோடர் பாஸ்கரன், கலை வல்லுநர் அவர்கள் பெற்றுக்கொண்டார். இந்நிகழ்வில் தொல்லியல் கண்காட்சி அரங்கங்கள் பொதுமக்களின் பார்வைக்காகஅமைக்கப்பட்டன. இதனை சி.கதிரவன் இ.ஆ.ப., அவர்கள் திறந்து வைத்து வாழ்த்துரை வழங்கினார். விழா நிகழ்வுகளைத் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிவாளர் தெ.விஞ்ஞானம் அவர்கள் முன்னின்று நடத்தினார். தொடக்கவிழாவின் நிறைவாக நன்றியுரையைத் தொல்லியல் கழகத்தின் செயலர் பேரா.சு. இராசவேலு அவர்கள் நிகழ்த்தினார். இக்கருத்தரங்கில் தமிழ்நாட்டு எழுத்து வளர்ச்சி, புதுக்கோட்டை பாறை ஓவியங்கள் காஞ்சிபுரம் உலகளந்த பெருமாள் செப்பேடுகளும் கல்வெட்டுகளும் ஆகிய நூல்கள் வெளியிடப்பட்டன இதனைத்தொடர்ந்து கீழ்கண்ட அமர்வுகள் இவ்விரண்டு நாள் கருத்தரங்கில் நடந்தன.

## கருத்தரங்க அமர்வுகள்

### 23.07.2016 முதல் அமர்வு 12.30 - 01.30

*தலைமை முனைவர்:* **தி.சுப்பிரமணி,** *அவர்கள்*
*தொல்லியல் அலுவலர், (ஓய்வு)*
*தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை*

### இரண்டாம் அமர்வு 2.30-03.30

*தலைமை* : *முனைவர்* **டி.அருண்ராஜ்** *அவர்கள்*
*கண்காணிப்பு தொல்லியாலாளர்,*
*இந்திய தொல்லியல் அளவீட்டுத்துறை,*
*பெங்களூர்.*

### பத்மஶ்ரீ ஐயாராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவிய தி.நா.சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு

**04.00-5.00**

*தலைமை* : **கோ.விஜயவேணுகோபால்** *அவர்கள்,*
*பிரெஞ்சு இந்தியக் கழகம் புதுச்சேரி*

*முன்னிலை* : **கே.எஸ்.தணிகாசலம்** *அவர்கள்,*
*தொழில் அதிபர் காவேரிபட்டினம்*

*சொற்பொழிவாளர் :* **பேரா. செ.வை.சண்முகம்** *அவர்கள்*
*மேனாள் தலைவர், மொழியியல் துறை,*
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்*

### 24.07.2016 மூன்றாம் அமர்வு 10.00-11.30

*தலைமை* : *பேராசிரியர்* **ந.அதியமான்** *அவர்கள்*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்*

### கோவிலூர் ஆதினம் அறக்கட்டளைச் சொற்பொழிவு

**11.30- 12.30**

*தலைமை* : **சு.இராசகோபால்** *அவர்கள்*
*கல்வெட்டாய்வாளர்(ஓய்வு),*
*தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை*

முன்னிலை : **பி.விஜயராஜ்,** தொழிலதிபர், காவேரிப்பட்டினம்

சொற்பொழிவாளர். பேராசிரியர் **இல.தியாகராஜன்** அவர்கள்

மேனாள் முதல்வர் அரசு கலைக்கல்லூரி அரியலூர்

**சிறப்புச் சொற்பொழிவு 12.00-1.30**

தலைமை : முனைவர் **வெ.வேதாசலம்** அவர்கள் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை ஓய்வு

சொற்பொழிவாளர் : திரு. **அமர்நாத் இராமகிருட்டிணா,** அவர்கள், தொல்லியல் கண்காணிப்பாளர், இந்தியத் தொல்லியல் துறை சென்னை வட்டம்

**நான்காம் அமர்வு 2.30 -3.30**

தலைமை : திரு. **பொன்.வெங்கடேசன்,** அவர்கள்

**பொதுக்குழு 3-30 -4.00**

**நிறைவு விழா 4-00- 5.00**

தலைமை : **மங்கை ராகவன்** துணைத் தலைவர், தமிழகத் தொல்லியல் கழகம்

சான்றிதழ் வழங்கியவர் : பேராசிரியர் **எ.சுப்பராயலு** அவர்கள்

வாழ்த்துரை : முனைவர் **ர.பூங்குன்றன்** அவர்கள் பதிவு அலுவலர் ஓய்வு, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

முனைவர் **சொ.சாந்தலிங்கம்** அவர்கள் பதிப்பாசிரியர் ஆவணம்

நன்றியுரை : பேராசிரியர் **சு.இராசவேலு** செயலர், தமிழகத் தொல்லியல் கழகம்

இக்கருத்தரங்கில் கிருஷ்ணகிரி மாவட்டம் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதி கல்லூரி மாணவகளுக்கு முனைவர் சு. இராசகோபால் அவர்கள் தலைமையில் கல்வெட்டுப் பயிற்சி வழங்கப்பட்டு சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. இப்பயிற்சியை பேராசிரியர் எ. சுப்பராயலு, திரு. க.குழந்தைவேலன், முனைவர். ர. பூங்குன்றன், முனைவர் தி.சுப்பிரமணி ஆகியோர் அளித்தனர்.

**சு.இராசவேலு**
செயலர்

# நன்றி

***ஆவணம்-28 இதழில் வெளிவந்துள்ள கீழ்க்கண்ட கண்டுபிடிப்புகளுக்கு உதவிய நண்பர்கள் அனைவருக்கும் நன்றி***

1. ***திருச்சோற்றுத்துறை கல்வெட்டுகள்***- திரு. பாபு என்கிற ராமசாமி (நினைவில் வாழும்- கோ.இரவீந்திரன்
2. ***சின்னாரிப்பட்டி அய்யனார் சிற்பக் கல்வெட்டு*** - பேரா. எ.சுப்பராயலு, முனைவர் ர. பூங்குன்றன்
3. ***சேவூர் நடுகல்***- திரு.ஜெய்சங்கர், சிங்காநல்லூர் புலிக்குத்திக்கல்- தினமலர் செய்தியாளர் முகுந்தன்; தொண்டாமுத்தூர் வேட்டைக்காரசாமி புலிக்குத்திக்கல்- இராவணாபுரம் வடிவேலு
4. ***கோவை-சரவணம்பட்டி எழுத்துப்பொறிப்புக்கல்:*** ஆசிரியர் கிருஷ்ணகுமார்.
5. ***பெள்ளாதி பீரங்கிமேடு-புலிக்குத்திக்கல்:*** அன்னூர் பள்ளி முதல்வர் மகேஷ்குமார்
6. ***தேவாங்கர் செப்பேடுகள்:*** எஸ்.இராமச்சந்திரன், காப்பாட்சியர் (ஓய்வு),
7. ***பேளூர் கல்வெட்டு***- முனைவர் இராஜகோபால்
8. ***கணக்கம்பாளையம் கன்னடக் கல்வெட்டு*** - முனைவர் சுவாமி, மைசூர்
9. ***நீர்மூழ்கி குட்டை வட்டெழுத்து நடுகல்*** - முனைவர். ர. பூங்குன்றன், முனைவர். சு. இராசகோபால்
10. ***சிறுமலைக்கல்வெட்டு*** -முனைவர். சு. இராசகோபால்

# அஞ்சலி



திரு.வெள்ளையாம்பட்டு சுந்தரம்
தோற்றம்: 04-09-1933
மறைவு: 31-05-2017

**தொ**ல்லியல் கழகத்தின் உறுப்பினரும் தொல்லியல், கல்வெட்டியல், நாணய வியல், தமிழ்மொழி, கோயிற்கட்ட டக்கலை,சிற்பக்கலை,பிற கலைகள் ஆகியவற்றிற்கு முதன்மை அளித்து அத்துறைகளிலுள்ள அறிஞர்களையும் ஆர்வலர்களையும் ஊக்கப்படுத்தி நூல்களை வெளியிட்டு தமிழக வரலாற்றிற்கு புத்தொளி அளித்தவரும் சேகர் பதிப்பகத்தின் உரிமையாளர் மற்றும் பதிப்பாளருமான திரு வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்கள் மே திங்கள் 31 அன்று சென்னையில் இயற்கை எய்தினார். திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்கள் விழுப்புரம் மாவட்டம் செஞ்சிக்கருகில் வெள்ளையாம்பட்டு என்னும் ஊரில் பிறந்தவர்.

தமிழ் மொழி மீது ஏற்பட்ட பற்றால் சென்னையில் தமிழ் அறிஞர்கள் பலரிடம் பழகி திரைப்படத்துறையில் தமது இளமைக்காலத்தில் இணைந்து "மாலை இட்ட மங்கை" "சிவகங்கை சீமை" போன்ற திரைப்படங்களில் உதவி இயக்குநராகப் பணியாற்றி பதிப்புத்துறையில் 1963 ஆம் ஆண்டு தனது பங்களிப்பை சேகர் பதிப்பகம் வழியாகத் தொடங்கியவர். கடந்த 53 ஆண்டுகளாகத் தொடர்ந்து மேற்கண்ட துறைகளில் பல அரிய நூல்களை துறை சார்ந்த அறிஞர்கள் முதல் ஆர்வலர்கள் வரை ஆசிரியர்களாக்கி அழகு பார்த்தவர். இவரது பதிப்பகத்தில் வெளிவந்த நூல்கள் பல தமிழக அரசின் பரிசைப் பெற்றவை. ஆய்வாளர்கள் அனைவரிடமும் அன்பொழுக பழகும் பண்பாளர். தொல்லியல் ,கல்வெட்டியல், நாணயவியல் தொடர்பான இந்தியக் கருத்தரங்குகள் இந்தியாவில் எங்கு நடந்தாலும் நண்பர்கள் சூழ அக்கருத்தரங்குகளில் பங்குபெற்று தொல்லியலுக்கு ஊக்கம் அளித்தவர். தமது இறுதி மூச்சு வரை தமிழ்மொழிக்கும் தமிழர் பண்பாட்டு வரலாற்றிற்கும் தாம் நிறுவிய சேகர் பதிப்பகத்தின் வழியாகப் பெரும்பங்கை ஆற்றியவர். அவரது இழப்பு தொல்லியல் கழகத்திற்கு மட்டுமன்றி தமிழகத் தொல்லியலில் தடம் பதித்துள்ள அனைத்து பெருமக்களுக்கும் ஆர்வலர்களுக்கும் ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். அவரது இழப்பால் வாடும் அவரது குடும்பத்தாருக்கும் அவரது நண்பர்கள் குழுமத்திற்கும் தொல்லியல் கழகம் தமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

## அஞ்சலி



முனைவர்.கி.குமார்
தோற்றம்:11-02-1962
மறைவு: 27-09-2016

தமிழகத் தொல்லியல் கழகத்தின் உறுப்பினர் முனைவர் கி. குமார் கடந்த 27-09-2016 அன்று காலை சென்னையில் அகால மரணம் அடைந்தார். முனைவர் கி. குமார் அவர்கள் தனது பள்ளிக்கல்வியை வேலூர் மாவட்டம் வாலா ஜாப்பேட்டையிலும் இளங்கலைப் பட்டத்தை வேலூர் முத்துரங்கம் அரசினர் கலைக்கல்லூரியிலும் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் ஆகிய பட்டங்களை சென்னைப் பல்கலைக்கழக பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறையிலும் முனைவர் பட்ட ஆய்வினை தமிழ்ப் பல்கலைக்கழகத்திலும் பயின்றவர். தமது ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காகவும் முனைவர் பட்டத்திற்காகவும் வேலூர் மாவட்டத்திலும் அதன் சுற்றியுள்ள மாவட்டங்களிலும் தொடர்ந்து கள ஆய்வுகள் மேற்கொண்டவர். பழங்கற்காலம் முதல் வரலாற்றுக் காலத் தடயங்கள் வரை நூற்றுக்கும் மேற்பட்ட தொல்லியல் இடங்களைக் கண்டுபிடித்தவர். இவர் ஒரு சிறந்த தொல்லியல் கள ஆய்வாளர்.

தொல்லியல் மீது மிகுந்த ஈடுபாடுடைய இவர் தமிழ்நாடு அரசு தலைமைச் செயலகத்தில் உணவு மற்றும் கூட்டுறவுத்துறையில் சார்பு அலுவலராகப் பணியாற்றினார். விடுமுறை நாட்களில் கள ஆய்வுகளுக்குச் சென்று தமிழகத்தில் வரலாற்றுக்கு முற்பட்டகால இடங்களைக் கண்டுபிடித்து தொல்லியல் கழகத்தின் ஆய்விதழான ஆவணம் இதழ்களில் வெளியிட்டு வந்தவர். இவரது அகால மரணம் தொல்லியல் உலகிற்கு ஈடு செய்ய முடியாத இழப்பாகும். அவரை இழந்து வாடும் அவரது குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறது.

## அஞ்சலி



**சி.செல்வகுமார்**

**தோற்றம்: 09-03-1981**

**மறைவு: 12-09-2016**

திரு.சி.செல்வகுமார் தொல்லியல் கழகத்தின் இளம் உறுப்பினர்களில் ஒருவர். தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் மாணவராகவும் தமிழகத் தொல்லியல் துறையில் கரூர் அருங்காட்சியகத்தின் காப்பாட்சியராகவும் பணியாற்றிய இவர் சிறிது காலம் நோய்வாய்ப்பட்டு *12.09.2016* ஆம் ஆண்டு இயற்கை எய்தினார். துடிப்பான இளம் ஆய்வாளராக விளங்கிய திரு. செல்வகுமார் அவர்கள் தமது கல்லூரிக் கல்வியை ஈரோட்டிலுள்ள வாசவி கல்லூரியிலும் ஆய்வியல் நிறைஞர் பட்டத்தை தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையிலும் பயின்றவர். பேராசிரியர் சுப்பராயலு அவர்களின் தென்னிந்திய நிலப்பட ஆய்வுத்திட்டத்தில் பணியாற்றிய இவர் பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு மாணவராக பதிவு செய்திருந்தார். இவ்வாய்வுத்திட்டத்தின் வழியாக தமிழகத்தின் நூற்றுக்கும் மேற்பட்ட தொல்லியல் இடங்களைக் குறிப்பாக புலிமான்கோம்பை நடுகல் கல்வெட்டைக் கண்டுபிடித்தவர்களில் ஒருவராக விளங்கினார். இளம் துடிப்புடன் செயலாற்றிய திரு. செல்வகுமார் அவர்களை இழந்து வாடும் அவரது குடும்பத்தாருக்கும் அவரது நண்பர் குழுமத்திற்கும் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறது.

# கட்டுரையாளர்கள்

**அங்கமுத்து.மு**(768),இடைப்பாடி

**அப்துல் மஜித்.அ.,**சென்னை

**அருண்ராஜ்.பா**(675),தஞ்சாவூர்

**ஆறுமுகம்.மு**(548),வள்ளியூர்

**இரவி.ச**(246),கோயம்புத்தூர்

**இரவிக்குமார்.சு**(612),திருப்பூர்

**இரவீந்தரன்.கோ**(216),கோயம்புத்தூர்

**இராசவேலு.சு**(12),தஞ்சாவூர்

**இராஜேந்திரன்.கரு**(16),மேலப்பனையூர்

**இலெனின்.பெ**(294),செஞ்சி

**உதயகுமார்,ஆர்**(671),மதுரை

**உத்திராடம்.கோ**(286),சென்னை

**உமாபாரதி.ல**(806),சென்னை

**ஐராவதம் மகாதேவன்**(156),சென்னை

**கமலக்கண்ணன்.க**(122),நாமக்கல்

**கலாஸ்ரீதர்.த**(657),தஞ்சாவூர்

**கலைச்செல்வன்.வை.**(789),சேலம்

**கல்யாணி.டி**(90),சென்னை

**கவிதா.க.ஆ**(629),சென்னை

**கனகராஜ்.மு**(708),வடுகப்பட்டி

**காந்தி.மா**(139),வேலூர்

**காமாட்சி.த**(631),சென்னை

**கிருஷ்ணமூர்த்தி.ச**(234),சென்னை

**குழந்தைவேலன்.க**(160), சேலம்

**சண்முகம்.செ.வை,**சிதம்பரம்

**சதீஸ்குமார்.மு**(697),கிணத்துக்கடவு

**சத்யா.பி**(630),சென்னை

**சத்யா.மா**(704),புதுக்கோட்டை

**சந்திரபோஸ்.அ**(114),புதுக்கோட்டை

**சந்திரமூர்த்தி.மா**(91),சென்னை

**சந்திரவாணன்.சொ**(43),இராசபாளையம்

**சாந்தலிங்கம்.சொ**(10) ,மதுரை

**சீனிவாசன்.கே**(746),சேலம்

**சுகவனமுருகன்**(250), காவேரிப்பட்டனம்

**சுந்தரம்.து**(556),கோயம்புத்தூர்

**சுப்பராயலு.எ**(1).கோயம்புத்தூர்

**செந்தில்வேலன்.ஜெ**(810),மகாதானபுரம்

**செந்தீ நடராஜன்**(300) நாகர்கோவில்

**தியாகராஜன்.இல**(327) அரியலூர்

**திருநீலகண்டன்.ஆ**(236), இலஞ்சி

**திருமூர்த்தி.கோ**(93) சென்னை

**பவானி.மா**(256),தஞ்சாவூர்

**பன்னீர்செல்வம்.க**(168),சென்னை

**பாண்டீஸ்வரன்.த**(700)போடிநாயக்கனூர்

**பாண்டுரங்கன்.வெ**(406),கீழ்கல்பூண்டி

**பாபு.கு**(559),புதுச்சேரி

**பாலமுருகன்.ச**(709), தேவிகாபுரம்

**பாலாஜி.ப.தெ**(137),சென்னை

**பால்துரை.கு**(632) புதுச்சேரி

**பிச்சைப்பிள்ளை.கூ**(401), விழுப்பரம்

**பிரசன்னா.மோ**(441), சென்னை

**பூபாலன்.ப**(230),இராணிப்பேட்டை

**பெருமாள்**(831),சேலம்

**பெருமாள்.அ.கா**(542),நாகர்கோவில்

**பொன்னம்பலம்,**(757),சேலம்

**பொன்னுசாமி.க**(776),பல்லடம்

**மங்கையற்கரசி ராகவன்.வீ**(57),விழுப்புரம்

**மதிவாணன்.கோ**(525),தஞ்சாவூர்

**மாணிக்கராஜ்.சி**(569),போடிநாயக்கனூர்

**மாரியப்பன்.பா**(340),அரிமளம்

**மாலதி.கி**(718),கோயம்புத்தூர்

**ரங்கநாதன்.த**(648),விழுப்புரம்

**ரமேஷ்.த**(647),முண்டியம்பாக்கம்

**ரமேஷ்குமார்.ச.மு**(508),அவிநாசி

**ராஜா.ஆ**(480),தஞ்சாவூர்

**ராஜாமுகமது.ஜெ**(116),புதுக்கோட்டை

**ருக்மாங்கதன்,.ஆர்**(784),மதுரை

**வள்ளி சொக்கலிங்கம்**(531),காரைக்குடி

**விஜயவேணுகோபால்,கோ**(48)புதுச்சேரி,

**வீரராகவன்.சி**(447),விழுப்புரம்

**வெங்கடேசன்.பொன்**(719), ஆரகளூர்

**வேலாயுதராஜா.ப**(676),பூலாங்குறிச்சி

**ஜெயசங்கர்**(444), அவிநாசி

**ஜெயராமன்.இர**(63),தஞ்சாவூர்.

**ஜோதீஸ்வரன்.பி**(660),சென்னை

**ஸ்ரீதர்.சி**(444),புதுச்சேரி

# Tamilnadu Archaeological Society Thanjavur - 613010

## RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2017

| Receipts | Amount | Payments | Amount |
|---|---|---|---|
| To Opening Balance | | Courier & Postage | 8,759 |
| Cash in hand | 7,529 | Stationery | 5,031 |
| Cash at Bank | | Xerox | 98 |
| Indian bank | 7,997 | Printing Charges | 86,500 |
| SBI | 1,129 | Salary | 15,000 |
| BO1 | 2,229 | Audit Fees | 1,500 |
| Book Sales | 10,315 | Honorarium | 10,000 |
| Membership Fees | 114,000 | Frieght Charges | 3,340 |
| Donation | 50,000 | Travelling Expenses | 16,796 |
| Interest | 27,407 | Sundries | 888 |
| Annual Membership Fees | 1,000 | Bank FD Commission | 82 |
| | | Fixed Deposit | 72,000 |
| Grant (ICHR Newdelhi) | 32,000 | Closing Balance | |
| | | Indian Bank- (529) | 1,528 |
| | | BOl - (442) | 11,477 |
| | | SBI - (159) | 5,726 |
| | | Cash in Hand | 14,881 |
| Total | 253,606 | Total | 253,606 |

## Tamilnadu Archaeological Society Thanjavur - 613010

**INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2017**

| | | | | |
|---|---|---|---|---|
| To | Courier & Postage | 8,759 | Book Sales | 10,315 |
| | Stationery | 5,031 | Membership Fees | 114,000 |
| | Xerox | 98 | Donations | 50,000 |
| | Printing Charges | 86,500 | Interest | 27,407 |
| | Salary | 15,000 | Annual Membership Fees | 1,000 |
| | Audit Fees | 1,500 | Grant (ICHR Newdelhi) | 32,000 |
| | Honorarium | 10,000 | | |
| | Freight Charges | 3,340 | | |
| | Travelling Expenses | 16,796 | | |
| | Sundries | 888 | | |
| | Bank FD Commission | 82 | | |
| | Excess of Income over Expenditure | 86,728 | | |
| | TOTAL | 234,722 | TOTAL | 234,722 |

## Tamilnadu Archaeological Society Thanjavur - 613010

## Balance Sheet as on 31.03.2017

| LIABILITIES | AMOUNT | ASSETS | AMOUNT |
|---|---|---|---|
| Fund A/c | 704,312 | Furniture Stand | |
| | | Cupboard | 18,700 |
| | | Fixed Deposit | 652,000 |
| | | Indian Bank | 1,528 |
| | | BOl | 11,477 |
| | | SBI | 5,726 |
| Total | | Cash in Hand | 14,881 |
| | 704,312 | Total | 704312 |

